AHB. L49/75

# அகத்தியர் பள்ளு இருநூறு





அருள்மிகு

பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

வநூல் வெளியீட்டுக்குழு

1975

LC
N75

113869

முதற் பதிப்பு: 1905ஆம் ஆண்டு

இரண்டாம் பதிப்பு: 1975ஆம் ஆண்டு




உரிமை :

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழு,

இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலகம்,

சென்னை - 600029.

LC
N75

அச்சிட்டோர் :

அன்புச்செல்வி அச்சகம்,

எண்: 14, ராகவையா சாலை,

தியாகராயநகர், சென்னை-600017.

வெளியீட்டுத் தொடர் எண்: 13.

# அகத்தியர் பள்ளு இருநூறு

பொழிப்புரை ஆசிரியர்:

ஹக்கீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர்கள்



COMPLIMENTARY

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினருக்காக
கௌரவத் தலைவர்
டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
அவர்களால் பதிப்பிக்கப்பெற்று
தமிழ்நாடு அரசுக்கு நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

கி. பி. 1975. [விலை ரூ.

# அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

## அறங்காவலர் குழு

திரு. கு. சின்னப்பன், தலைவர், அறங்காவலர் குழு

திரு. அ. தமிழரசு — அறங்காவலர்

திரு. இரா. சின்னதுரை — ,,

திரு. புலவர் சி. பழனிச்சாமி எம். எல். ஏ., — ,,

திரு. ஏ. பச்சையப்ப கவுண்டர் — ,,

இரா. அருச்சுனன், பி. ஏ.,
துணை ஆணையர்—நிருவாக அதிகாரி

# அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

## சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழு

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பு அலுவலர்,
சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையம்,
சென்னை-600029. ... தலைவர்

டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ மத்திய கழகம்,
சென்னை-600005. ... பொருளாளர்

திரு. கு. சின்னப்பன், தலைவர், அறங்காவலர் குழு
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில், பழநி. ... உறுப்பினர்

டாக்டர் ப. சிற்சபை, ஆர்.ஐ.எம்.பி.,
இந்திய மருத்துவ மத்திய கழகம்,
சென்னை-600005. ... துணைத் தலைவர்

திரு. இரா. அருச்சுனன், பி. ஏ.,
நிருவாக அதிகாரி, அருள்மிகு
தண்டாயுதபாணிசுவாமி திருக்கோயில், பழநி. ... உறுப்பினர்

டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600029. ... சிறப்பு அழைப்பினர்

# சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு

## உறுப்பினர்கள்

1. டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பு அலுவலர்.
சித்த மருத்துவ மைய ஆய்வு நிலையம்,
சென்னை-600029. ... தலைவர்

2. டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இயக்குநர், இந்திய மருத்துவத்துறை, உறுப்பினர்
சென்னை-600029. ... செயலர்

3. டாக்டர் சி. எஸ். உத்தமராயன், எச். பி. ஐ. எம்.,
முன்னாள் இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600005. ... உறுப்பினர்

4. டாக்டர் எம். சண்முகவேலு, எச். பி. ஐ. எம்.,
முன்னாள் மருத்துவப் பேராசிரியர்,
இராமநாதபுரம். ,,

5. டாக்டர் கே. இராதாகிருஷ்ணன், எல். ஐ. எம்.,
மருத்துவ அலுவலர்,
ஊராட்சி ஒன்றிய மருந்தகம்,
காவேரிப்பாக்கம், வட ஆர்க்காடு. ,,

6. டாக்டர் ஏ. சிறில் ஹென்றி, எல். ஐ. எம்.,
ஓய்வுபெற்ற மருத்துவ அலுவலர்,
நகராட்சி மருந்தகம், திருச்சி. ,,

7. டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ மத்திய கழகம்,
சென்னை-600005. ,,

8. டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம். பி.,
துணைத் தலைவர்,
இந்திய மருத்துவ மத்திய கழகம்,
சென்னை-600005. ... உறுப்பினர்

9. பண்டிட் பெ. முத்துக்கருப்பப்பிள்ளை, ஆர்.ஐ.எம்.பி.,
தலைவர்,
சித்த மருத்துவ சங்கம், மதுரை. ,,

10. டாக்டர் டி. வி. கல்யாணசுந்தரம், ஆர். ஐ. எம். பி.,
தலைவர், சென்டிரல் சித்தா மெடிக்கல் கவுன்சில்,
சென்னை-600012. ,,

11. டாக்டர் என். சேதுரகுநாதன்,
தமிழ்ப் பேராசிரியர், விருதுநகர். ,,

12. திரு. நீ. கந்தசாமிப்பிள்ளை,
முன்னாள் செயலர்,
சரசுவதி மகால் நூலகம், தஞ்சை. ,,

## சிறப்பு அழைப்பினர்கள்

1. டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி.ஏ., ஜி.சி.ஐ.எம்.,
முதல்வர், அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

2. டாக்டர் மு. வே. ரமணன், எல்.ஐ.எம்.,
பேராசிரியர், மேல் பட்டப் படிப்பு,
அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

3. டாக்டர் டி. வி. சுப்பா ரெட்டி, கௌரவ இயக்குநர்,
இந்திய மருத்துவ வரலாற்று ஆராய்ச்சி நிலையம்,
ஐதராபாத்.

4. டாக்டர் இரத்தினவேலு சுப்பிரமணியம் பி.எஸ்ஸி.,
எம்.டி., எம்.ஆர்.சி.பி. (லண்டன்),
சென்னை-600010.

———




மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

மாண்புமிகு

பேராசிரியர் **க. அன்பழகன்,** எம். ஏ., அவர்கள்

அளித்த

# அணிந்துரை

முன்தோன்றிய—மூவா முதன்மொழியாம் தமிழுடனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த—சித்த மருத்துவத்தின் தன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்து விடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலும் சித்த மருத்துவம் இன்றும் பலரால்—வழி வழியாகவும் கற்றறிந்தும்—கையாளப்பட்டு வரினும் அதன் சிறப்பும் புகழும் நிலை பெறுதற்கு நாம் ஆற்ற வேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும்—இத்துறை வல்லுநர்களின் முயற்சியாலும்—மருத்துவ முறைகளுள் சித்த மருத்துவமும் இடம் பெற்று வளருகிறது. எனினும், அதன் தனிச் சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொள்ளுமாறு ஆய்வுகள் மூலம் நிலைநிறுத்தப்பட்டாக வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொண்டு செயற்பட வேண்டும். அந்த நிலை உருவாவதற்கு—ஓலைச் சுவடிகளாகவும்—ஒருகாலத்தில் அச்சேறியும் இன்று கிடைத்தற்கரிதாகவும் உள்ள நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள்—உடனடியாகப் பதிப்பிக்கப்பட வேண்டும். இவை வெளி வந்தால்தான், இன்று சித்த மருத்துவம் பயிலும் மாண

வரும், இளம் மருத்துவரும், அவற்றைப் பயின்று பயன் பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்புநோக்கி உண்மை தெளியவும், மருந்துகளின் தரத்தை உறுதிப் படுத்தவும், அரிய மூலப் பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பல மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும்; பரவலாக எங்கும் எளிதில் கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகட்கு ஈடு கொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்த மருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டும் என்னும் எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங் காவல் குழுவினரும்—அதன் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும்—இதற்காக இரண்டு இலட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன்வந்ததுடன் சித்த மருத்துவ நூல் வெளி யீட்டுக்கென டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்., அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல்படுத்தலாயினர்.

இக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் ஆர்வத்து டன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும்—பல்வேறு வகை யிலும் அவர்கட்குத் துணை நிற்போர் ஆற்றும் பணியும்—இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களின் இயக்குவித்திடும் திறனும் எனது பாராட்டுக்குரியனவாகும்.

பழநி திருக்கோயில் அறங்காவலர் குழுவினருக்கும் அக்குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியவாகும்.

இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந் தெடுக்கப்பெற்று 13-ம் வெளியீடான நூலே அகத்தியர் பள்ளு என்பதாம். இன்று கிடைக்காத பதிப்பாக உள்ள இந்த மருத்துவக் களஞ்சியம் வெளிவருவது மிகுந்த பயன் தர வல்லதாகும்.

இந்நூலின் பொழிப்புரை ஆசிரியர்—சித்த மருத்துவ வல்லுநர் ஹக்கீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர் கள்—இளமை முதலே—தமது முன்னோர்தம் மருத்துவக்

கலையைப் பொன்னே போல் போற்றிப் பயின்று தொடர்ந்து பல ஆண்டுகள் பாடுபட்டுப் பயன்படுத்தித் தேர்ந்து, தெளிந்து—உலகோர்க்குப் பயன்படவேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் அரிய சித்த மருத்துவ நூல்கள் பலவற்றை இயற்றி வெளியிட்டுள்ளார். இச் செயல்களின் பெருமை அவரையே சாரும்.

மறைபொருளாய்ப் பேணப்பட்டு அதனாலேயே உருவழிந்து மறைந்து போவதற்கு ஆளாகிவிட்ட சித்த மருத்துவ உண்மைகள்—இருட்டறையிலிருந்து வெளிக் கொணரப்பட்டு—ஒளி காண்பதற்கு வழிகண்ட வல்லு நரில் அவர் தலைசிறந்தவர் என்றால் மிகையாகாது.

தெளிவுடனும், துணிவுடனும், அறிவுடனும், ஆற்ற லுடனும், நெறியுடனும், பொறுப்புடனும் எளிய இனிய தமிழில்—இத்தனை நூல்களை இயற்றியமைக்கு, சித்த மருத்துவ உலகம்—ஹக்கீம் அப்துல்லா அவர்கட்கு எந் நாளும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்.

அவர் இயற்றிய **அனுபோக வைத்திய நவநீதம்** முதற்பாகத்தின் முகவுரையே சித்த மருத்துவத்தின் அக்கால நிலைமை விளக்கமாகவும், நம்மவர் கடமையை எடுத்துக் காட்டுவதாகவும் அமைந்துள்ளதைக் காண்க.

''மிகக்கொடிய நோய்களையும், அறத்தீர்க்கும் பற்பம் செந்தூரமாகிய முறைகள், நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பது போல மற்ற மருத்துவத்தில் இல்லையென'' நமது மருத்துவ நூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்து வர்கள் மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிறார்கள். ஆங்கில மருத்துவம் நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறப் புள்ளவர்களான சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது:

> ''அறுவை செய்தல் முதலிய இரண மருத்து வத்தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்கால சாந்தியாகச் செய்வதிலும் ஆங்கில வைத் தியமே அதிகம் சிறந்தது; ஆனால், நாட்பட்ட நோய்களையும் பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய்நோய், பாண்டு, மந்தாக் கினி, மேகம், தாது இழப்பு முதலிய கடின நோய் களையும் அறத்தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ

முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரமமாகச் செய்யப்பட்ட பற்ப செந்தூரங் களே மிக மேன்மை பெற்றவை'' என்பதே.

இந்த அபிப்பிராயமானது மிகவும் சரியானதெனவும் உத்தமமானதெனவும் அதிகம் வாய்மையானதெனவும் சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமனத் தோடு ஏற்றுக் கொள்வார்கள்.

இக்கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறை யில் செயல்படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்க வேண்டும் என்பதே எனது பேரவா.

இந்த உயர்ந்த நோக்கத்துக்கு உறுதுணையாகு மாறு—மருந்து செய்முறைகளை—அரிய நூல் வடிவத்தில் வழங்கிச் சென்ற—ஹக்கீம் பா. மு. அப்துல்லா சாயபு அவர்களின் தொண்டு,

''செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்''

என்னும், குறள் கூறும் பெரியருக்குச் சிறந்த ஓர் எடுத்துக்காட்டு ஆகும்.

இந்த நூல்களின் வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோரை ஊக்கப் படுத்துவதற்குத் துணை செய்வதாகும் என நம்புகிறேன். அவர்தம் முயற்சி வளர வாழ்த்துகின்றேன்.

சென்னை,
20-3-1975. க. அன்பழகன்

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ்மொழி; அதுபோல் தமிழ் மருத்துவ முறையும் தொன்மையதே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர்கள் சித்தர்கள். ஆகையால், இம்மருத்துவத்திற்குச் சித்த மருத்துவம் என்று பெயர் அமையலாயிற்று. அச்சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும், மருந்து சரக்குகளின் குணம் முதலானவைகளையும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும் பற்பல ஏடுகளில் பதிவு செய்தும், உலகோர்க்கு உதவி செய்து தம் மருத்துவ முறைகளைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின்—நிலநடுக்கம் கடற்கோள்—போன்ற சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படையெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக எஞ்சியவைகளில் சில மேலைநாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன வெனக் கூறப்படுகிறது. இன்னும், எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம்மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயிலாகவும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படை உண்மை, தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலை பெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக் காலத்தில் சித்த, ஆயுர்வேத, யூனானி மருத்துவ ஏடுகள் எல்லாம் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் அரியணை ஏறின. மருத்துவப் புலவர்களும் அவர்கள் அனுபவங்களும் ஏடுகளில் ஏறி ஏற்றமுற்றன. மருத்துவம் செய்முறையும், பிணித்தீர்வும் அவர் ஏற்படுத்திய தன்வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவுகொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்துவரலாயிற்று.

மிக அண்மையில் வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சிச் சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பானகல் அரசர் 1924இல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்து, பல கிராம மருத்துவமனைகளையும் அமைத்து இயங்கச் செய்து, சித்த மருத்துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றினர். அக்காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத் திட்டப்படி கற்பிக்கப்

போதிய பாடப் புத்தகங்களும் முதல் (மூல) நூல்களும் இல்லாக் குறையை ஓர்ந்து, பாடப் புத்தக ஆக்கக் குழுவை அரசு அமைத்தது. அந்நாள் சித்த மருத்துவத்துறை தலைமை ஆசிரியராய் இருந்த பண்டிட், வைத்தியரத்னம், மருத்துவ சிரோன்மணி காலஞ் சென்ற க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும், நூலைத் தன் சொந்த முயற்சியால் இயற்றி அரசினர்க்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசுவழி வெளியிட்ட நஞ்சு நூல், பாலவாகடம் என்ற நூல்களைப் பார்வையிட்டும் உதவினர். அக்குழுவினர் நூற்றுக்கு மேற்பட்ட மருத்துவச் சுவடிகளையும் அச்சிட்ட நூல்களையும் சேகரித்து ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தினர்.

மேற்படி பள்ளி, கல்லூரியாக மிளிர்ந்தபோது, அந்நாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950 இல் சித்த மருத்துவம், மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), தாது சீவ வகுப்பு என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்துவந்த கல்லூரி விரிவுரையாளர்களைக் கொண்டு எழுதுவித்து அரசுவழி வெளியிடப்பெற்றன.

அக்கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர், பாளையங்கோட்டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூட பாடநூல்கள் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்து வருவதாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளையும், கையேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாடநூல்கள் வெளியிடவும் ஆகியபணிகள் செய்ய (பார்மகோபியா கமிட்டி 1966 ஜி.ஓ.எம்.எஸ். எண்: 2163 நாள் 23-8-60) ஒரு குழுவும், சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாடநூற் குழு என்று (ஜி.ஓ.எம்.எஸ். எண் 1060, சுகாதாரம், நாள் 13-6-66) ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதிகளை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருததுவம் என்ற நூல்கள் வெளிவந்தன.

மீண்டும் விரைவில் பயன்காண வேண்டி 1973ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்துச் சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு என்னும் ஒரு குழுவை அரசு ஆணைப்படி (ஜி.ஓ.எம்.எஸ். எண்:

2571. நாள் 23-10-73) தோற்றுவித்தார்கள். அக்குழுவின் பணிகளாவன; சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச்சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி முதலியவைகளை எடுத்து அச்சியற்றி வெளியிடல்; ஒரு முறை அச்சில் வெளிவந்து விற்பனையில் கிடைக்கப்பெருத நூல்களை மீண்டும் வெளியிடல்; இதுவரை அச்சிடப்பெருத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக்குழுவினர் இதுவரை 400 சுவடிகளையும், 100 கையெழுத்துப் படிகளையும், 230 அச்சான பழைய நூல்களையும் சேகரித்துள்ளனர்.

இக்குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செயலாற்ற இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலகத்தில் ஒரு தனி அலுவலரையும் அவருக்கு உதவியாளர்களையும் நியமித்துள்ளனர். அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்தும், அச்சியற்றத்தக்க வகையில் செப்பம் செய்தும் வருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியிலிருந்து சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்கென்று ஒதுக்கப்பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக் கொண்டு மேற்படி நூல்களை நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகு விரைவில் வெளியிட மேற்படி சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழுவிலுள்ள சில உறுப்பினர்களுடன் அருள்மிகு பழநி தண்டாயுதபாணிசுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத்தலைவர் உயர்திரு பு.மனோகரன் அவர்களையும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியையும் உறுப்பினராகக் கொண்டு அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக்குழு முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில் 13ஆம் நூலாக **அகத்தியர் பள்ளு** என்னும் இந்நூல் வெளியிடப்படுகிறது. மேற்படி நூலின் பொழிப்புரை ஆசிரியர் ஹக்கீம் பா. முகம்மது அப்துல்லாசாயபு ஆவார். இவர் சென்னை, ஜார்ஜ் டவுன், அப்பு மேஸ்திரி தெருவில் 12ஆம் எண்ணுள்ள வீட்டில் வாழ்ந்தார். இவர் தஞ்சை மன்னர் சரபோஜி தன்வந்திரி மகாலை அலங்கரித்த மருத்துவர் ஒருவரின் வழித்தோன்றல் ஆவார். இவர் பரம்பரை மருத்துவர். சித்த, யூனனி ஆகிய இருமுறைகளிலும் கைபாகம், செய்பாகம், நோய்த்தீர்வு முதலிய எல்லாக் கலைகளிலும் மிக்கத் தேர்ச்சி பெற்றவர். இவர் தனக்குச் சொந்தமாக மருத்துவமனையும், மருந்து செய்சாலையும், அச்சகமும் நடத்தி வந்தார்.

இவர் கடவுள் நம்பிக்கை, பிறர் நலம் பேணல், கொடை, பரிவு ஆகிய நற்பண்புகள் நிறைந்தவர். சர். உஸ்மான் சாயபு அவர்களின் நெருங்கிய உறவினராவர்.

இவர் ஐம்பதுக்கும் மேற்பட்ட மருத்துவ நூல்களை உரை நடையில் இயற்றி வெளியிட்டதுடன், தேரையர் யமகம், தேரையர் கரிசல், அகத்தியர் இலக்க செளமிய சாகரம் அகத்தியர் மகா திராவகம் போன்ற முதல் (மூல) நூல்களையும் வெளியிட்டுள்ளார். இவருக்குப்பின் இவரது நூல்களை மறுமுறை பதுப்பித்து வெளியீடுவோர் இன்மையால் அவை கிட்டுவது அரிதாயிற்று.

ஆகவே, இவரது பொழிப்புரையில் முன் பதிப்பிலிருந்த தமிழ் இலக்கங்களை நீக்கி ஆங்கில இலக்கங்களாக மாற்றி பழைய எடுத்தலளவைக்குச் சரியான மெட்ரிக் எடையை இணைத்துப் பிழைகளைத் திருத்தம் செய்து வெளியிடப்படுகிறது. இந்த நூலின் பெருமை அவைகளைக் கற்று மருந்துழைச் செல்வார்க்கு மிக நன்ருக விளங்கும். இந்த நூலின் பழைய முகவுரையின் வாயிலாக இதன் மேன்மை தெரிய வரும்.

மேற்கண்ட அரிய நூலின் வெளியீட்டுப் பணிக்குப் பெருந் தொகை தேவைப்படுவதால் இப்பெரும் பணியை விரைவில் செயல்படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் உயர்திரு. க. அன்பழகன், எம். ஏ., அவர்கள் பேரார்வங்கொண்டு மேற்படி பணி, முட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார். மேலும், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர்குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படி திருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு லட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்தமையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடி தந்தமையும், காலஞ்சென்ற திரு. டாக்டர் ஜி. டி. நாயுடு அவர்களைக் கொண்டு காலஞ்சென்ற திரு. டி. வி. சாம்பசிவம் பிள்ளையவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதியின் முதல் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல்களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமையையும், அமைச்சர் பெருமகனர் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழு மனத்துடன் ஆற்றிவரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப்

பெருமிதமடையலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்கள் தமக்குள்ள பற்பல அறப்பணிகட்கிடையேயும் இக்குழுவின் கூட்டங்களில் பங்கு கொண்டும், நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறைகளையும், ஆலோசனைகளையும், வழங்கி வெளியீட்டுப்பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குதடையின்றி, நூல்கள் வெளிவர மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங்காவலர் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்த மருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்றுவிக்க உடன்பட்டமைக்கும், சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலகமொன்றை நிறுவக் கட்டடம் கட்டித்தர முயன்று வருகின்றமைக்கும் இக்குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து ஒத்துழைத்துவரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியாகிய உயர்திரு. வி. எஸ். கோதண்டபாணி, பி.எஸ்ஸி., அவர்களுக்கும் இப் பணிகள் நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்துவரும் இந்துசமய அறநிலையப் பாதுகாப்புத் தலைவர் உயர்திரு. கே. எஸ். நரசிம்மன், ஐ. ஏ. எஸ்., அவர்களுக்கும் இக்குழுவினரின் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

இக்குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும் பிற வசதிகளும் தம் அலுவலகத்தின் ஒரு பகுதியில் கொடுத்துப் பணி இடையூறின்றி நடைபெற வேண்டிய ஆலோசனைகளும் ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அடக்க விலையில், அச்சடிக்கும் தாள்களை சேஷசாயி பேப்பர் மில்சின் உரிமையாளரிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக்குழு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளது.

மற்றும், இந்நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், அச்சுப்படிகளைத் திருத்தம் செய்

தும் இக்குழுவுக்குத் துணை புரிந்துவரும் தனி அலுவலர் டாக்டர் வி. விசுவநாதன், எல். ஐ. எம்.. அவர்களையும் அன்னாருக்குத் துணைபுரிந்துவரும் புலவர்கள் திரு. மு. சௌரிராசன், வீ. செ. விநாயகம், வை. முரு. முத்துக்குமாரசாமி ஆகியவர்களையும் குழு மனமுவந்து பாராட்டுகிறது.

மேற்கண்ட பணிக்குத் தேவையான இந்நூலைக் கொடுத்து உதவிய சித்தமருத்துவர் திரு. மு. சௌரிராசன் அவர்களுக்கு இக்குழுவின் சார்பில் நன்றி கூறப்படுகிறது.

இந்நூலைக் குறுகிய காலத்தில் அழகியமுறையில் அச்சியற்றிய அன்புச்செல்வி அச்சகத்தாரின் சேவைக்கு இக்குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சான்றோர் மிகுந்த இவ்வுலகு, இந்நூலில், காணும் குற்றங் கண்டு முனியாது, நனியாதரவு தந்து எம்மை ஊக்குவிக்குமென்ற துணிவுடன் இந்நூல்களை வெளியிடுகின்றனம்.

**டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,**
தலைவர்,

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில் சித்த மருத்துவ நூல்
வெளியீட்டுக்குழு.

*இந்திய மருத்துவத்துறை*
*இயக்குநர் அலுவலகம்,*
*சென்னை-600029.*

# பொருளடக்கம்

அகத்திய முனிவர் அருளிச்செய்த

# பள்ளு இருநூறு

---

### இறை வணக்கம்

ஆதியென்ற சிவனுடைய பாதம் போற்றி
அருள்ஞான வேதியர்தம் பாதம் போற்றி
சோதியணி குண்டலிக்குள் வாழுஞ் சத்தி
தும்பிமதக் களிறுடைய பாதம் போற்றி
நீதியுடன் பாடிவைத்த சாத்தி ரத்தி
னிலையான வாயிரத்தி யறுநூற் றுக்குள்
ஓதியே யாராய்ந்து பள்ளு நூறு
முவந்துமே வயித்தியத்துக் குரைசெய் தேனே. 1

ஆதிமுனி தானுரைத்த பள்ளு தன்னி
லன்பாக வயித்தியநூ லாய்ந்து சொல்லிக்
கோதில்லா வாதமது நூறு பாட்டாக்
கொட்டினேன் செந்தூரங் களங்கு சுண்ணம்
பாதிசேர் பாகமது தயிலப் போக்கும்
பண்பான புகையோடு மாக்கிரா ணந்தான்
வாதியா யிதையறிந்து செய்து கொண்டால்
வகையான வுலகத்தில் ஞானி யாவீர். 2

### கொச்சகக் கலிப்பா

மேவுங் கடல்சூழு மிக்க பொதிகைவளர்
காவு தமிழ்முனிவர் கருத்தி லுகந்ததுகாண்
தாவுரச வாதந் தாழ்ச்சிவ ராதபடி
ஆவலாக் கைபாக மடைவாகச் சொல்லுவன்காண். 3

பாகமாய்ப் பார்த்துப் பதிய ரசமிறக்கி
யோகமாச் செய்தே யுறுதிரச வாதியர்கேள்
வாகமதை யெல்லாம் வடிவாகத் தான்சுருக்கித்
தாகமா யிருநூற்றிற் சாற்றினன்பார் வாதிகளே. 4

---

### தோடையம்

ஏர்பொருந்திய சீரருந்துய
ரேற்குமருள்நெறி காக்குமாம
ஏற்கும்வளர்கிரி துதிக்குமாமுனி
பிணிக்கவுடதம் படிக்கவே
பருத்தரசவொழி யருத்தும்வெளியொளி
திருத்தியொளிதரு பள்ளிசேர்
மறைக்குள்நாயகர் எவர்க்குநாயகர்
மனத்துள்வண்மையைப் படைக்கவே

ஆதிமறைமுனி நீதிபலநூலுஞ்
சோதியருளுடன் பாடினர்
அனைத்துமனதினி னினைத்தபடியரு
ளனைத்தும்வருமுயிர் கருத்துளே
நீலகுங்கும வாசரென்குரு
நீதியந்திர சோதியாம்
நினைக்குமிரசவாத பனைத்தும்வருகவே
திருக்கைவேல் பதந்துதிக்கவே. 5

### காப்பு

காருலவும் பொதிகைவளர் கவிகள்பொழி
மாமுனிவர் கருணை கூர்ந்து
பேருலகிற் பண்டிதர்கள் பிழைக்குமருந்
தின்வாதம் பெருமை சொல்லித்
தாருலகில் ரசவாதம் பொன்செய்யும்
பாகமுதற் றடையில் லாமல்
வாருலகிற் பள்ளுஇரு நூறுசொச்சங்
கவியாக வாழ்த்தி னேனே. 6

### 1. புண்ணுக்குத் திரி

திருமால்தேவி கௌரிவெள்ளை
சித்திரமூலந் துத்தமுஞ்
சேருந்துருசி யூருநாகங்
கணமுங்கண்டங் கத்திரி
தருவமுதலை சூதமோடு
கெந்தியுடனே விந்தையாய்
வாராய்முந்திரிப் பழமுந்தேசிச்
சீராய்ப்பழத்தின் சாற்றிலே
வெருகவரைத்துத் திரியிலூட்டி
வெண்பொற்பசுவி னெய்விட்டு
மிகும்பகம்புண்ணி லதனையும்வைத்து
மிகுதிரியனல் கொளுத்திட

அருகமூன்றரை நாட்கழித்தபின்
னருகாயொளிரும் வியாதியை
யாருமறிய நீராமுலகி
லறியச்சொல்வோம் பள்ளீரே. 7

பள்ளீரஞ்சரை நாளிற்கோட்டை
வெந்நீர்வார்த்து முழுகிடில்
பாரண்டமதி லேரண்டத்தெண்ணெய்
பத்தாநாள்வயல் நடவிலே
கள்ளிக்கிரந்தி புத்தனையமு
கண்ணிலிங்கப் புத்தனைக்
கால்முடக்கனைக் கைமுடக்கனைக்
கரப்பனையரை யாப்பனை
வெள்ளைலிங்கப் புத்தனைவெளி
யுள்ளுலிங்கப் புத்தனை
விளங்குப்புள்ளி யுளப்பியடித்த
விதத்தைப்பாரு சினத்திலே
வெள்ளைப்பொதிகை யகத்தியமுனி
உள்ளதறிவி லுதித்தது
மிகுந்தசாத்திரப் புகையின்மகிமை
கைகண்டசாத்திரம் பள்ளீரே. 8

தூய்மைசெய்த பொன்னரிதாரம், கவுரிப்பாடாணம், வெள்ளைப்பாடாணம், துத்தம், துருசு, இரசம், கெந்தகம், சித்திரமூலவேர்ப்பட்டைத்தூள், உலர்த்தின நாகத்தின் சதைத்தூள். கண்டங்திப்பிலித்தூள், கண்டங்கத்திரி சமூலத்தூள், முள்கத்திரிக்காய்த் தூள், திராட்சைப்பழம் இவை வகைக்கு 2 வராகனெடை (7 கிராம்), எலுமிச்சம்பழச் சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:-** இரசத்தையும் கெந்தகத்தையும் சேர்த்து நன்ருகக் கறுக்கிறவரையிலரைத்துத் தனியேஎடுத்து வைத்துக்கொள்ளவும்; மற்றச் சரக்குகளையும் தனித்தனியேப் பொடித்துக்கொள்ள வேண்டும். பிறகு, எல்லாவற்றையும் ஒன்ருகக்கலந்து ஒரு சாமம் அரைத்து இரண்டு விரல் அகலம் நான்கு அங்குல நீளமுள்ள வெள்ளைத் துண்டுகளிற் பரப்பித் திரிகளாகச்செய்து வைத்துக் கொள்ளவேண்டும். இந்தத் திரியிலொன்றை எடுத்துப் பசுவின்நெய்யில் நனைத்துக்கொளுத்திப் புண்களிற் படும்படியாகப் புகைகாட்ட வேண்டும். இவ்விதம், ஏழுபொழுது மூன்றரைநாள்செய்து மூன்றரைநாள் மறுபத்தியமிருந்து எட்டாம்நாள் விளக்கெண்ணெய் தேய்த்துத் தலைமுழுகச் செய்யவேண்டும்.

**தீரும்நோய்கள்:-** கள்ளிப்பூக்கிரந்தி, லிங்கப்புற்று, அல்குல் புற்று, கால்முடக்கு, கைமுடக்கு, கரப்பான் நோய், அரையாப்பு, அல்குலுள் இரணம், லிங்க உள்விரணம் முதலியவைகள் தீரும்.

**மருத்துணவு:-** நோய்வலிமை, உடல்வலிமை ஆகியவைகளுக்குத் தகுந்தபடி புளி, புகை, புணர்ச்சி ஆகியவைகளை நீக்கிவைக்க வேண்டும். உப்பைவறுத்துச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

## 2. கழிச்சல் மாத்திரை

பச்சையிரத நாறுகெந்தி
பகர்ந்ததாரமு மிருவேலி
பாரிலுயர் வெண்காரங்கடுக்காய்
பசிந்தநெல்லி தான்றிக்காய்
இச்சையதிக சுக்குமிளகு
இனியதிப்பிலி சரியதா
யெடுத்திங்கிதற்குப் பாதிவாள
மிணங்கச்சேர்த்துப் பொடித்ததிற்
கச்சக்கரிப்பன் சாறுவிட்டரை
கணக்குமுப்பது நாழிகை
கதித்தபயற்றிற் பாதிக்குளிகை
கட்டியேயனு பானங்கேள்
மெச்சமோரிற் கொடுக்கவயிறு
மிகவுமேற்றுக் கழிச்சல்போம்
வேண்டுங்கரிப்பன் சாற்றிற்கொடுக்க
மிகவுங்கேளீர் பள்ளீரே. 9

பள்ளீரஞ்சரை நாளதிலிட்டுக்
கொள்வீருண்டை ரெண்டாகவே
பதித்தபித்த சுரங்களோடும்
பண்பாய்நொச்சியின் சாற்றிலே
விள்ளீர்வாத சுரங்களோடு
மிகுந்தசர்க்கரை தனிலிட
மீறுசுரங்க ளாறுமேவலி
மிகுமுனிசொன்ன முறையிதே. 10

தூய்மைசெய்த இரசம், கெந்தகம், நாபித்தூள், அரிதாரம், பொரித்த வெண்காரம், வெட்டிவேர்த்தூள். மஞ்சள்கடுக்காய்த் தோல்தூள், தான்றிக்காய்த்தோல் தூள், நெல்லிவற்றல்தூள், மேற்றோல் சீவின சுக்குத்தூள், மிளகுத்தூள், அரிசித்திப்பிலித் தூள், இவை வகைக்கு 1 வராகனெடை, ($3\frac{1}{2}$ கிராம்) தூய்மை

செய்த நேர்வாளப்பருப்பு 6 வராகனெடை (21 கிராம்), கையாந்த கரைச் சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:-** இரசத்தையுங் கெந்தகத்தையுங் கல்வத்தி லிட்டு நன்ருகக் கறுக்கிற வரையிலரைத்து எடுத்துக்கொள்ளவும். பிறகு, தாளகத்தைத் தனியே கல்வத்தில்போட்டு மைபோல் பொடித்து எடுத்துக்கொள்ளவும். பிறகு, எல்லாச்சரக்குகளையும் ஒன்ருகச்சேர்த்து ஒருமணிநேரமரைத்து எல்லாம் ஒன்ருகக் கலந்த பின்பு வாளத்தைச் சிறுகச் சிறுகச் சேர்த்தரைத்து அதுவும் மசிந்த பின்பு கையாந்தகரைச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்கு சாமமரைத்து அரைப்பயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலு லர்த்தி புட்டியில் பத்திரப்படுத்தவும்.

**அளவு:-** 1 முதல் 2 மாத்திரை.

**துணைமருந்தும் தீரும்நோய்களும்:-** உடல்வலிமைக்குத் தகுந் தபடி இரண்டு அல்லது, மூன்று மாத்திரைகளை மோரில் கலந்து கொடுக்க நன்ருய்க் கழிச்சலாகி வயிற்றிலுள்ள தீயநீர்களெல்லாம் வெளிப்படும்.

கையாந்தகரைச்சாறு 2 வராகனெடை(7 கிராம்), தேன் 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்); இவ்விரண்டையுஞ் சேர்த்து மேற்படி இரண்டு மாத்திரைகளைக் கலந்துண்ண பித்தசுரங்கள் போகும்.

வெண்ணொச்சியிலைச்சாறு 2 வராகனெடை (7 கிராம்), தேன் 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்); இவ்விரண்டையுஞ் சேர்த்து மேற் கண்ட மாத்திரைகளை அளவுப்படி கலந்துண்ண வாதசுரங்கள் போகும்.

சீனிசர்க்கரை $\frac{1}{2}$ வராகனெடை- ($1\frac{3}{4}$ கிராம்) தேன் $\frac{1}{2}$ வராகனெடை ($1\frac{3}{4}$ கிராம்) இவ்விரண்டையுஞ் சேர்த்து மேற்கண்ட மாத்திரைகளை அளவுப்படி கலந்துண்ண அறுவகைச் சுரங்கள் தீரும்.

## 3. குட்டத்திற்குப் புகை
## (தொழுநோய்)

சித்திரமான துத்தந்துருசு
சிறந்தவெள்ளை சிலையுடன்
சேருந்தார மூறுநாகஞ்
சிறந்தசாதி லிங்கமும்
முத்தரமான கடுகுதேனின்

மெழுகெருக்கின் கரியுடன்
மோலின்வகைக்குக் கழஞ்சிரெண்டு
மொன்றாய்க்கூட்டி யதனுடன்
பக்குவமான கருத்தநாகம்
பண்பாய்க்கழஞ்சு போட்டபின்
பாராய்பருத்திச் சாற்றாலரைத்துப்
பாங்காயேழு வில்லைசெய்
தந்திரமாகப் புளியம்பொருக்கில்
தானேயேறும் புகையதால்
தளர்ந்தமெய்யி லொழிந்தநோயைத்
தயவாய்ச்சொல்லும் பள்ளீரே. 11

பள்ளீரேழரை யாம்பொழுதினில்
வெந்நீர்வார்த்து முழுகிடில்
பகர்ந்தகுட்டங் கிரந்திப்புண்ணு
பாண்டும்புத்தரை யாப்புடன்
கொள்ளிக்கரப்பன் மெள்ளவுயர்ந்த
குன்மமான சூலையும்
கூட்டியெழுந்த வாதமைஃங்
கொடியதென்னும் பித்தமும்
மெள்ளக்குனிந்து பள்ளத்தாவு
மிருபத்தாம் வயல்நடவிலே
மீறியெழுந்த நோய்கள்கரிந்த
விதத்தைப்பாருங் கணத்திலே,
உள்ளதறிவில் மிகுந்தஞான
வள்ளல்பொதிகை யகத்தியன்
உரைத்தசாத்திரப் புகையின்மகிமை
கைகண்டசாத்திரம் பள்ளீரே. 12

தூய்மைசெய்த துத்தம், துரிசு, வெள்ளைப் பாடாணம், மனோசிலை, தூய்மைசெய்த அரிதாரம், நல்லபாம்பு சதைத்தூள். தூய்மைசெய்த சாதிலிங்கம், கடுகு, தேன்மெழுகு, எருக்குக்கரி இவை வகைக்கு 2 கழஞ்சு ($8\frac{3}{4}$ கிராம்), சிறு கண்நாக அரப்பொடி பருத்தியிலைச்சாறு செல்லத்தக்க அளவு,

**செய்முறை:-** எல்லாச் சரக்குகளையும் ஒன்றாகச்சேர்த்தரைத்து ஒன்றாகக் கலந்தபின்பு பருத்தி இலைச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாமம் அரைத்து ஏழு வில்லைகளாச்செய்து வெய்யிலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

**பயன்படுத்தும் விதம்:-** நோயாளியை நாற்காலியிலுட்கார

வைத்துக் கழுத்துவரையில் உரப்பான கித்தான் துணியைச்சுற்றித் தொங்கவிட்டுப் புளியம்புறணியை நெருப்பாக்கி அதில் ஒரு வில்லையைத் தூள் செய்துபோட்டு அதை நாற்காலியின்கீழ் வைக்கவேண்டும். இப்படிச் செய்வதால் மருந்தின் புகையானது உடலெங்கும் பரவிச்செல்ல ஏதுவாகும். முகம், கண் முதலியவைகளிற்படாமல் விழிப்பாகச் செய்யவேண்டியது. இவ்விதம் ஏழுபொழுது மூன்றரை நாள்கள்செய்து, மறுமூன்றரைநாள் மறுபத்தியம் காத்து எட்டாம் நாள் வெந்நீர் தலைமுழுக்குச் செய்விக்கவும்.

**தீரும்நோய்:-** குட்டம், கிரந்திப்புண், அல்குல் புற்று, லிங்கப் புற்று, அரையாப்பு, கொள்ளிக்கரப்பன், குன்மம், சூலைநோய் முதலியவைகளும் பாண்டு நோய்களுந் தீரும்.

**குறிப்பு.-** இவ்விதப் புகை போடுவதற்கு என்று ஒருவகை ஆவிபிடிக்கும் அறை செய்யப்பட்டுமிருக்கிறது; அதை வாங்கி உபயோகித்துக் கொண்டால் மிகவும் நன்மையாக இருக்கும்.

---

### 4. (வேறு) புகை

மிக்கதான பறங்கிவைப்பில்
மிகுந்தகார மதினுடன்
மேன்மையுடைய மிருதார்சிங்கி
வேண்டுங் கெந்தகமானதுந்
திக்கிலெழுந்த சீறியூர்ந்த
சிறந்தவரவின் கண்டமுந்
தேர்ந்தவகைக்குக் கழஞ்சுமூன்று
சேரப்பொடித்துச் சீலையில்
தொக்காயுருஓடித் திரியதாக்கித்
தோய்த்து வேப்பெண்ணெய்தன்னிலே
சுடரிற்காட்டக் கரிந்தநோயைச்
சுகமாகச்சொலுவோம் பள்ளீரே
எக்காலத்துக் குட்டமுஞ்சனி
யெழுந்தபறங்கிச் சூலையும்
எதிர்த்தபார்வை சூனியமுத
லியல்பாயொழியு முலகீரே. 13

தூய்மைசெய்த பறங்கிவைப்புப் பாடாணம், தூய்மைசெய்த மிருதார்சிங்கி, தூய்மைசெய்த கெந்தகம், உலர்த்தின நாகத்தின் கண்டம் இவை வகைக்கு 3½ வராகனெடை.

**செய்முறை:-** இவை எல்லாவற்றையும் தனித்தனியேத்தூள்

செய்து ஒன்ருகச்சேர்த்து ஒருசாமமரைத்து இரண்டங்குலம் அகலம் ஐந்தங்குலம் நீளமுள்ள சீலைத்துண்டுகளில் பரப்பித் திரியாகத் திரித்து வைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு ஒருதிரியாக வேப்பெண்ணெய்யில் நனைத்துக் கொளுத்தி மேற்சொல்லியபடி புகை பிடிக்கவேண்டும். புண் முதலியவைகளிலும் காண்பிக்கவேண்டும். நோய்வலிமை உடல் வலிமைக்குத் தகுந்தபடி மூன்றரைநாள், ஐந்தரைநாள் செய்து அத்தனைநாள் மறுபத்தியமூங்காக்கவேண்டும்.

**தீரும்நோய்கள்:-** குட்டநோய்கள், சன்னிநோய்கள், பறங்கிப் புண், பறங்கிச்சூலை, சூனியம் முதலியவை தீரும்.

**மருத்துணவு:-** முன்முறையிற் சொன்னவைகளேயாம்.

---

### 5. வேறு புகை

கண்ணுக்கிசைந்த மங்கையுடனே
கலந்தமாயக் கலவியால்
கதித்துமேக மெழுந்துமெய்யிற்
கசிந்தபுண்ணுக் கிசைந்ததாய்ப்
பண்ணுக்கிசைந்த விரதமிரண்டு
பாடாணமிரண்டு கூட்டியே
பகர்ந்ததுருசி துத்தம்லிங்கம்
பாங்காய்வகைக்குக் கழஞ்சியும்
பெண்ணுக்கிசைந்த காரங்கழஞ்சி
பொடித்துமெள்ளத் திரட்டியே.
புகழுங்கருத்த வங்கமும்ரசம்
பிளந்துசேர்த்து உருக்கியே,
திண்ணமுடனே எருக்கின்கரியுஞ்
சேர்த்துமேனிச் சாற்றிலே
சிறக்கவிட்டே யரைத்துவுருண்டை
சேர்த்துப்பாரும் பள்ளீரே. 14

பத்திரண்டு அவ்வுருண்டைப்
பாகமாகத் திரட்டியே
பகலெழுபோ தேயுருண்டை
பாங்காயனலி லிட்டபின்
தள்ளிப்புகைகள் மெள்ளவெளியில்
தானேபோகா திரையிடு
தளிப்புண்ணுலரு:மென்றுமுனிவர்
தமிழின்படிசொல் முறையிதே. 15

தூய்மைசெய்த இரசம், தூய்மைசெய்த வெள்ளைப்பாடாணம் இவை வகைக்கு $2\frac{1}{2}$விராகனெடை, ($8\frac{3}{4}$ கிராம்) துத்தம், துருசு, தூய்மைசெய்த லிங்கம், காரீயம், எருக்கின்கரி இவை வகைக்கு $1\frac{1}{4}$ விராகனெடை, குப்பைமேனி இலைச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:-** வங்கத்தையுருக்கி இரசத்தில் தொந்தித்துக் கொள்ளவேண்டும். பிறகு, ஒவ்வொரு சரக்கையும் தனித்தனியேப் பொடித்து எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து கல்வத்திலிட்டுக் குப்பைமேனிச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமம் மரைத்துப் பன்னிரெண்டு மாத்திரைகளாகச்செய்து நிழலிலுர்த்தி வைத்துக்கொள்ளவும்.

**தீரும்நோய்:-** 1-வது முறையில் சொல்லியிருக்கிறபடி ஆறு நாட்கள் செய்து மறு ஆறுநாள் மறுபத்தியமிருந்தால் குழிப்புண், அழிப்புண், புரைப்புண் ஆகியவைகள் தீரும்.

### புகைபோடும் விவரம்

கண்ணுக்கிசைந்த புகைகள்போடக்
கருத்தைக்கேளு முலகீரே
கருணையாகக் குழியைவெட்டிக்
கதித்தமெய்யைப் புதைத்தபின்
விண்ணுக்கிசைந்த சிரசைமேலே
விட்டுநடுவே மூட்டியே
விரவியேவளை விட்டம்போட்டு
விதமாய்மூடி மண்ணிடு
உண்ணுக்கிசைவாய் மூடிமுகத்தை
உள்ளேசாலக வரையிட்டு
உற்றுச்சரக்கைப் பாணியிலிட்டு
உண்மைதோண்டி கவிழ்த்துப்பின்
பண்ணுக்கிசைந்த பானைத்தூரில்
பக்குவமாகப் பொத்திடு
பதிவாய்த்துருத்தி யொன்றிட்டுது
பதிவாய்வேர்க்கும் பள்ளீரே. 16

பள்ளீர்மூன்று நாட்புகைபோடப்
பதிவாநோயகன் றொழிந்திடும்
பதிவாயேழரை நாட்கழித்தபின்
படினங்கேளும் பள்ளீரே
கொல்லிக்கரப்பன் மேகமூறல்
கூட்டியெழுந்த சூலையும்
கூடியெழுந்த நோய்களுமுதற்
குணமதாகு முலகீரே. 17

## 6. குழிப்புண் திரி

மங்கையர்மோக வலைக்குள்விழுந்து
வருந்திமேக மெழுந்துதான்
வறண்டுமூலந் திரண்டுநீரில்
வருந்துபுண்ணுக் கிசைந்ததாங்
கொங்கையரையரை யாப்புப்புற்றுக்
கொடியபவுத்திர மானதுங்
கொடியபுண்கள் புரைகள்போகக்
குறுமுனிசொன்ன தமிழிதே. 18

பாரும்லிங்க மிரதந்துருசி
பவளப்புற்று அதனுடன்
பகர்ந்ததுத்த மானகெந்தி
படிகமான சூடனும்
சீருஞ்சிங்கு கோலத்துடனே
சிறந்தசிலையுங் கூட்டியே
சேர்த்துப்பொடித்து வகைக்குக்கழஞ்சு
செறியக்கொள்ளும் பள்ளீரே,
மேரில்வளரு மெழுகையுருக்கி
மிகுந்தபொடியை யதிலிடு
மிக்கசிறிய வடையதாக்கி
மிகுந்தகுழிப்புண் ணதிலிட
ஆருமறியப்போகு மற்றுமுண்
டானபுண்புரை மேகந்தான்
அருகுமென முன் முனிவர்தமிழி
லருளும்படியிம் முறையிதே. 19

தூய்மைசெய்த இலிங்கம், தூய்மைசெய்த இரசம், துருசு, பவழப்புற்றுப் பாடாணம், பால்துத்தம், கற்பூரம், மிருதார்சிங்கி, மனோசிலை, மஞ்சள்கடுக்காய்த்தோல் தூள், இவை வகைக்கு $1\frac{1}{4}$ வராகனெடை தேன்மெழுகு பன்னிரெண்டரை முதல் இருபத்தைந்து வராகனெடை.

**செய்முறை:-** கெந்தகத்தையும் இரசத்தையும் கல்வத்திலிட்டு நன்றாகக் கறுக்கிற வரையிலரைத்துத் தனியே எடுத்து வைத்துக் கொள்ளவேண்டும். மற்றச் சரக்குகளையும் தனித்தனியேப் பொடித்து முடிவில் எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து ஒரு சாமம் வரையிலரைத்து மெழுகையுருக்கித் தண்ணீர்போலுருகின பிறகு மேற்படித் தூளை அதில்போட்டுக் கிளறிப் பீங்கான் குப்பியில் எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

**தீரும்நோய்:-** குழி விழுந்த புண்ணை இருந்தால் அந்தக் குழி கொள்ளும்படியாக இந்த மெழுகில் திரி செய்து அதில் வைத்துவர வேண்டும். இவ்விதமே புரையோடின புண்களிலும் அதற்குத் தகுந்தபடி நீண்ட திரியாகச்செய்து புரைக்குள் செலுத்திவரவேண்டும். இவ்விதம் செய்துவரக் குழிவிழுந்த புண்கள், புரையோடின புண்கள், அரையாப்பு, பௌத்திரம், முதலியவைகள் தீரும்.

**மருத்துணவு;-** உடல் இயல்பு, நோய்வலிமை ஆகியவைகளுக்குத் தகுந்தபடி ஏற்படுத்தவேண்டியதுதான்.

---

## 7. புற்றுப் புகை

ஏற்றகரிய வங்கமிரண்டு
இசைந்தவிரத மவ்வெடை
எடுத்துவெள்ளைக் கெந்திதுருசி
யிசைந்தசாதி லிங்கமுஞ்
சித்தமுடைய தாரஞ்சிங்கி
சிறந்தகரிய சீரகஞ்
சேர்த்துக்கடுகி னுடனேவெள்ளை
சேரவொன்றாய் வகையெல்லாம்;
ஆத்தபொடியிற் பருத்திச்சாறுவிட்
டரைத்துருட்டி யெடுத்ததை
அன்பாயன்பது உருண்டைமுடிந்து
அனலில்கேளும் பள்ளீரே
சாற்றப்புகைகண் டாலுமோடுஞ்
சைதன்னியப்புண்கள் கடும்புற்றுத்
தணியுமுனிவ ருரையின்படிக்குத்
தயவாய்க்கொள்வீ ருலகீரே. 20

தூய்மைசெய்த கருவங்கம் $2\frac{1}{2}$ வராகனெடை, ($8\frac{3}{4}$ கிராம்), தூய்மைசெய்த இரசம் $2\frac{1}{2}$ வராகனெடை($8\frac{3}{4}$கிராம்), தூய்மைசெய்த வெள்ளைப் பாடாணம், தூய்மைசெய்த கெந்தகம், துருசு, தூய்மை செய்த சாதிலிங்கம், தூய்மைசெய்த அரிதாரம், தூய்மைசெய்த மிருதார்சிங்கி, கருஞ்சீரகத்தூள், கடுகுமா, வெள்ளைக்கடுகுமா இவை வகைக்கு $1\frac{1}{4}$ வராகனெடை, பருத்தியிலைச்சாறு செல்லத் தக்க அளவு.

**செய்முறை:-** வங்கத்தையுருக்கி இரசத்தில் தொந்தித்துக் கொள்ளவேண்டும். மற்றச் சரக்குகளையும் தனித்தனியே தூள் செய்துக் கொள்ளவேண்டும். பிறகு, எல்லாவற்றையும் ஒன்றாகச்

சேர்த்து ஒருமணிநேரம் அரைத்துப் பிறகு மேற்படி பருத்திச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து ஐம்பது மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

**தீரும்நோய்:-** 37ஆம் முறையிற் சொல்லியிருக்கிறபடி புகை போடப் புண்கள், உடல் உளைச்சல், அல்குல் புற்று, லிங்கப்புற்று ஆகியவைகள் தீரும்.

**மருத்துணவு:-** மேற்படி முறையிற் சொல்லியிருக்கப்பட்டதே யாம்.

---

## 8. மண்டூர பற்பம்

கதித்தவூசி பிடித்தகாந்தங்
கழஞ்சுயெட்டு அரப்பொடி
கண்டாயவ்வெடை யிரதமவ்விதங்
காணுங்கெந்தி சரியெடை
உதித்தவாளங் தோடுகழற்றி
யுகந்தகழஞ்சு அதனுடன்
உரைக்கக்கணக்குக் கழஞ்சிரெண்டு
உயர்மிளகது சரியெடை
சொதித்தகடுக்காய் கழஞ்சிரண்டு
சொல்லும்நெல்லிப் பருப்பதுங்
தோய்த்தஇந்தெடை சரியதாகச்
சுருட்டிமெள்ளப் பொடிபண்ண
மதித்தகருப்பஞ் சாறுவிட்டதை
மகிழவரைத்துப் புடமிட
வாராய்வெள்ளையாம் பார்த்துநீயும்
சீராய்க்கொள்ளும் பள்ளீரே. 21

பள்ளீர்தேனுடன் கொள்வீரஞ்சரைப்
பகல்பொழுதந்தப் பற்பத்தைத்
துள்ளியெழுந்த பித்தக்கரப்பான்
சொறிகரப்பனுஞ் சூலையுங்
சுருண்டபித்த சூலையானதுங்
தொலைவிப்புருதி கிரந்தியுங்
கொள்ளிக்கரப்பான் செங்கரப்பனுங்
கூடியெழுந்த மேகமுங்
கொடியதான துடிகளடங்கிக்
குணமதாகு முலகரே

தள்ளிப்புனலை யறுத்தஞான
வள்ளல்பொதிகை யகத்தியர்
தமிழின்படியே யுரைசெய்தோ மிதைத்
தயவாய்த் கொள்வீருலகீரே. 22

ஏழுஊசி பிடிக்குங் காந்தம் 1 பலம் (35 கிராம்), தூய்மை செய்த அய அரப்பொடி 1 பலம், (35 கிராம்) தூய்மைசெய்த இரசம், தூய்மைசெய்த கெந்தகம் இவை வகைக்கு 1 பலம், (35 கிராம்) தூய்மைசெய்த நேர்வாளப்பருப்பு, மிளகுத்தூள், மஞ்சட்கடுக்காய்த்தோல் தூள், நெல்லி முள்ளித்தூள் இவை வகைக்கு ¼ பலம் ($8\frac{3}{4}$ கிராம்) கரும்புச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை** -இரசத்தையும் கெந்தகத்தையும் தொந்தித்து நன்றாகக் கறுக்கிற வரையிலரைத்துப் பிறகு, மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து ஒருமணி நேரம் அரைத்து எல்லாம் கலந்த பின்பு, கரும்பு சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து நான்கு சாமநேரம் (12மணி) அரைத்துச் சிறு வில்லைகளாகச் செய்து வெய்யிலிலுலர்த்தி ஓட்டிவிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்து உலர்த்தி இருநூற்றைம்பதுபலம் வறட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் குப்பியில் பத்திரப்படுத்தவும்.

**அளவு** :-1 முதல் 4 குன்றியெடை.

**துணைமருந்து** :- தேன், இஞ்சிச்சாறு முதலியவைகளாம்.

**தீரும்நோய்கள்**:- பித்தக்கரப்பான், பொறிகரப்பான், கொள்ளிக்கரப்பான், செங்கரப்பான், சூலை, முடக்குவாதம். விப்புருதி நோய். மேகநோய்கள் முதலிய பற்பல நோய்கள் தீரும்.

**மருத்துணவு** ;-நோய் வலிமை, உடல் வலிமை ஆகியவைகளுக்குத் தகுந்தபடி ஏற்படுத்த வேண்டியது.

## 9. அயக்காந்தச் செந்தூரம்

தொந்தமுடைய காந்தமெட்டுத்
துடியதாக வரைபொடி
தொடுத்தவகைமுந் நான்கினுடனே
சொல்வீர்காந்த மதனுடன
அந்தடுடைய காரம்பொரித்து
அருண்டபொடியி னதிலிடு
அடங்கக்குமரிச் சாறுவிட்டதை
யாட்டிப்பார்க்கச் சிவப்பதாஞ்
சந்தமுடனே பேய்ச்சுரைக்காய்க்

குடுக்கைதன்னி லடைத்ததைச்
சொந்தமுடனே புளிப்புத்தவிர்த்துச்
சுகமா யேழரைநாளினில்
தொடுத்துநோயை விடுத்துப்போடுஞ்
சொகுசைப்பாரும்பள்ளீரே. 23
கொள்வீர்பாண்டு சோகையுடனே
கொடியகாச மீளையும்
குலைக்குமிரும லிரைப்புடன்மிகு
கூறிரத்த காசமும்
பள்ளிச்சுரமும் நடுக்கலுடனே
பாருமக்கினி மந்தமும்
பகர்காமாலை யதிகமான
பருத்ததோர்நீ ராமையும்
மெள்ளக்குனிந்து பள்ளத்தாவு
மிகுபத்தாம்வயல் நடவிலே
மீறியெரிந்த நோய்கள்கரிந்த
விதத்தைப்பாரும் பள்ளீரே. 24

நல்ல திறமான காந்தம் எட்டுப் பங்கு, தூய்மைசெய்த அய அரப்பொடி பன்னிரெண்டு பங்கு பொரித்த வெண்காரம் பன்னிரெண்டு பங்கு, சோற்றுக் கற்றாழைச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை** ;-முன் மூன்று சரக்கையும் கல்வத்திலிட்டு எல்லாம் கலக்கும்படி ஒருமணிநேரமரைத்துப் பிறகு, கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாம நேரமரைத்து வில்லை செய்து தாம்பிரதாலத்தில் ஆலிலையைப் பரப்பி அதன் மேல் முன் வில்லையை வைத்துக் கடுவெய்யிலில் வைக்க வேண்டும். மறுநாள் வில்லையை கல்வத்திலிட்டுப் பொடித்துக் குமரிச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லை செய்து முன்போல் வெய்யிலிலுலர்த்த வேண்டும். இது நன்றாய்ச் சிவக்கிற வரையில் இவ்விதம் மீண்டும் மீண்டும் அரைத்தும் வெய்யிலில் வைத்தும் வரவேண்டும். பிறகு, பொடித்துப் பேய்ச்சுரைக் காய்க் குடுக்கையில் பத்திரப்படுத்த வேண்டும்.

**அளவு** ;-1 முதல் $1\frac{1}{2}$ குன்றியெடை.

**துணைமருந்து** :-தேன், நெய், வெண்ணெய் ஆகியவைகளாம்.

**தீரும்நோய்** ;-பாண்டு நோய்கள், சோகை நோய்கள், காச நோய், இரத்த காசநோய், ஈளை நோய், இருமல், இரைப்பு, காட்பட்ட சுரம், நடுக்கல் சுரம், அக்கினிமந்தம், மஞ்சள்நோய், நீராமை முதலியவைகள் தீரும்.

**மருத்துணவு** :-புளிப்பை அறவே நீக்கி இம்மருந்தை உபயோகித்தால் ஏழரை நாளைக்குள் நன்மையுண்டாகும்.

### 10. துத்திச் சூரணம்

சித்தியாந்துத்தி தகரைவிதையுஞ்
சிறந்தநெல்லுப் பொரிகல்நார்
தீர்க்கமுடைய பேதிகூகைச்
சிறந்தநீறு மதனுடன்,
சுத்தியாமதுர நாகப்பூவுந்
தொடர்வால்மிளகு வகையெல்லாம்
தொகுத்து இந்திடை வறுத்துஇடித்துச்
சுகமாக்கேளும் பள்ளீரே
பத்தியதாயிதை யெடுத்துஅரித்து
பண்பாய்ச் சீனிகற்கண்டு
பாகத்துடனே பொடிமுன்னிறக்கிப்
பண்பாச்சேர்த்து ணளெட்டில்
அத்திநீர்ச்சொறி யுப்புமாங்கிச
மடைப்பதிமேகம் விடுமென
அன்பாய்முனிவர் தமிழின்படிக்கு
யுண்பீர்காணு முலகீரே. 25

துத்திவிதைத் தூள், தகரைவிதைத்தூள், நெல்லுப்பொரித் தூள், கல்நார் பற்பம், அல்லது கல்நார்த்தூள், சாத்திரபேதித் தூள், காட்டெருமைபால்தூள், அதிமதுரத் தூள், சிறுநாகப்பூத் தூள், வால்மிளகுத் தூள் இவை வகைக்கு 5 வராகனெடை ($17\frac{1}{2}$ கிராம்), சீனிச்சர்க்கரை 5 பலம், கற்கண்டுத்தூள் $1\frac{3}{4}$ பலம் ($61\frac{1}{4}$ கிராம்).

**செய்முறை** :-மேற்படி தூள்களை எல்லாம் ஒன்றாய்க் கலந்து சீனிச்சர்க்கரை, கற்கண்டு ஆகியவைகளையுஞ் சேர்த்து அரைத்துக்கொள்ளவும்.

**அளவு** :-1 முதல் 2 வராகனெடை.

**தீரும்நோய்கள்**:- நீரடைப்பு, சதையடைப்பு, பிரமேகம் முதலியவை தீரும்.

### 11. பிளவை வெண்ணெய்

சொல்லக்கேளும் பிளவைதனக்குச்
சுருக்கதாகக் காரந்தான்
துருசுடனே சாரம்வெள்ளை
தொகுத்தஆவின் வெண்ணெயால்

கல்வந்தன்னிற் சாமம்நாலு
கதித்தவரைத்து வழித்ததைக்
கண்டாய்செப்பில் நன்ருய்வைத்ததைக்
கனத்துமீறி யெழுந்திடும்
வல்லுப்பிளவை நாற்பத்தெட்டிலும்
வளரவேதுயில் தனிவிட
வறண்டிங்குருகி மிறண்டுபோன
வளமைபாரும் பள்ளீரே
வெல்லுந்தமிழ்க்கு அகத்தியமாமுனி
சொல்லும்படிக்கிவ் வயித்தியம்
மிகவுமறிந்து இருபொழுதிடத்
தகமையாறு முலகீரே. 26

துருசு, நவச்சாரம், தூய்மைசெய்த வெள்ளைப் பாடாணம் இவை வகைக்கு $2\frac{1}{4}$ வராகனெடை பசுவின் வெண்ணெய் 1 முதல் 3 பலம் வரை.

**செய்முறை:-** மேற்படி சரக்குகளைத் தனித்தனியேத் தூள் செய்து பிறகு, எல்லாவற்றையும் ஒன்ருகச் சேர்த்து ஒருமணிநேரம் அரைத்து வெண்ணெயிற் சிறுகச் சிறுக சேர்த்து நான்குசாமம் அரைத்துச் செம்புக் குப்பியில் வைத்துக்கொள்ளவேண்டும்.

**தீரும்நோய் :-** இந்த வெண்ணெயை ஒரு துணித் துண்டில் தடவிப் பிளவைகளின்மீது போடவேண்டும். இவ்விதம், செய்து வர நாற்பத்தெட்டுவகைப் பிளவைகளுந் தீரும்.

## 12. எருவாய்முளைத் தைலம்
## (மூலம்)

மட்டிவிரதங் களஞ்சிநாலு
வளருங்கெந்தி யதனெடை
வாழுங்காட்டு எருமைப்பாலை
வார்த்தரைத்துச் சீலையில்
திட்டமுடனே தடவித்திரித்துச்
சிறந்தநெய்விட் டெரித்ததைச்
சிவந்ததயில மிறக்கியடியில்
திரண்டமூல மதனிலே
சட்டமுடனடுவிரலிற் ருேய்த்துத்
தடவிமூன்று பொழுதினில்
தளிருமுளைக ளுருகிக்கடிந்த
தயவைப்பாரும் பள்ளீரே

அட்டகரியுயர் பொதிகைவாழு
மகத்தியர் தமிழின்படி
அதிகப்பண்டிதர் தெரிந்துசெய்திதை
யறிந்துபாரு முலகீரே. 27

தூய்மைசெய்த இரசம் 5 வராகனெடை (17½ கிராம்), தூய்மை செய்த நெல்லிக்காய்க்கெந்தகம் 5 வராகனெடை, பசுவின் நெய் 10 பலம் (350 கிராம்) எருக்கம்பால் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—இரசத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திலிட்டு அரைத்து நன்ருகக் கறுத்த பின்பு எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக விட்டு நான்கு சாமம் அரைக்கவேண்டும்; பிறகு சாண் அகலம் சாண் நீளமுள்ள ஒரு வெள்ளைத் துணியின்மீது இதனைத் தடவி ஈரமில்லாமல் உலரவைத்து திரியாகத் திரித்து மேற்படி நெய்யில் நனைத்துச் சுடர்த் தைலமாக இறக்கிக் கொள்ளவேண்டும். (சுடர்த் தைலம் இறக்கும் முறையானது நமது **யூனனி வைத்திய தாருட்டிய விருத்தி போதினி** இரண்டாம் பாகத்தில் வகை விவரமாகச் சொல்லப்பட்பட்டிருக்கிறது. அவசியமானவர்கள் அதைப் பார்த்துக் கொள்ளவும்.) முன்னிறக்கின தைலத்தையே மடக்கி மடக்கி மூன்று தடவை இறக்கிக் குப்பியில் பத்திரப்படுத்தவும்.

**தீரும்நோய் :**—இந்தத் தைலத்தில் நடுவிரலைத் தோய்த்து மூலமுளைகளின்மீது பூசிவருவதால், அம்முளைகள் கருகி உதிர்ந்து போகும். இது மூலமுளைகளைக் கரைத்தெடுக்க ஒரு சிறந்த முறை

## 13. மலஞ்சிறுநீர் அடைப்பு

மிகுந்த வடையி லிருந்த வண்டம்
விரிந்த தோடு மதனுடன்
மிக்க வெலியின் புழுக்கை யுடனே
வெள்ளைக் கோழிக் காரமும்
பகுந்த வகைக்குக் கழஞ்சு மரையும்
பரப்பிப் பொடித்து எடுத்ததைப்
பாராய் வெள்ளரிக் காயை வெதுப்பு
பகுந்த சலத்தின் றன்னிலே
புகழ்ந்து கலக்கி யருந்தில் வயிறு
பெருத்த சலமு மலமுடன்
புரண்டு வெளியிற் றிரண்டு வந்திடும்
புதுமை பாரும் பள்ளீரே
மகிழ்ந்து முனிவர் சிறந்த தமிழின்
வகையின் படியிம் முறையதை

வகுத்த பண்டிதர் தொகுத்துச் செய்து
வளமை பாரு முலகீரே. 28

அடைவைத்த கோழிமுட்டைத்தோல், எலிப்புழுக்கை, உலர்த்தின வெள்ளைக்கோழி மலம் இவை வகைக்கு 5.8 வராகனெடை (2.2 கிராம்) இவைகளைப் பொடித்துத் தூளாக வைத்துக்கொள்ள வேண்டும்.

**தீரும்நோய்**:—வெள்ளரிக்காயை நெருப்பில் வெதுப்பிப் பிழிந்த சாறு அரை ஆழாக்கு இதில் மேற்படி தூள்கள் சமயத்திற்குத் தகுந்தபடி 1 முதல் $1\frac{1}{2}$ வராகனெடை கலந்து பருகச் செய்யவேண்டும். இதனை உட்கொண்ட அரை அல்லது, ஒருமணி நேரத்திற்குள் மலக்கட்டும் சிறுநீர்க்கட்டும் தீர்ந்து மலமும் சிறுநீரும் தாராளமாய் வெளியாகும்.

## 14. அயச் செம்பு

உதித்த வயமும் வீர நேரே
யுறுதி யாகச் சேர்த்துப்பின்
உகந்து கலவத் திட்டுக் கடைநீ
ருண்மை யாக விட்டரை
விதித்து எடுத்துக் கடத்தி லடைத்து
வீத மாக மூடியே
வேறு சீலைமண் ணேழு செய்து
விருப்ப மாகவே யடுப்பில்வை
கதித்து எரிமுன் னன்கு நாழிகை
கமலம் போல வெரித்தெடு
கண்டா யெரித்துப் பிரித்துப் பாரு
கார மாகவே யேறிடும்
சொதித்து அடியில் மேலி ருந்ததைச்
சேர்த்து ஒன்ரு யரைத்திடு
சுத்தக் கடைநீர் விட்ட ரைத்திடு
சிவப்ப தாகும் பள்ளீரே. 29

பள்ளீ ரிப்படி யரைத்து நேரே
பதியத் துருசி தானிட்டுப்
பதிவா யரைத்து வில்லை தட்டியே
பதிவாய் ரவியிற் காயவை
துள்ளிக் கெசத்தில் புடத்தில் வைத்துத்
தூக்கிக் காரங் காதலாய்த்
தொடுத்து அரைத்துக் குகையி லிருக்கு
துடிய தாகவே செம்பதாம்

வள்ளி மதியி லெட்டுக் கொண்டிடு
வகைய தாக வேமத்தை
வடிவ தாக வுருக்கி யூதிடு
வாத மாகும் ஏழுமாம்
துள்ளு புனலை யெடுத்துப் புசித்த
வள்ளல் பொதிகை யகத்தியர்
துடிய தான தமிழின் படியே
தொகுத்துச் சொன்ன முறையீதே. 30

## 15. துருசுச் செம்பு

அடுத்த நீலன் கழஞ்சு நாலு
ஆதிக் கெந்திமுக் காலதாம்
அன்பாய்ச் சூடனரை விட்டு வீரம்
ஆன கடையின் னீர்விட்டுத்
தொடுத்து டனிரு சாம மாட்டித்
தொடுத்துத் துருசின் மேலிட்டுக்
கடிய தாகவே சுண்ண மேலிடு
தொக்கவே புடம் வைத்தெடு
கடுத்து மேபுட மிட்டு எடுத்துக்
காரி காலிடு பாணியால்
கடுகி யரைத்துக் குகையி லிட்டுநீ
கார மாக வுருக்கூது
படுத்து ரவியாங் தகட டித்துநீ
பாக மாகப் பாருநீ
பதிய ரவியாம் பழுத்த நேர்மையைப்
பதிவாச் சொல்வோம் பள்ளீரே. 31

சொல்லக் கேளும் ரவியி னெடைக்குச்
சுருக்க தாகவரப் பொடி
சொல்வீர் வீரங் காலெடை சேர்த்துத்
துருசு கூட்டி அரைத்திடு
மெள்ளப் புகைநீர் விட்டிங் கரைத்து
மெதுவாய் ரவியில் மேலிடு
மேன்மை யாகவே ரவியி லிட்டிடு
மீளக் காட்டம் போட்டெடு
நல்ல ரவியில் ஏமம் போலாம்
நாடி மதியி லெட்டொன்றில்
நாடி யுருக்கி யூதி யேயெடு
நல்ல ஏமம் ஏழதாம்

வெல்லற் கரிய அகத்திய மாமுனி
விரும்பி யுளத்தி லுதித்தது
விருப்ப முடனே பாக மாக
மிகவுஞ் செய்திடும் பள்ளீரே. 32

### 16. சகலமேக நெய்

உச்சித மான ஆட்டின் பால்தா
னுகந்து படியொன் றதனிலே
யூட்டக் கறுத்த தைல மதைத்தா
னுகந்து கலக்க வெண்ணெயாம்
மெச்சிதை விடுத்துக் கனிந்தே யுருக்கி
மிகவு மாறு கழஞ்சுதான்
மீண்டும் பொடித்து அதனைக் கொடுத்து
மிகவே கலக்கத் திரண்டிடும்
வச்சிதை நெல்லியின் கனியினு லொன்று
மகிழ்ந்து பத்துநாள் புகழ்ந்துண்ண
மாட்டிக் கிடக்கு நோய்கள் விடுத்த
வளமை கேளும் பள்ளீரே
நச்சிடு மேகநீ ரிழிவு காந்தல்
நயந்த வெலும்பை யுருக்கியும்
நளின முடனே போமென முனிவர்
நயந்த மொழியின் படியீதே. 33

தொகுத்ததோர் பள்ளு நன்றாய்ச்
சொல்முறை தவரு வண்ணம்
மகுத்துவ மாகச் செய்ய
வளர்பிணிய கன்று போகும்
பகுத்தநற் சரக்குக் கெல்லாம்
பகர்சுத்தி முறையாச் செய்து
மிகுத்தபா ருலகிற் செய்ய
மேன்மையாம் வயித்தி யோரே. 34

வெள்ளாட்டுப்பால் 1 படி இதில் கறுப்புக் குன்றிமணிக் குழித்தைலம் பலம் ஒன்றைவிட்டு நன்றாய்க் காய்ச்சிப் பதத்தில் பிரையிட்டு மறுநாள் கடைந்து வெண்ணெயை எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த வெண்ணெயில் மூன்று அல்லது நான்கு வராக னெடையாகக் காலை மாலை இரண்டு வேளையும் பத்துநாள் உட் கொண்டுவர, மேகநீர், நீரிழிவு, மேகக் காந்தல், எலும்புருக்கி நோய், பிரமேகம் முதலிய பலநோய்கள் தீரும்.

**குன்றிமணிக் குழித்தைலம்:-** கறுப்புக் குன்றிமணியை உடைத்துப் பருப்பெடுத்துப் பசுவின்பால் தெளித்து ஒரு இரவு

வைத்து மறுநாட் காலையில் அதிக ஈரமல்லாமற் சுமாராக உலர்த்திப் பாகப்படி குழித்தைலம் இறக்கிக்கொள்வதே குழித்தைலமாம்.

### 17. இரசசெந்தூரம்

குதித்திடு மிரசம் பலமு மொன்று
    கொடுத்த சங்க நீரதில்
கூட்டி யரைப்பு நாளொன் றதனை
    நீட்டி ரவிமுன் னிதே
மதித்தி டவுலர்த் திப்பொ டித்ததை
    வளர்குப் பிதனிற் போட்டபின்
மட்கல மதில்மண லிட்டு வைத்து
    வளமை யாக வெரிக்கவே
கதித்திடச் சாமங் க்மல மாகவே
    கருதி யெடுக்கச் சிவப்புள
கடிய செந்தூரம் பண வெடையதை
    முடுகித் தேனி லருந்திட
அதித்தே யேமூநாள் கொடுத்திடவே
    அகன்றிடுங் குன்ம வலியுமே
ஆற்றி யேவிடுங் காணுல குள்ளோர்
    போற்றுவ ராண்டே. 35

தூய்மைசெய்த இரசம் 1 பலம் (35 கிராம்), வெடியுப்புத் திராவகம் செல்லத்தக்க அளவு.

**செய்முறை** :-இரசத்தைக் கல்வத்திலிட்டு மேற்படி திராவகத்தைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைக்க வேண்டும். பிறகு, வெய்யிலில் வைத்து உலர்த்திப் பொடித்து ஏழு சீலைமண் செய்த குப்பியிற் போட்டு வாய்க்கு மாக்கல்லடைத்துச் சீலைமண் செய்துலர்த்தி ஒரு மண் பானையில் நாலங்குல கன மணலிட்டு அதன்மேல் குப்பியை வைத்துக் குப்பிமறையும்படியாக மணலைக் கொட்டி அடுப்பேற்றிக் கமலாக்கினியாக ஒரு சாமம் எரித்து ஆறவிட்டு எடுக்கச் செந்தூரமாகி இருக்கும்.

**அளவு** :-1 முதல் $1\frac{1}{2}$ குன்றிஎடை.

**துணைமருந்து** :-தேன், சர்க்கரை.

**தீரும்நோய்** :-குன்ம நோய்கள் தீரும்.

### 18. நவச்சார செந்தூரம்

சாரியும் பலமாம் புகை நீரைச்
    சரிவர விட்டு அரைவறு

சாற்றிடு கடமே மூடி
யேத்திடு திடமாத் தானும்
பாரினி லடுப்பி லெரித்திடு
பகரவே கமல மெரித்திடு
பத்தியே ஏறும் இப்படிச்
சித்தியா யஞ்சு
வாரியா யெரித்து எடுத்திடு
வளமையாச் சிவந்த வயிறு
வலியு மோடிப்போம் வடிவுடன்
வளமை யார சத்தில்
காரினி போட்டுக் கரண்டியில்
கதிவுறக் கொதிக்க மதிய தாங்
காத்திர மாகும் உலகுள்ளோர்
போற்றுவ ராண்டே. 36

நாட்டு நவச்சாரம் 1 பலம், (35 கிராம்) இதனைக் கல்வத்தி லிட்டுப் புகைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து ஈரமுலர்ந்த பின்பு நெருப்புப் பீங்கானிலிட்டு நவச்சாரம் ஆழ்த்திருக்கும்படியாக மேற்படி புகைநீரைவிட்டு உமிநெருப்பின்மீது வைத்து, விட்ட திராவகம் சுண்டும்படியாகவறுத்தெடுத்துப் பானையிலிட்டு மேற்சட்டி மூடி ஐந்து சீலைமண் செய்து அடுப்பேற்றிக் கமலாக்கினியாக இரண்டு சாமமெரித்துக் குளிர ஆறியபின்னெடுக்க நவாச்சாரமானது மேலே பதங்கித்து நிற்கும். மேலே பதங்கித்திருப்பதையும் பானையிலிருக்கிற மருந்தையும் ஒன்றாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டு முன்போலவே புகைநீரைவிட்டு அரைத்து முன்போலவே புகைநீரைவிட்டு வறுத்தெடுத்து முன்போலவே பானையில் வைத்தெரிக்க வேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி ஐந்து அல்லது ஆறு தடவைகள் செய்யவேண்டும். ஒவ்வொரு தடவையும் மேலேறி இருக்கிற பதங்கத்தையும் கீழுள்ள மருந்தையும் சேர்த்தரைத்துக் கொண்டே வரவேண்டும். முடிவாக சாரமானது மேலே ஏருமல் கீழே நின்று சிவந்து போகும். அதுதான் பதமென எடுத்துக் குப்பியில் பத்திரப்படுத்த வேண்டும்;

அளவு :-2 முதல் $2\frac{1}{2}$ குன்றி எடை.

தீரும்நோய் :-எல்லாவகைக் குன்மநோய்கள், சூதகச் சிக்கலிலுண்டாகும் குன்ம நோய்கள், குன்மக்கட்டி, வல்லைக் கட்டி, கௌசை, பெருவயிறு, ஆம்பல்கட்டி முதலியவைகள் தீரும்.

தூய்மைசெய்த இரசம் 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்) இதனை

இரும்புக் கரண்டியில் விட்டு ஒரு குன்றிமணி எடை மேற்படி செந்தூரத்தைக் கூடப்போட்டு உமிநெரும்பில் வைத்து மெது வாய்த் துழாவிவர, இரசமானது இறுகி இரசவாத வெள்ளி யாகும்.

## 19. அயச் செந்தூரம்

குமரியின் சோற்றிற் கடுக்காய்
குமரியி னீரா மதிலயங்
கூட்டியே தோய்ப்பு மிகுந்தனல்
காட்டியே தாக்கு
தமரி தளவீழுங் கண்டெடுத்துத்
துத்தி மூலஞ் சேர்த்தரைத்து
தாக்கியே பழச்சாறு விட்டதை
நோக்கியே அரைத்து
அமுரியி னுடனே அதிர்ந்திட
அரைப்பு நாளொன்று லர்த்தியே
யாக்குவாய் புடந்தான் பத்துத்
தாக்கு வாய்மு ழஞ்சாண்
சிமிதி யாட்டிடவே சிவப்பதா
மதுவினில் கொடுக்க வாதமும்
திகழ்பித்த பாண்டு வீக்கம்போம்
புகழ்பெற்ற ஆண்டே. 37

அய அரப்பொடி வேண்டிய அளவு, சோற்றுக் கற்ருழைச் சோற்றில் மஞ்சள் கடுக்காய்த்தோலை மசிய இடித்துச் சேர்த்து ஒருசாம நேரம் வைத்துப் பிறகு நன்ருகப் பிசைந்து வடிகட்டி நீரை எடுத்துக்கொள்ள வேண்டும். அயத்தை ஒரு இரும்புப் பாத்திரத்திற் போட்டு அடுப்பேற்றி நன்ருய்ச் சிவக்கக் காய்ந்த பின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற சோற்றுக் கற்ருழைச் சாற்றை விட்டு இரும்புக் கரண்டியால் துழாவி வறுக்க வேண்டும். விட்ட சாருனது சுண்டி வற்றிவிட்டால் மறுபடியும் முன்போல் முன் சாற்றைவிட்டு வறுக்கவேண்டும். அயத்தூளானது நன்ருய் மடிந்து மாவைப்போலாகிற வரையில் முன் சாற்றை முன்போல் மடக்கி மடக்கிவிட்டு வறுக்க வேண்டும். பிறகு, அந்த அயத் தூளின் சமனெடை துத்திவேர்ப்பட்டைத் தூள், இவ்விரண்டை யும் சேர்த்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு நான்கு சாமமரைக்க வேண்டும். இவ்விதம் அரைத்து ஈரமுலர்ந்தபின்பு அமுரியைச் சிறுகச் சிறுகவிட்டு நான்கு சாமமரைக்கவேண்டும். பிறகு, வில்லைதட்டி உலர்த்தி ஓட்டிலிட்டு மேலகல்மூடி ஐந்து சீலைமண்செய்து உலர்த்தி முழ நீளமும் சாண் ஆழமுமுள்ள குழி ஒன்று தோண்டி அதில் அரைவாசி வறட்டியை

அடுக்கி அதன்மேல் முன் சித்தப்படுத்திய கலசத்தைவைத்து அதன்மீதும் வறட்டியை அடுக்கி நெருப்பிட்டு எரிந்து குளிர ஆறினபின் எடுத்துக் கவசத்தைப்பிரித்து அகலிலுள்ள மருந்தைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு முன்போல் நான்கு சாமமரைத்து ஈரமுலர்ந்த பின்பு சிறுபிள்ளைகள் மூத்திரத்தை விட்டு நான்கு சாமமரைத்து முன்போல் வில்லைசெய்துலர்த்தி முன்போல் புடமிடவேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கிப் பத்துப் புடமிட்டால், அயமானது சிவந்து மேன்மையான செந்தூரமாகும்.

அளவு:- 1 முதல் 2 குன்றிஎடை.

துணைமருந்து:- தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளாம்.

தீரும்நோய்கள்:- இரத்தக் குறைவு நோய்கள், வாத நோய்கள், பித்தபாண்டு நோய்கள், வீக்கங்கள், உணவேற்காமை முதலிய பல நோய்கள் தீரும்.

மருத்துணவு:- இரத்தக் குறைவு நோய்களில் புளியை அறவே நீக்கவேண்டியது. மற்ற நோய்களில் நோய்வலிமை உடல் வலிமை ஆகியவைகளுக்குத் தகுந்தபடி உப்பு, புளி முதலியவைகளை அறவே நீக்கியும், சொற்பமாகச் சேர்த்தும் பத்தியம் ஏற்படுத்தவேண்டியது மருத்துவர்களின் கடமையாகும்.

குறிப்பு:- இந்த அயச்செந்தூரமானது கெந்தகம் சேராமற் செந்தூரிக்கப்படுகின்றதால், அருமையான முறைகளில் இதுவும் ஒன்று. இதனுல், தாதுநட்டம், இந்திரிய நட்டம் முதலியவைகளும் தீர்ந்து, உடல்வலிமை உடல் வளமை, உடல் வலிவு முதலியவைகளுண்டாகும்.

## 20. வெள்வங்க பற்பம்

கடுத்திடு வங்க மாவது
விரித்திடு நீரிற் பலமொன்று
கடுகியே யுருக்கி யிருபது
விடுவது நெருக்கி
வறுத்திடு நொறுங்கும் வேப்பிலை
கொடுத்திரி கடுகு நாலெடை
மாட்டியே பொடித்து வெருகடி
நாட்டு இருப துநாள்
அடுத்திடும் பாண்டு சோகைநீ
ரொருத்த காமாலை மாந்தையை

யமர்த்தியே டுங்கா ணவுடதஞ்
சுகத்த தீதாமே
உதித்திடு:நோய்கள் இதற்குமுன்
ஞெதுங்கு மேகாணும்
உண்டிடப் பேதம் வருமோ
கண்டறி யாண்டே. 38

தூய்மைசெய்த வெள்வங்கம் 1 பலம் (35 கிராம்), புகைநீர் செல்லத்தக்க அளவு, உலர்ந்த வேப்பிலை செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—வங்கத்தை உருக்கிப் புகைநீரை ஒரு மண்பாத்திரத்தில் போட்டுக்கொண்டு அதில் விடவேண்டும், இந்தப் புகைநீரானது உருக்கிவிட்ட வங்கம் மூழ்கி நிற்கும்படியாக இருக்க வேண்டும். குளிர ஆறினபின்பு வங்கத்தை எடுத்து மறுபடியும் உருக்கி முன்போலவே புகை நீரில் விடவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிச் செய்ய வங்கமானது நொறுங்கித் தூளாகிவிடும். பிறகு இரும்புப் பாத்திரத்தில் அல்லது மண்பாத்திரத்தில் போட்டுக் கொல்லுலையில் வைத்து நன்ருகப் பழுக்க ஊதி ஐந்தைந்து வேப்பிலையைப் போட்டு இரும்பு குச்சியால் துழாவி வரவேண்டும். இவ்விதம் இரண்டு சாமம் வறுத்தெடுக்க களங்கமற்ற பற்பமாகும். எடுத்துப் பொடித்துக் குப்பியில் பத்திரப் படுத்தவும்.

**அளவு** :-2 முதல் 4 குன்றிஎடை.

**துணைமருந்து** :-மேற்ரேல் சீவின சுக்குத்தூள், மிளகுத்தூள், அரிசித்திப்பிலித் தூள் இவை வகைக்குச் சமனெடையாகச் சேர்த்து வைத்துக்கொள்ளவும். இந்தத் திரிகடுகுத் தூளில் ½ வராகனெடை ($1\frac{3}{4}$ கிராம்) எடுத்து மேற்படி பற்பத்தை அளவுப் படிச் சேர்த்துத் தேனில் அல்லது, நெய்யில் கலந்து உண்ணவும்.

**தீரும்நோய்** :-பாண்டு, சோகை, மஞ்சள் நோய், உளமாந்தை முதலிய நோய்கள் தீரும்,

**மருத்துணவு** :-புளி, புளிப்புப் பண்டங்கள் முதலியவைகளை நீக்கவேண்டும்.

**குறிப்பு:-** வெள்வங்க பற்பம் செய்ய பயன்படுத்த வேண்டிய 'புகைநீர்' விவரம் பின் சொல்லப்படும் வெடியுப்புத் திராவகத்திற் காண்க.

## 21. சுயமக்கினிச் செந்தூரம்

அரப்பொடி கழஞ்சு பத்துரெண்
டதனுடன் காந்த
மாறி ரெண்டரிய கெந்தகம்
நாலதி ரசமுஞ் சேர்த்து
விரவியே காரம்பொரித் தொக்க
வரைபழச் சாற்ருல் சாமம்நீ
வேண்டியே மாட்டிக் குமட்டிச்சாறு
மீண்டதி லூட்டிப்
பரவியே முன்போல் சாமம்
நாலதில் சிவப்பு காசெடை
பற்றியே ழரைநா ளுண்டிட
முத்தியே தேனி
லூரமுள்ளசோகை பாண்டுநீ
ரோடரை யாப்புக் கவிசை
ஓட்டி விடுங்கா ணிம்முறை
கூட்டுவீ ராண்டே. 39

தூய்மைசெய்த அய அரப்பொடி $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்), காந்தம் $1\frac{1}{2}$ பலம், தூய்மைசெய்த இரசம் 4 வராகனெடை (14 கிராம்), தூய்மைசெய்த கெந்தகம் 5 வராகனெடை ($17\frac{1}{2}$ கிராம்), பொரித்த வெண்காரம் 5 வராகனெடை ($17\frac{1}{2}$ கிராம்), எலுமிச்சம் பழச்சாறு செல்லத்தக்க அளவு, ஆற்றுத்தும்மட்டிக்காய்ச் சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை** :-முன் சரக்குகளில் இரசத்தையும் கெந்தகத்தையும் சேர்த்தரைத்து நன்ருய்க் கறுத்த பின்பு மற்றச் சரக்குகளையும் சேர்த்து ஒருமணிநேரமரைத்துப் பிறகு, எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு நான்கு சாமமரைத்து ஈரமுலர்ந்த பின்பு கும்மட்டிக்காய்ச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து வெண்கலத்தாலத்திற் போட்டுக் கடும்வெய்யிலில் வைக்க வேண்டும், நன்ருகச் சிவந்து செந்தூரமாகிவிடும். அப்படிச் சிவக்காவிட்டால் முன்போல் எலுமிச்சம்பழச் சாற்றிலும் ஆற்றுத் தும்மட்டிக்காய்ச் சாற்றிலும் முறையே இரண்டிரண்டு சாமமரைத்து முன்போல் சூரியபுடமிடவும், நன்ருய்ச் சிவக்கிறவரையில் இவ்விதம் அரைத்தும் சூரியபுடமிட்டும் சித்தப்படுத்திக்கொள்ள வேண்டியது.

**அளவு** :-1 முதல் $1\frac{1}{2}$ குன்றியடை.

**துணைமருந்து** :-தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளாம்.

**தீரும்நோய்** :-சோகை நோய்கள், பாண்டு நோய்கள், கௌசை

நோய்கள், அரையாப்பு. அக்கினி மந்தம், செரியாமைநோய் ஆகிய வைகள் தீரும்.

**மருத்துணவு:**-நோய்வலிமை, உடல்வலிமை ஆகியவைகளுக் குத் தகுந்தபடி ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்.

## 22. தாளகச் செந்தூரம்

முத்திய தாரம் பலமொன்று
சுத்திசெய் தெடுத்து இலைக்கள்ளி
முடியுள்ள சாற்றில் நாளொன்று
முடுகியே யரைத்துப்
பத்தியா யுலர்த்திக் குப்பியில்
முத்தியாய்ச் செலுத்தி மணலிட்டுப்
பாகமா யெரிப்புக் கமலம்நால்
சாமத்தின் முருக்கு
வெற்றியாய் மலர்போல் சிவப்பதை
சித்தியாய்ப் பணத்தினெடை
மேவிடக் கூட்டிக் கொள்ளெட்டுப்
போதினில் கேளு
மத்தியின் மேகங் குன்மங்கள்
கண்டிடும் பாண்டு பிரமேகம்
மாற்றியே விடுங்கா ணிம்முறை
சாற்றினே னுண்டே. 40

தூய்மைசெய்த மடலரிதாரம் 1 பலம் (35 கிராம்), இலைக் கள்ளிச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை :-** தாளகத்தைக் கல்வத்திலிட்டு நன்ருகப் பொடித்து மேற்படி சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து நான்குசாமம் அரைத்து வெய்யிலில் வைத்து ஈரமில்லாமலுலர்த்திப் பொடித்து ஏழு சீலைமண் செய்த குப்பியிற்போட்டு வாய்க்கு மாக்கல் மூடி யிட்டடைத்து ஏழு சீலைமண் செய்துலர்த்தி ஒரு பானையில் நாலங் குலம் மணலைக் கொட்டி அதன்மேல் முன் குப்பியை வைத்து குப்பி மறையும்படியாக மணலைக்கொட்டி அடுப்பேற்றிக் கமலாக்கினி யாக நான்கு சாமமெரித்துக் குளிர ஆறினபின் எடுக்க முருக்கம் பூப்போன்ற செந்தூரமாகியிருக்கும்.

**அளவு** :-2 முதல் 3 குன்றிஎடை.

**துணைமருந்து** :-தேன், நெய் முதலியவைகளாம்.

**தீரும்நோய்** :- மேகநோய்கள், குன்மநோய்கள், பாண்டு நோய்கள், பிரமேகம் முதலியவைகள் தீரும்.

## 23. அப்பிரேகச் செந்தூரம்

எடுத்திடும் புகைநீரிற் பலமொன்று
அடுத்திடுஞ் சூதம்
இடுரவி தன்னில் வைக்கப் பூத்திடு
மிங்கிலந் தன்னி
லடுத்திடு வீரங் காலெடை
விடுத்திடுங் கல்வம்
அப்பிரேகம் பலமொன்று நிறுத்து
அழகா யிளகவே அரைத்துக்
கடுத்திடும் வெண்ணெய் போலவே
விடுத்திடும் புடத்தில் வைத்தெடு
காரம தாகு மினியென்ன
தாரமு மெடைசேர்
பொடித்திடு கல்வம் புகைநீர்
விடுத்தரை சாமம் உலரவை
புடத்தினி லிடவே சிவப்பதாம்
திடமது ஆண்டே. 41

பூத்திடும் ரசமும் அப்பிரேகம்
ஏத்திடு சிவப்பும் ரெண்டெடை
விரவியே யெடுத்துப் புகைநீரை நிறையவே விட்டு
பார்த்தெடு பீங்கான் தனிலிடு
கோத்திடு உமியின் நெருப்பினில்
பக்தியாய் வறுத்துக் குப்பியில் முத்தியாய்ச் செலுத்தி
காத்திடு மேரு தனிலிட்டுக்
காற்றிடு எரிப்புக்
கமலம்போ லெரித்துப் பனிரெண்டு சாமத்தில் முருக்கு
போற்றிடுங் குப்பி யுடையெடு
சேர்த்திடு பீங்கான் தனிலிட்டுப்
புகைநீரை விட்டு உமிதனில் துகைவறு ஆண்டே. 42

சூலைகள் பலதும் இனியென வாலையில் வாதம் எண்பதுஞ்
சொக்கியே போகும் வெட்டைகள் திக்கென வேகும்
வேலையில் அடையுஞ் சயமுதல் காலைநோய் கொள்ளைப்
பிணிமுதல்
சிக்கெனவேகுந் துணிவதாந் திக்கிலே யேகும்
வாலையாமேனி துளிரது போலவே யாகும் உலகினில்
வாசியுமோடும் சுழிமுனை நாசியி லேறும்
ஆலைபோலாகும் உறுதியா மாலைநோய்கொள்ளை
யண்டாம
லாறியேவிடுங் காணிம்முறை கூறினே னண்டே. 43

(அ) புகைநீர் 1 பலம் (35 கிராம்), தூய்மைசெய்த இரசம் 1 பலம் மேற்படி இரசத்தை அதில் விட்டு வெய்யிலில் வைத்து வர, இரசமானது வெண்ணிறமாகப் பூத்துப் போகும். இதனை எடுத்து வைத்துக்கொள்ளவும்.

(ஆ) கிருஷ்ண அப்பிரேக நவநீதம் 1 பலம் (35 கிராம்), வீரம் $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்); இவ்விரண்டையும் சேர்த்துப் புகைநீரை விட்டு ஒருசாம நேரமரைத்து வில்லை செய்துலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி, ஐந்து சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் இருபது பங் கெடை விராட்டியில்புடமிட்டு ஆறினபின்னெடுத்து அந்த எடை அரிதாரம் சேர்த்துப் பொடித்துப் புகைநீரை விட்டு இரண்டு சாம மரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடிச் சீலை மண் செய்து கவசத்தி னெடைக்கு இருபது பங்கெடை விராட்டியில் புடமிட்டெடுக்க, அப்பிரகம் சிவந்த நிறமுள்ளதாக இருக்கும்.

பிறகு, இந்த அப்பிரகச் சிவப்பு இரண்டு பங்கு, (அ)விலுள்ள இரசவெள்ளை ஒரு பங்கு, இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டுப் புகைநீரைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு மணி நேரமரைத்து இதனை வழித்து நெருப்புப் பீங்கானிற்போட்டு அது ஆழ்ந்திருக்கும்படி யாகப் புகைநீரை விட்டு உமிநெருப்பின் மீது வைத்துப் புகையா மல் விழிப்பாக வறுத்து ஈரமில்லாமல் உலர்ந்தபின்பு ஏழு சீலை மண் செய்த குப்பியிலிட்டு, வாயை மாக்கல்லால் மூடிச் சீலைமண் செய்து ஒரு மண்பானையில் நாலங்குலம் மணல் பரப்பி, அதன் மேல் குப்பியை வைத்து குப்பி மறையும்படியாக மணலைக்கொட்டி அடுப்பேற்றிக் கமலாக்கினியாகப் பன்னிரெண்டு சாமம் எரித்துக் குளிர ஆறினபின் குப்பியை உடைத்துப் பார்க்க முருக்கம் பூப் போன்ற செந்தூரமாகியிருக்கும்.

பிறகு, இதனை நெருப்புப் பீங்கானிலிட்டு அது ஆழ்ந்திருக்கும் படியாகப் புகைநீரை விட்டு முன்போல் உமிநெருப்பில் ஈரம் உல ரும்படியாக வறுத்தெடுத்து முன் போற் குப்பியில் அடைத்து எரித்தெடுக்கச் செந்தூரமாகும்.

அளவு :- 1 முதல் $1\frac{1}{2}$ குன்றி எடை.

**துணைமருந்து :-** தேன், நெய், இஞ்சிச்சாறு முதலியவை களாகும்.

**தீரும்நோய் :-** எல்லாவகைச் சூலைநோய்கள், இளம்பிள்ளை வாதம்முதல் எண்பது வாதவகைகள், வெட்டை நோய்கள், மேக நோய்கள், கப நோய்கள், நச்சு சுரம், பிளேக் சுரம், முதலிய கொள்ளை நோய்கள் ஆகிய நோய்கள் தீரும். இது ஒரு கற்பமாகை ால் இதனைச் சாப்பிட்டவர்கள் உடம்பு செழித்துத் தளிர்த்து

பொலிவை அடையும் உடலில் எவ்வித நோயும் உண்டாகாமல் பலப்படுத்தி வச்சிர உடலாக்கும்.

### 24. வங்க பற்பம்

அருள்கரு வங்க மாறிரண் டதனுடன் சார முன்னரை
யாக்குநா லரைமுன் தூக்கியே சாரம்
பொருவண்டத் தோடெட்டுடன் புகைகின்ற நீறு
கழஞ்சிவை
பற்பமாம் போதவேசலம் விட்டதை எடுத்து
மருளவே யரைத்துக் கெசபுடம் வெருளவே யிடநீ
மாட்டுவாய் மதுவிற் பணவெடை நீட்டுவாய் மேக
முருண்டதோர் குன்மத் தோடங்கள் மருள்கிட்ட
வருமோ விம்முறை
மூட்டிட நீதியால் பின்செகஞ் சூட்டுவா ராண்டே. 44

கருவங்கம் 12 வராகனெடை (42 கிராம்), நாட்டு நவச்சாரம் $4\frac{1}{2}$ வராகனெடை ($15\frac{3}{4}$ கிராம்), கருவங்கத்தை உருக்கி மேற்படி நவச்சாரத்தைத் தூள் செய்து சுருக்கிட்டுப் புகை அடங்கினபின் மறுபடியும் சுருக்குக் கொடுக்க வேண்டியது. இவ்விதம், நவச்சாரத் தூளெல்லாம் செல்கிறவரையில் சுருக்கிட்டு எடுக்க ஒருவகைத் தூய்மையாகும்.

பிறகு தூய்மைசெய்த கோழி முட்டையோடு அல்லது பேரண்டவோடு 8 வராகனெடை (28 கிராம்), நாட்டு நவச்சாரம் $4\frac{1}{2}$ வராகனெடை ($15\frac{3}{4}$ கிராம்), இவ்விரண்டையும் மைபோலத் தூள் செய்து முன் சித்தப்படுத்தியிருக்கிற வங்கத்தை உருக்கி உருக்குமுகத்தில் இதனை ஒவ்வொரு சிட்டிகையாகச் சுருக்கிட்டு இரும்புக் குச்சியால் துழாவி வரவேண்டும். இவ்விதம், எல்லாத் தூள்களும் செல்கிற வரையிற் செய்ய, வங்கமானது சத்தில்லா மல் மடிந்துபோகும். பிறகு, அதை எடுத்துக் கல்வத்திலிட்டுப் புகைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி ஏழு சீலைமண் செய்து கெசபுடமிட்டுக் குளிர ஆறினபின்னெடுக்க, சிறப்புமிகு பற்பமாகி இருக்கும்.

அளவு :- 1 முதல் 2 குன்றிஎடை.

துணைமருந்து :- தேன், நெய் முதலியவைகளாம்.

தீரும்நோய் :- மேக நோய், குன்மம், தோடங்கள் முதலியவை தீரும்.

## 25. மூலவாயு அடை

வெட்டியே வெருகங் கிழங்கது கொட்டியே தேங்கா
யெடை
வெண்ணெய் மீறியே யுள்ளிபடி யொன்றுதேறிய யோம
மட்டுமுன் னெடையாங் காயமோ வளர்மிகு கழஞ்சி
ரெண்டுடன்
மாயவே குறுவை மாவது தூயபொடிய ரைக்கால்
தட்டியே சலமாய் விட்டதைத் தளரவேபிசைந்து
தாக்கிடு விளக்கெண்ணெ யில் நாக்கிடு பொரிப்பூ
அட்டியாம் வாய்வு அக்கினி யருள்மந்த மூலமிதுமுதல்
ஆற்றியே விடுங்கா ணுலகுள்ளோர் போற்றுவீ
ராண்டே.. 45

குறுவை அரிசிமா 1 ஆழாக்கு, தூய்மை செய்த வெருகன் கிழங்குத் தூள் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), பசு வெண்ணெய் 2 பலம் (70 கிராம்), தோலுரித்த வெள்ளைப்பூண்டு $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), ஓமம் $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்), பெருங்காயம் 2 குன்றியெடை.

**வெருகங்கிழங்கு தூய்மை:-** வெருகன்கிழங்கைச் சிறு துண்டு களாகச் செய்து புளித்த மோரிற் போட்டு நன்ருக வேக வைத் தெடுத்து வெய்யிலிலுலர்த்தி இடித்துத் தூள் செய்து கொள்வதே தூய்மையாம்.

**செய்முறை:-** இவை எல்லாவற்றையும் போட்டுப் பிசைந்து தோசை மாவைப்போல் இளகலாகச் செய்து கொள்ளவேண்டும். பிறகு தோசைச் சட்டியைக் காயவைத்து விளக்கெண்ணெய் தடவி அதில் ஒரு சிற்றகப்பையால் மொண்டு விட்டுப் பரப்பி வேக வைத்து வெந்தபின்பு எடுத்துக் கொள்ளவும். இவ்விதம், உடல் வலிமைக்குத் தகுந்தபடி இரண்டு மூன்று சித்தப்படுத்திக்கொள்ள வும். நாள்தோறும் செரிதிறனுக்குத் தகுந்தபடி ஒன்று, இரண்டு மூனறு அடைகள் சாப்பிட்டு வரவும், இவ்விதம், செய்து வரு வதால், மூலக்கிராணி, மூலவாயு, அக்கினி மந்தம், மூலம் முதலிய நோய்கள் தீரும்.

## 26. சூதகசன்னி வலிப்புக்கு மருந்து

பொன்னிறத் தாளகமாம தில் எண்ணியே கழஞ்செடு
பூட்டியே முலைப்பால் விட்டதில் நாட்டியே யரைத்து
கன்னிகை பரையில் வலிமிக மின்னிடைச் சிரசில் இன்னல்செய்
கன முறுநலிக்கு நசியமு மனமுற வியற்றி
உன்னியே பொருத்தித் தேய்த்திட மின்னியசனி யானதும்
உயர்பரி வலியுங் கூனவே யசர்முசல் வலியும்

பன்னிடு கைப்பாம் வேப்பெண்ணெய் தன்னிலேவெந்து உடம்பிலே
போட்டிதைப் பிடிக்கத் தோடம்போங் கேட்டிடு மாண்டே. 46

தூய்மைசெய்த அரிதாரம் $1\frac{1}{4}$ வராகனெடை இதனைக் கல்வத்திலிட்டு நன்ருகப் பொடித்துத் தாய்ப்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமம் அரைக்க வேண்டும். பிறகு இதனை உலர்த்திப் பொடித்துக் குப்பியில் வைத்துக் கொள்ள வேண்டும். அவசியமானபோது, ஒன்று, அல்லது, இரண்டு அரிசியெடை எடுத்துக் கொஞ்சம் தாய்ப்பாலிற் கரைத்துத் துணியில் வடிகட்டி ஒவ்வொரு மூக்குத் துவாரத்தினும் இரண்டு துளிவீதம் நசியஞ் செய்யவேண்டும். இப்படிச் செய்வதால் சூதக சன்னி, வலிப்பு, தலை நோய் முதலியவைகள் தீரும் .

இன்னும், இந்தத் தூள் 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்), வேப்பெண்ணெய் $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்), இவ்விரண்டையும் சேர்த்துக் காய்ச்சி உடலின் மீது பூசித் தேய்க்கச்சன்னி நோய், குதிரைவலி, முயல்வலி, தோடம் முதலியவைகள் போகும்.

## 27. தாம்பிர பற்பம்

செம்பரப்பொடிதான் பலமொன்று வெம்பும்வெள்ளுள்ளித்
தயிலத்தில்
சேர்த்திருபதுநாட் போட்டபின் பார்த்ததை யெடுத்து
அன்புடனடைபோல் ரவிதனில் இன்பமாயுலர்த்திக் கோதுமை
யரிசியின்மாவில் வைத்ததை எரியிடக் கேளு
இன்பத்துயிலினில் கட்டியதை யெடுக்கக் கெட்டியா
மிதில்ரெண்டுசீலை மண்ணது பதில்கொண்டு செய்து
பண்பதாய்முச்சாண் குழிவெட்டி யின்பமாய்ப்போட வெள்ளையாம்
பார்த்திடுமேக மானதைத் தீர்த்திடு மாண்டே. 47

தூய்மை செய்த தாம்பிர அரபொடி 1 பலம் (35 கிராம்), வெள்ளைப்பூண்டுத் தைலம் $2\frac{1}{2}$ பலம் கோதுமைமா செல்லத்தக்க அளவு.

செய்முறை:- வெள்ளுள்ளித் தைலத்தைப் பீங்கான் பாத்திரத்தில் விட்டு அதில் மேற்படி தாம்பிர அரபொடியைப்போட்டு வெய்யிலில் வைத்து வர வேண்டும். நாள்தோறும் இரண்டொருதடவை நன்ருகக் கலக்கியும் வரவேண்டும். இடையில் தைலம் உலர்ந்து போய் விட்டால் செல்லத்தக்க அளவு தைலத்தையும் விட்டுக் கொள்ளவேண்டும். இவ்விதம் இருபது நாட் சென்றபின்பு எடுத்து அடைபோல் தட்டி பீங்கான் பாத்திரத்தில் வைத்து உலர்த்த வேண்டும். இந்த அடையை ஒருநாளைக் கொருதடவை புறமாற்றி வைத்தும் வரவேண்டும். பிறகு கோதுமை மாவைக் குழைத்து இரண்டு அடையாகத்தட்டி அவைகளுக்கு மத்தியில் முன் சித்தப்

படுத்தி வைத்திருக்கிற தாம்பிர அரப்பொடி அடையை வைத்துச் சந்தல்லாமல் இரண்டு அடைகளையும் நசுக்கிப் பொருத்தி உலர்த்தி அதன் மீது இரண்டு சீலேமண் செய்துலர்த்தி மூன்று சாண் சதுரக்குழிவெட்டி அதில் அரைவாசி வறட்டித்தூள், புளியம் புறணித் தூள், ஆட்டுப்புழுக்கை ஆகிய மூன்றையும் சமமாகச்சேர்த்துப் பரப்பிக் கவசத்தை வைத்து அதன்மீது முன்போலவே வறட்டித் தூள், புளியம் புறணித்தூள், ஆட்டுப் புழுக்கைத்தூள் ஆகியவைகளைச் சமபாகமாகச சேர்த்துக் குழிநிறையப்போட்டு நெருப்பிட்டு நன்ருகக்குளிர ஆறினபின்னெடுக்கக் கருஞ்சாயலான வெள்ளைப் பற்பமாயிருக்கும்.

அளவு:— 1 முதல் 2 குன்றிஎடை.

துணைமருந்து:—தேன், நெய், இஞ்சிச்சாறு முதலியவைகளாம்.

தீரும்நோய்:—மேகநோய்கள், குன்மநோய்கள், இருமல் நோய்கள், வாயு நோய்கள் ஆகியவைகள் தீரும்.

## 28. சயக்குலாந்தக ரசாயனம்

துதித்திடுமேலஞ் சாதிக்காய் சூடனேடைதனிற் கிராம்பது
சூட்டிடே வகைக்குக் கழஞ்சிரெண் டுட்டி யேமிளகு
சுதிக்கவேகழஞ்சு மூன்றுதிப் பிலியு மஞ்சினுட
னுதித்த தனிச் சுக்கு நால் சீனியில் எலாங் கதிக்கவே
கொதிக்கவே யிடித்துத்தேன்விட்டுக் கொள்ளவெப்போது
[மின்பமாய்க்
கொடுக்கக்குணமுட னின்பமா யுரைக்கவே கேளு
கொதிக்கப்பின்னெழுந்த மேகமுன் னுதிக்கின்றசயமு மிருமலுங்
கேட்டிடுமிதுநீ ருலகினி னுட்டுவீ ராண்டே. 48

ஏலரிசித் தூள், சாதிக்காய்த் தூள், கருப்பூரத் தூள், இலவங்கத் தூள், இவை வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்), மிளகுத்தூள் $3\frac{3}{4}$ வராகனெடை - மேற்ருேல் சீவின சுக்குத் தூள் 5 வராகனெடை, அரிசித் திப்பிலித்தூள் $6\frac{1}{4}$ வராகனெடை - சீனி சருக்கரை $2\frac{1}{2}$ பலம் ($87\frac{1}{2}$ கிராம்), தேன் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—தூள்களை எல்லாம் ஒன்ருகக் கலந்து சர்க்கரையையுஞ் சேர்த்துக் கல்வத்திலிட்டுத் தேனைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமமரைத்து அரை வராகனெடை நிறையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

அளவு:—1 முதல் $1\frac{1}{2}$ மாத்திரை; காலை, மாலை இரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

**தீரும்நோய்:**—சய நோய், இருமல்நோய், மேகம் முதலியவை கள் தீரும்.

தங்மெனும் பொதிகைவளர் ஞான மூர்த்தி
சாமிகுரு அகத்தியர்தன் றமிழை யாய்ந்து
பொங்கமுடனுலகி லுள்ளோர் பிழைக்க நன்ருய்ப்
புனிதமுட னீற்றினத்தைப் புகழ்ந்து பார்த்து
பங்கமது வாராமற் சரக்குக் கெல்லாம்
பகர்முறையாய்ச் சுத்திசெய்து பாக மாகச்
சங்கையுட னுலகிற்பண் டிதஞ்செய் வோர்க்குத்
தயவாக விம்முறையைச் சாற்றி னேமே. 49

## 29. ஆக்கிராணம் (மூக்கிலுறிஞ்சும் மருந்து)

மட்டில்லா முட்டைச்சாம்பால் - பத்தாறு
வழங்கும் நல்லமிள கதுமூன்று
திட்டமாங்கருநாபி - நாலொன்று
சிறந்த காட்டில்வளர் மேதிப்பால்
சட்டமதா யரைத்துத் - தூளிதமாக்கித்
தளிரு நாசியிடை தனிலூத
விட்டிடுஞ் சன்னிதோட - மதுபோக
மிகவுநல்ல முறையிது வாண்டே. 50

எருமுட்டைச் சாம்பல் (அதாவது வறட்டியை) எரித்துக் குளிர ஆறினபின் தூள்செய்து துணியில் சலித்து எடுத்துக் கொள்வதேயாம். இவ்விதம் துணியில் சலித்துச் செய்யப்பட்ட சாம்பல், 60 வராகனெடை (6 பலம்-210 கிராம்), மிளகுத்தூள் 3 வராகனெடை ($10\frac{1}{2}$ கிராம்), தூய்மை செய்த நாபித்தூள் $\frac{1}{4}$ வராகனெடை, எருக்கம்பால் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—மேற்படி சாமான்களைக் கல்வத்திற் போட்டு அரைத்துக்கலந்து எருக்கம் பாலைத் தெளித்து அரைக்கவேண்டும். பாலை அதிகமாகவிட்டால் குழகுழப் புள்ளதாகிவிடும். அப்படி யாகிவிட்டால் 2 சமமரைத்து வெய்யிலிலுலர்த்தி மறுபடியும் கல் வத்திலிட்டுப் பொடித்துத் தூளாக்கிக் கொள்ளவேண்டும்.

**தீரும்நோய்:**—இந்தத் தூளில் அரைக்குன்றி மணியெடை எடுத்து நாசியில் ஆக்கிராணஞ் செய்விக்கவும். இவ்விதம் நாள் தோறும் இரண்டு மூன்று தடவைகள் செய்துவந்தால், சன்னி தோடம் முதலியவைகள் தீரும்.

## 30. சுரத்துக்குப் புகை

நீரில்வாழும் நலவா - மைத்தோடும்
நிறைந்த வெள்ளுள்ளி தன்தொலித்தோலும்
பாரில்வாழ் பஞ்சநாக - நகத்தோடும்
பருத்ததோ ரண்டமென்ற காக்கையிறகும்
சீருலா வுமெரு - முட்டைத்தீயில்
சிறக்கவோ ரெடையாக வேயெடுத்து
நேரிதை முகந்தனில் - புகையிடவும்
நீங்கியே சுரமொக்கப் போமாண்டே. 51

ஆமையோடு, வெள்ளைப்பூண்டுத் தோல், யானை நகம், அண்டங் காக்கை இறகு இவை வகைக்குச் சமனெடை.

இவை எல்லாவற்றையும் இடித்துத் தூள்செய்து வறட்டித் துண்டைக் கொளுத்திப் புகையடங்கின பின்பு அதில் மேற்படி தூளில் இரண்டொரு வராகனெடை போடப் புகையுண்டாகும். அந்தப் புகையை நோயாளியின் முகத்திற் படும்படி செய்ய எல்லா வகைச் சுரங்களும் தீரும்.

## 31. செம்புக் களங்கு

சித்தியாஞ் செம்பதில்நாலு - நிறுத்து
சிறக்க வெடிசீ னமுநேரே
பத்தியாய்க் குன்றியின்மணி - தானே
பசையாய்த் தானெடை சேர்த்துக்குழப்பி
கத்திடும் பெருவாயுட - னகத்தங்
கனக்கவே பச்சை தானேபிழிந்து
புத்தியாகவே தானே - குழப்பிப்
போக்குச்சொல்லு வேன்கேளுங்காணுண்டே. 52

செம்புதனைத் தகடாகவே - யடித்துச்
சிக்கெனவே சரியோ டதிலிட்டு
வம்பலாக வேமே - லூதியூதி
வளமா யேழுதர முந்துவைத்து
அம்பு போலவேதான் - கட்டிப்போகு
மடவுட னிதுநல்ல முறையாகும்
கம்புதான் ரவிதானெடை - தானே
கறுப்பிதா னெடுவீ ரமுமாண்டே. 53

வீரங் காலெடைதான் - புகைநீரை
விட்டுமே யரைசா மமுமொன்று

காரமாகக் கடந்தனிலே - மூடிக்
கனக்கவே யேழுசீலை மண்செய்து
பாரமாகவே தானெரி - சாமமாம்
பத்திமே லேறுஞ்சித் தமதாகவே
வாரமாகவே வழித்து - அயந்தனை
வாகாகச் சேர்த்தரையுங் காணுண்டே. 54

பத்தியோ டின்னந்தான் - புகைநீரைப்
பதிந்திடவே விட்டரைத் துப்பிழிந்து
சத்தியாக வேதான்ரவி - மேலே
தடவித்தான் ரவிதன்னி லேயிட்டுப்
புத்தியாய்க் கெசந்தான்புட - மிட்டுப்
பொறுக்கவே யெடுசெம் பதுமேகட்டும்
சித்தியாய் மதியெட்டுக்கு - மொன்றிடு
சித்தமாய் மாற்றுறு காணுண்டே. 55

## 32. சுரத்திற்குப் புகை

காட்டில்வாழ் கலைவிட்டை - யுடனே
கனகமான மயிலின் இறகுங்
கூட்டிலே வாழுமரவின் -சட்டை
குதிக்குந் தேசிக்குளம் பதுமொக்க
மாட்டில் வாங்கிவராகிக் - குளம்பு
வழங்கும்வெள் ளுள்ளித்தோ லும்மெழுகு
தேட்டுமிந் துப்பச்சோந்தி - ஒணுன்புகை
சிறந்து காட்டச்சுர மோடுமாண்டே. 56

கலைமான் இலத்தி, மயிலிறகு, பாம்புச்சட்டை, குதிரைக் குளம்பு, மாட்டுக்குளம்பு, பன்றிக்குளம்பு, வெள்ளைப் பூண்டுத் தோல், தேன்மெழுகு, இந்துப்பு, பச்சோந்தித்தோல், இவை வகை ஒன்றுக்குச் சமனெடை.

இவை எல்லாவற்றையும் நன்முயிடித்துத் தூள் செய்து மேற் கண்ட முறைப்படி செய்ய எல்லாவகைச் சுரங்களும் தீரும்.

## 33. ஆக்கிராணம் (மூக்குறிஞ்சு மருந்து)

பற்றியோ டிப்படரும்பேய்ப் - பீர்க்குப்
பருப்பு நாலுபல மதனேடே
சத்துநாவி பலமது - மொன்று
தனித்தநல்ல மிளகதி லொன்று

சுத்தியம்மி தனிலிதை - யிட்டுச்
　　சுருட்டி நன்ருய்ப்பொடி செய்துதட்டி
யொத்தநாசி யிடைதனி -லூத
　　வோடுஞ் சன்னிசுரம் போகுமாண்டே. 57

பேய்ப் பீர்க்கம் விதைப்பருப்பு 4 பலம் (140 கிராம்), தூய்மை செய்த நாபித்தூள் 1 பலம் (35 கிராம்), மிளகுத்தூள் 1 பலம்.

**செய்முறை:**—மேற்கண்டவைகளை அம்மியிலிட்டு 2 சாம மரைத்துக் குப்பியில் பத்திரப்படுத்தவும்.

**தீரும்நோய்:**—இதில் அரைக் குன்றிமணி எடுத்து மூக்கில் உறிஞ்சச் செய்யவேண்டும். இப்படி நாளுக்கு இரண்டொரு தடவை செய்ய சன்னிதோடம், சுரம் ஆகியவைகள் தீரும்.

**குறிப்பு:**—இதில் சொல்லியிருக்கிற கணக்கின்படி செய்வது அதிகப்படியானது. ஆகையால், வராகனெடைக் கணக்காக எடுத்துக் கல்வத்திலிட்டரைத்துக் கொள்வது ஏற்றதாயிருக்கும்.

## இதுவுமது

மேதிச்சாணஞ் சுட்டதோர் - சாம்பல்
　　மிகவு நல்லபல மொன்றெடுத்துச்
சோதியான வெருக்கதின் - பாலில்
　　துவைத்துத் துவைத்தேழுதரமும்
நீதியான மிளகதின் - றூளு
　　நிலைக்க நாலிலொரு பங்குசேர்த்து
ஆதியாயிடை மூக்கினி - லூத
　　அதிக மேகசுர மோடுமாண்டே. 58

எருமைச் சாணியை வறட்டிதட்டி, உலர்த்திச் சுட்டெரித்துச் சாம்பலாக்கித் துணியில் சலித்தத் தூள் 1 பலம் (35 கிராம்) இதனை ஒரு பீங்கான் பாத்திரத்திற் போட்டு இது நன்ருய் நனையும்படியாக அதில் எருக்கம்பாலைக் கறந்துவிட்டுப் பிசைந்து வெய்யிலிலுலர்த்த வேண்டும். அது நன்ருய் உலர்ந்தபின்பு தூள் செய்து முன் பீங்கான் பாத்திரத்திற்போட்டு முன்போற் பாலைக் கலந்து முன்போற் காயவைக்க வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி ஏழு தடவை பாலைவிட்டு உலர்த்தி முடிவாக உலர்த்திப் பொடித்துக் கொள்ளவேண்டும். மிளகுத்தூள் $\frac{1}{4}$ பலம் இவ்விரண்டையும் சேர்த்து ஒரு சாமம் (3 மணி) அரைத்துக் குப்பியில் பத்திரப்படுத்தவும்.

**தீரும்நோய்:**—இதில் இரண்டு மூன்று அரிசி எடை மூக்கில் உறிஞ்சுவிக்க மேக சுரம் முதலியவைகள் தீரும்.

### 34. நசியம் (மூக்கிலூற்றல்)

கொட்டையெண்ணெய் மிளகதி - னோடே
குலாவு திப்பிலிபோட் டதிற்சேர்த்து
விட்டமாமிந் துள்ளியுடனே - விளங்கு
மோரெடை யாகவே தானெடுத்துத்
திட்டமாய் வேலிப்பருத்திச் - சாறுஞ்
சிறந்த பாகலிலைச் சாற்றிலாட்டி
மட்டில்லாத நசியமிடச் - சுரங்கள்
வாங்கியே போமிது மெய்யதாமாண்டே 59

சிற்றாமணக்கம் பருப்பு, மிளகுத்தூள், அரிசித் திப்பிலித்தூள், இந்துப்புத்தூள், தோலுரித்த வெள்ளைப்பூண்டித்தழ் இவை வகைக்கு 2½ வராகனெடை, வேலிப்பருத்திச் சாறு, பாகல் இலைச் சாறு இவை வகைக்குச் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—மேற்படி சரகுகளைக் கல்வத்திலிட்டு ஒன்றாகக் கலக்கும்படியாக ஒருமணி நேரமரைத்துப் பிறகு வேலிப்பருத்திச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமமரைத்து வழித்துப் பீங்கானிலிட்டுலர்த்தி நன்றாயுலர்ந்த பின்பு கல்வத்திலிட்டுப் பொடித்துப் பாகல் இலைச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமமரைத்து மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

**தீரும்நோய்:**—இதனை முலைப்பாலில் இழைத்து இரண்டு அரிசி யெடை மூக்கில் ஊற்றச் செய்யவேண்டும். இதனைத் தூள் செய்து நாசியில் உறிஞ்சல் செய்தும் உபயோகிக்கலாம். இவ்விதம் சில தடவைகள் செய்ய, எல்லாவகைச் சுரங்களும் தீரும்.

### 35. பீனிசத்துக்கு நசியம்

சாரமா குமிளகுட - னிந்து
தனித்தசுக் குவிளங் கங்கஞ்சாவும்
வாரமான பசுவி - னெய்தனில்
வழங்கவிட் டதைவெந்தபின் மூக்கில்
நேரமிரண்டிலும் விட்டிதை - யூத
நிறைந்த மண்டைவலி யதுநிற்கும்
பாரமல்ல நசியஞ்செய் - பீனிசஞ்
பறக்கு முண்மையிது நிசமாண்டே. 60

மிளகுத்தூள், இந்துப்புத்தூள், மேற்றோல் சீவிய சுக்குத்தூள் வாய்விளங்கத்தூள், கஞ்சாத்தூள் இவை வகைக்கு 2½ வராகனெடை (8¾ கிராம்), பசுவின்னெய் 10 பலம் (350 கிராம்).

**செய்முறை:-** மேற்படி தூள்களை அம்மியில் வைத்துக் கொஞ்சம் பசுவின்பால் தெளித்து மைபோலரைத்து மேற்படி நெய்யில்

கரைத்துக் கரிந்து போகாமல் பதமாக எரித்து வடித்துக்கொள்ளவும்.

**தீரும்நோய்:**—இந்த நெய்யில் ஒன்று அல்லது, இரண்டு துளியை ஒவ்வொரு மூக்கிலும் விட்டுவரவும், இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையும் உபயோகித்துவர மண்டைவலி. பீனிச நோய் ஆகியவைகள் தீரும்.

## 36. சன்னிக்குக் கலிக்கம்

நெட்டியாய் வளர்வாகை - விதையும்
நிறைந்த சுக்குக்கடு குடவிந்து
மட்டில்லா மற்சமனது - கூட்டி
வழங்கு முருங்கைப்பட்டைச் சாற்றி லாட்டி
ஓட்டியே கயருயதை - யாக்கி
யுலர்த்தி நல்லபழச் சாற்றிலாட்டி
அட்டியாய்க் கண்ணிலிட்டிடச் - சன்னி
அகலுங்கா ணிசமாகுங் காணண்டே. 61

வாகை விதைத்தூள், மேற்றோல் சீவின சுக்குத்தூள். கடுகு, இந்துப்பு, இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) முருங்கைப் பட்டைச்சாறு செல்லத்தக்க அளவு, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—கடுகைக் கல்வத்திலிட்டு அரைத்துத் தூள் செய்து பிறகு மற்றச்சரக்குகளையும் சேர்த்தரைத்துக் கலந்து முருங்கைப்பட்டைச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வழித்து ஒரு பீங்கானிலிட்டு உலர்த்திக் கொள்ளவும். பிறகு கல்வத்திலிட்டுப் பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

**தீரும்நோய்:**—இந்த மாத்திரையை தாய்ப்பாலில் இழைத்து ஒரு அரிசி அளவு கண்ணிலிட வேண்டும். இப்படி சன்னிமூர்க்கமாயிருக்குங் காலங்களில் கலிக்கமிட சன்னிநோய் தீரும்.

## 37. கலிக்கம் (கண்ணிலிடல்)

ஏற்றதிப்பிலி யிந்தொடு - காயம்
இந்த நல்லமிள கதுமாமா
மாத்ததூ ளதுவாக - வெடுத்து
மதிலே வெண்ணெய்தனை விட்டரைத்து

சீத்தமாம் பசுக்கோமியந் - தன்னிற்
சிறக்க மாட்டிக்கய றதுமாட்டி
நாற்றசம்பழச் சாற்றிலிடக் - கண்ணில்
நாடுசன்னி யெல்லாமோடுங் காணுண்டே. 62

அரிசித்திப்பிலித்தூள், பொரித்த பெருங்காயத்தூள், மிளகுத் தூள், இந்துப்புத்தூள் இவை வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்), பசுவின் வெண்ணெய் 1 பலம் (35 கிராம்), பசுவின் கோமயம் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**— நான்கு சரக்குகளையும் கல்வத்திலிட்டு அரை மணி நேரமரைத்து எல்லாம் கலந்த பின்பு பசுவின் கோமயத்தைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வழித்துப் பீங்கான் பாத்திரத்திற்போட்டு உலர்த்திப் பிறகு கல்வத்திலிட்டுப் பொடித்துப் பசுவின் வெண்ணெயைச் சேர்த்து ஒரு சாமமரைத்துப் பீங்கான் சிமிழிற் பத்திரப்படுத்தவும்.

**அளவு, துணைமருந்து, தீரும்நோய்:**—இதில் ஓர் அரிசி அளவெடுத்து நான்கு துளி எலுமிச்சம்பழச் சாற்றில் இழைத்துக் கண்ணிலிட சன்னி முதலிய நோய்கள் தீரும்.

**குறிப்பு:**— இதன் மூலத்தில் முதலில் வெண்ணெயைச் சேர்த்தரைத்துப் பிறகு பசுவின் கோமயத்தை விட்டரைத்து மாத்திரை செய்யும்படியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும், அனுபவத்தின்படி இங்கெழுதப்பட்டிருக்கிறது. இன்னும், இவ்வித நோய்களில் கண்ணிற்குக் கலிக்கமிட்டால் ஆங்கிலேய மருத்துவர்கள் நகைப்பார்கள். கண்ணிற்குக் கலிக்கமிடுவதைப் பார்க்கிலும் மூக்கில் நசியம் ஆக்கிராணமிடுவது உசிதமெனச் சொல்கின்றார்கள். ஆனால் சித்த ஆயுள்முறை கண் கலிக்கம், நாசி நசியல், முதலியவைகளைச் சொல்கின்றன. கண்ணிற்குக் கலிக்கமிடுவது சில சமயங்களில் அதிகப் பயனுள்ளதெனக் காணப்பட்டிருக்கிறது. ஒரு பெண்ணுக்கு ஒரு தடவை சன்னிகண்டு உணர்வில்லாமலும் பற்கள் கிட்டப்பட்டும் இருந்தது. ஆங்கிலேய டாக்டர்கள் பல மருத்துவங்கள் செய்தும் ஒன்றும் பயனளிக்கவில்லை. வேறு விதியில்லாமையால் மேற்கண்ட மாத்திரை கண்ணிற்குக் கலிக்கமிடப்பட்டது உடனே உணர்வுண்டாகி வாய்திறக்கப்பட்டு வேறு மருந்து கஞ்சி முதலானவைகள் சென்று நோய் குணப்பட்டது. ஆங்கிலேய டாக்டர்கள் சித்த ஆயுள்முறை வைத்தியர்கள் ஆகிய இருவருக்கும் இடையிலுள்ள வேறுபாடுகளை அவரவர்கள் அனுபவத்தினால் தெரிந்து நிச்சயித்துக் கொள்ளவேண்டும்.

### 38. கண் குந்தநோய்க்கு மருந்து

உற்றதான்றி கடுக்காய்ப் - பருப்பு
முயர்ந்த சந்தம்பெருங் காயத்தோடு
பத்தமான திரிகடுகு - கொண்டு
பகர்ந்தகச் சோலத்தோ டேயரைத்து
உற்றநல்ல பழச்சாறு - விட்டு
உருட்டிக் கண்ணில் முலைப் பாலிற்போட
சுற்றுப்புண் விடுங்குந்தமு - நீங்குந்
துளங்குங் கண்காணிது நிசமாண்டே. 63

தான்றிக்காய்ப் பருப்பு, மஞ்சட் கடுக்காய்ப் பருப்பு, வெண் சந்தனத்தூள், பொறித்த பெருங்காயத்தூள், மேற்றோல் சீவின சுக்குத்தூள், மிளகுத்தூள், அரிசித்திப்பிலித்தூள், சீமைக் கிச்சிலிக்கிழங்குத்தூள் இவை வகைக்கு 2 வராகனெடை (7 கிராம்), எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**— மேற்படி தூள்களை எல்லாம் கல்வத்திலிட்டு ஒரு மணி நேரமரைத்துப் பிறகு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

**தீரும்நோய்:**— இந்த மாத்திரையை முலைப்பாலில் இழைத்து ஒரு அரிசி அல்லது, இரண்டரிசி அளவு கண்ணிலிட்டுவர, கண் குந்த நோய் தீரும்.

#### இதுவுமது

பச்சைமஞ்சள் திரிகடு - கோடு
பகர்ந்த வுத்திரா க்கங்கூட்டி
இச்சைமுள்ளிப் பழச்சாற்றி - விட்டு
இசையவே நன்றாய் மசியவரைத்து
உச்சிதப் பழச்சாறு - தனைவிட்
டுறுகக்கட் டிக்கண் ணி லிடக்கேள்
கொச்சை நிம்மபலச் சாற்றினி - விட்டிடக்
குந்தமது நீங்குங் குணமிதாண்டே. 64

பச்சை மஞ்சள், மேற்றோல் சீவின சுக்குத்தூள், மிளகுத்தூள், அரிசித்திப்லித்தூள், உருத்திராட்சத்தூள், இவை வகைக்கு 2½ வராகனெடை. கண்டங்கத்திரிப் பழச்சாறு செல்லத்தக்க அளவு, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**— மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு ஒரு மணி நேரமரைத்து நன்றாகக் கலத்தபின்பு கண்டங்கத்திரிப் பழச்

சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வெய்யி லில் வைத்து உலர்த்திக் கொள்ளவேண்டும். பிறகு, இதனைக் கல் வத்திலிட்டுப் பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும். இதனை எலுமிச்சம் பழச் சாற்றில் இழைத்து இரண்டு அரிசியெடை கண்ணிலிட்டு வர, குந்த நோய் தீரும்.

சத்த சமுத்திரத்தைத் தானுண்ட மெய்ஞ்ஞான
முத்திமிகும் வேத முனிவர்தமி ழின்படிக்குப்
பத்தியுடன் பார்த்துப் பலநூல் முறையாக
வெற்றியுட னேமருந்து மேன்மைபெறக் கூறினனே. 65

## 39. பிள்ளையுண்டாக எண்ணெய்

உற்றபேய்க் குமட்டிவித்துச் சித்திரவாளமுங் கூட்டி
உரைப்பாய் குழித்தயில மிறக்கியேபின்பு
அத்தைக்காசி னெடைதனில் பத்துமஞ்சட் பொடியிட்டு
அன்புடனே மூனறுநாளு நம்பியேயுண்ண
பற்றியே வாய்வதுசுற்றி மத்திய கெர்ப்பமாய்
சித்துப்பா லுண்டாமென்று ஞாலமீதிலே
சத்திய வாக்குமுனிவர் முத்தியாந்தமிழிற் சொன்ன
தன்மையை யறிந்துசெய்ய வுண்மையாகுமே. 66

ஆற்றுக்கொம்மட்டிக்காய் விதை 10 பலம் (360 கிராம்) தூய்மை செய்த வாளப்பருப்பு 10 பலம், இவ்விரண்டையும் வெய்யிலிலுலர்த்திக் குழித்தைலமாக இறக்கிக் கொள்ளவும். (குழித்தைலமிறக்கும் முறைகள் நமது இரசவாத சிந்தாமணியிலும் மற்ற நூல்களிலும் பல தடவைகள் எழுதப்பட்டிருக்கின்றன. அவ சியமானவர்கள் அதைப் பார்த்துச் செய்யவும்) மேற்படித் தைலத் தை ஒரு குப்பியில் பத்திரப்படுத்தவும். மேற்படித்தைலம் 1 வராக னெடை ($3\frac{1}{2}$ கிராம்), விரலிமஞ்சள் தூள் 10 வராகனெடை (35 கிராம்). இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு ஒரு மணி நேர மரைத்து இதனைத்தனியே எடுத்துக் கொள்ளவும். இவ்விதம் சித் தப்படுத்தின தூளின் அளவு 3 முதல் 5 குன்றியெடை.

**துணைமருந்து:**— காப்பிக்கொட்டையை வறுத்திடித்த தூள் $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்), இதில் ஒரு ஆழாக்கு வெந்நீரை விட்டுப் பத்து நிமிட நேரம் மூடிவைத்து நீரை இறுத்து அதில் இரண்டு பலம் பனைவெல்லத்தைப் போட்டுக் கரைத்து வடி கட்டி அதில் காய்ச்சின அரை ஆழாக்குப் பாலையும்விட்டு வைத் துக் கொள்ளவும். இவ்விதம் சித்தப்படுத்தின காப்பி அரை

ஆழாக்கு முதல் முக்கால் ஆழாக்கு வரையில் மேறபடி மருந்தை உண்ண உபயோகிக்கலாம்.

இதனைச் சூதகம் கண்டநாள் முதல் அல்லது, மறுநாள் முதல் ஆரம்பித்து மூன்று நாள் தொடர்ச்சியாகக் காலையில் மாத்திரம் குடித்துவர வேண்டியது. சூதகம் கண்டிருக்கும்போது கழிச்சல் மருந்து கொடுப்பது முறையன்று. ஆயினும், இந்த மருந்தை அந்தக்காலங்களிற்றான் கொடுக்கும்படியாக மருத்துவ நூல்களில் சொல்லப்பட்டிருப்பதுபோலவே அனுபோகத்திலும் நாம் உபயோகித்து வருகின்றோம். இதனால், அநேகருக்குப் பல தடவைகளிலும், சுகமே காணப்பட்டிருக்கின்றது. ஆனால், மருத்துவர்கள் உடல் இயல்பை அறிந்து செய்யவேண்டுமென்பதுதான் முக்கியமானதாகும்.

தீரும்நோய்:—சூதகக்கட்டு, சூதக சம்பந்தமாயுண்டாகும் வயிற்றுநோய், இடுப்புநோய், மாறிவரும் மாதப்பூப்பு (அக்கிரம சூதகம்) முதலிய சூதகசம்பந்தமான எல்லா நோய்களும் நீங்கும். கருப்பையிலுள்ள புழுக்கள் நோய் முதலியவைகள் நீங்கிக் கருப்பம் உண்டாகும்.

குறிப்பு:—இந்த மருந்தினால் சூதகக்கட்டு சூதகபந்தம் ஆகிய நோய் தீராவிட்டால் வேறு மருந்தினாலும் தீராதென்பதற்கு இது ஒரு அறிகுறியாம். முதல் தடவை மூன்றுநாளும் கொடுத்து மறு தடவையில் சூதகம் முறைப்பட்டுவிட்டால் உத்தமம். அப்படி இல்லையாயின் மறு சூதகத்தில் மூன்றுநாளும் உபயோகிக்க வேண்டும். இவ்விதம் மூன்றுமாதத்திலும் உபயோகிக்கவேண்டும் முதற்றடவையிற் கருத்தரிக்கும், அப்படித் தரிக்காவிட்டால் இரண்டாந் தடவையாயினும் தரித்துவிடும். இரண்டாந் தடவை தரிக்காவிட்டால் மூன்றுந்தடவை கட்டாயம் தரித்துவிடும். அப்படியும் தரிக்காவிட்டால் பெரியோர்கள் சாபம் முதலியவைகளினால் கருத்தரிக்காது; என நிதானிக்கவேண்டும். பெரியோர்களினால் அச்சாபம் நீக்கப்பட்டால் ஒருவேளை கருப்பந் தரிக்கலாம்.

## 40. குடிநீர்

பச்சைநெல்லி தான்றிக்கா யிச்சையிஞ்சி போட்டுரெண்டு
படிசலங் காலிலெரி துடியதாகவே
இச்சையாந் திரிகடுகுச் சூரணமேன் பொடியிட்
டிசையமூன் று நாட்கொள்ள விசையதாகவே
கொச்சையரு சிலேப்பன மாமிளைப்புடன் காய்ச்சல்
கொடியசயத்தினோடு பிணிகள் போய்விடும்
மெச்சிப் பொதிகைமுனி யுச்சிதத் தமிழிற்சொன்ன
மேன்மையாம் படிக்கருத நோய்கள் தீருமே. 67

மஞ்சட் கடுக்காய்த்தோல், நெல்லிவற்றல், தான்றிக்காய்த் தோல், மேற்ருேல் சீவின இஞ்சி இவை வகைக்கு, 4 வராகனெடை (14 கிராம்), இவை எல்லாவற்றையுஞ் சிதைத்து இரண்டு ஆழாக்குத் தண்ணீரில் போட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டித் திப்பி நீக்கிக் கீழ்க்காணும் மேன்பொடியைத் தூவிப்பருகச் செய்யவேண்டும்.

**மேன்பொடி:**— மேற்ருேல் சீவின சுக்கு, மிளகு, அரிசித் திப்பிலி, இவற்றைத் தனித்தனி வறுத்திடித்த தூள்கள் $\frac{1}{4}$ வராக னெடை இம்மூன்றையும் ஒன்ருகக் கலந்து கொள்வதே மேன் பொடியாம்.

இந்த மேன்பொடியை முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற குடிநீரில் போட்டுக் கலக்கிப் பருகச் செய்யவேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையும் மூன்று நாள் பருகச் செய்துவர, சிலேத்தும சம்பந்த நோய், இளைப்பு, சுரம், சயம் முதலிய நோய் கள் தீரும்.

## 41. கிராணி மூலத்துக்கு

சாத்தியாய்த் துருக்கஞ் சாதிக்காய் குரோசாணி யபின்
சதிராய் வகைக்குப்பல முதிராமலே
ஆத்தித்தூளதி லெண்ணெ யூத்தியே புன்னைக்காய்
ஆகவகலா மண்டலங் கொள்ளவேகேளு
மேத்தியகிராணி மூலமிசை வயிற்றுவலி கடுப்பு
இரைச்சல் மூலத்தினேவைக் கரைச்சேவிடுமே
சோத்தியமில் லாமல்முனி ஏத்தமாந் தமிழில்சொன்ன
துறையை யறிந்துசெய்ய நிறைவாகுமே. 68

சாதிக்காய்த் தூள், செண்பக மொட்டு, குரோசானியோமம், அபின் இவை வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்), கஞ்சாக் குடிநீர் செல்லத்தக்க அளவு. (சொந்த அநுபவம்)

**செய்முறை:**—மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு அரை மணி நேரமரைத்து ஒன்ருகக் கலந்து மேற்படி குடிநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்துக் குன்றிமணி அளவு மாத் திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

**அளவு:**—1 முதல் 2 மாத்திரை.

**தீரும்நோய்:**—கிராணி மூலம், வயிற்றுவலி, வயிற்றுக் கடுப்பு, வயிற்றிரைச்சல், மூலவேதனை முதலியவைகள் தீரும்.

**குறிப்பு:**—மூல நூலில் சொல்லி இருக்கப்பட்ட முறையானது நமது அனுபவத்திற்கு ஒத்திராமையால் பெரியோர் அனுபவப்படி

இங்கெழுதப்பட்டிருக்கிறது. விருப்பமானவர்கள் அங்கு சொல்லப் பட்டிருக்கின்றபடியும் செய்து கொள்ளலாம்.

### 42. காது மந்தத்துக்கு எண்ணெய்

அண்டமுடனண்டி றைச்சிவெள் ளுள்ளிவசம்பு குக்கி
லதிகபூநாக மது சரியதாகவே
கண்டது கழஞ்செரி விண்டிடு வேப்பெண்ணெய்யில்
காதில்விடப் பத்துநாளில் நீதியாகவே
விண்டதுகேள் நீர்ப்பாய்ச்சல் பண்டுகுத்து ஊச்சல்புழு
வேரடைப்புக் காதிரைச்சல் மாறியேகிடும்
தண்டமிழ்தனில் முனிவர் நன்றதாயுறைப் படிக்குத்
தகுதியாகவே யிம்முறைசெய் யிதமதாகுமே. 69

கோழிமுட்டை மஞ்சட்கரு, நண்டிறைச்சி, தோலுரித்தவெள் ளைப்பூண்டிதழ், வசம்புத்தூள், மைசாட்சி, தூய்மை செய்த பூநாகம், இவை வகைக்கு $1\frac{1}{4}$ வராகனெடை; வேப்பெண்ணெய் 1 பலம்.

**செய்முறை:**— மேற்படி பண்டங்களை மேற்படி எண்ணெயிற் போட்டு நீர்சுண்டும்படியாக எரித்து வடிகட்டிப் பளிங்குக்குப்பி யில் பத்திரப்படுத்தவும்.

**தீரும்நோய்:**—காதில் விடும்போதும் இதனைச் சற்றுக் காய்ச்சி விடவேண்டும். ஒருதுளி அல்லது, இரண்டு துளி விட்டாற்போது மானது. காலை மாலை இரண்டு வேளையும் பத்து நாள்கள் செய்து வரின், காதில் நீர்வருதல், காதுகுத்தல், காதூளச்சல், காதில்புழு, காதடைப்பு, காதிரைச்சல் முதலிய காதுநோய்கள் தீரும்.

### 43. சாரச் சுண்ணம்

பச்சைச்சாரம் பண்ணேநேரே யிச்சையாய்ப் பொடித்
பதியவேமூடி நீதானீதி யாகவே [துக்கடம்
இச்சையாகச் சீலைமண்தான் மெச்சியே யிசைவாய்ச்
இன்பமாக மூன்றுசாம மன்பதாகவே [செய்து
மெச்சியேயெரித்து எடு உச்சிதமாகவே ஏறி
மேலேநின்ற பதங்கத்தைச் சாலவெடுத்து
நிச்சயமாகச் சினத்தை மெச்சியூதியே யெடு
நினைவாகக்கடுஞ் சுண்ணம் வினையதாகுமே. 70

உற்றகடுஞ் சுண்ணமதை யெடுத்திய பதங்கமிட்டு
உண்மைதானெடைக்குஅரை தண்மையாகவே
மெத்தவே வெண்கருவிட்டுச் சித்தமாயெருக்கின் பாலில்
மேன்மையாகவே மூன்றுநாளிலே முறியும

வித்தகமாகவே விட்டரைத்துப் பத்தவேயெடு வில்லைரவி
வேகமாக ஊதியெடு பாகமாகவே
பத்தவேகடுமை யாகும் நித்தமாவீரங் காலும்
பதியவேவிட்டு அரை சதியதாகவே. 71

சாத்தியேயரைத்துத் தார மேத்தியேகவச மிட்டு
சரியாகக் கிளிஞ்சிநீரிற் பிரியவேவைத்து
வாத்தியேயடுப்பு தனி லேத்தியேதியூதிப் போடு
வழியோடே சாமம்ரெண்டு அழியாமலே
நாத்தியேபிரித்துப் பாரு நீற்றிடுந்தாளக நீறு
நானிலத்திற் சயகாசம் வீணிலேபோகும்
பாத்திரமாந் தாளநீற்றைப் பார்த்திடுசெம்பு நூறொன்றில்
பதியவே கொடுத்திடு நிதியதாகுமே. 72

சாத்திஅயச் செம்பெடைக் கேத்தியே நாலிலொன்றே
தானுமுருக்கிப் பதமான சமயத்திலே
நேர்த்தியாய்த் தகடடித்துக் காத்திரமா மவ்வெடைக்கு
நினைவாகக் கெந்திவீரம் புனைகாலுடன்சேர்த்து
ஆத்தியே யரைத்துப் பூசிப் பார்த்தெடுபுட
மஞ்சினில் பதருமற்றுனே துங்கமாகுமே
தூத்தியே யெட்டுக்கொன்று பார்த்திட வயதெட்டுத்
தொல்லுலகி லகத்தியனார்மெல்லவே சொன்னார். 73

## 44. சாரக் கட்டு

சுத்தமுடன்கிளிஞ்சி நீறு பத்தவேயெடுத்துப் பாதி
சுட்டசட்டி தன்னிலிட்டு முட்டப்பரத்தி
பத்தகறியுப்புப் பொடி மெத்தவேபலமும் நாலு
பதிவாக வேபரத்தி அதின்மேற்போடு
சத்தவெடியுப்புப் பொடி நித்தம்பலமூன்று நிறு
சரியாகஅதின்மேலே பிரியமாய்த் தூவு
மெத்தக்கார சீனப்பொடி சித்தமாய்ப் பலமும்ரெண்டு
வீரமாகப் பொடித்துத்தூவுச் சாரமேலிடே. 74

சாரமது பலம்ரெண்டு பாரமாக்கூட்டி வைத்துச்
சலமான சீனப்பொடி பலம்ரெண்டிடு
காரமான வெடியுப்பு பாரப்பொடி பலமூன்று
காதலாக மேலிலிடு பூதலத்திலே
வாரமான கல்லுப்பு சேரப்பொடித்துத் தூவு
வடிவான கிளிஞ்சிநீறு பலமுமேலிடு
கோரமாக அடுப்பினிலே தூரமா யேற்று
குடிகொண்டு கமலமாகக் கடியுடனெரியே. 75

எரித்திடு இரு சாமம் பிரித்தெடுசார மதை
ஏற்குமேயுருகி யிந்தப்பாருக் குள்ளேதான்
விரித்திடுகட்டு மதைச் சரித்தெடு சோரமேலே
வீதமாகப் போட்டிடப் பாதையாகுமே
சரித்திடு நாகமதைப் பரித்திடு அஞ்சுபுகை
சரிவரக் கட்டுமது பரிவதாகுமே
சரித்துநீயெடு பாடாண மெரித்த கௌரிமுதல்
தனித்தனியிப்படி யினிமிகுத் தேறியே. 76

கட்டிடும் பாடாணமுதல் தொட்டிடவே தையுமாகும்
கருத்திலே பாகமதைப் பிரித்தேயெடுநீ
பட்டிடுநீ நூலுக்குச் சொட்டிடு சாமம்போல்
பதியதாகவே பாகமாய் விதியதாகவே
துட்டிடுசெம்பு கேளு முட்டிடு கரியில்வைத்துத்
துடியாகவூதிடுநீ முடியவே கேளும்
கட்டியே சீனமும்நேரே வெட்டிவெடிதா னுப்பு
தடையறக் கத்தநீர் திடமதாகுமே. 77

விட்டுக்குழப்பிக் கொண்டு முட்டதாம்பூர வெடை
வீதியே தோச்சிட்டுமிக ஊதியெடுவே
கட்டுமேதாம் பூரமது விட்டுமே ஊறல்போகும்
காதிபெற விருபது ஊதியுருக்கு
மட்டுமே நாகமதைத் திட்டமா யொன்றுகொடு
மதியிடைதானே சேருவிதி யதாகவே
கட்டியாயிரண்டு மொத்துத் திட்டமாகப் பத்துமாகு
கருத்தினிலுகந்துமுனி வருத்தியே சொன்னர். 78

சத்த சமுத்திரத்தைப் பத்தியாகவே யுண்ட
சரியான மாமுனிவர் பிரிவாயோதி
வித்தகரே ரசவாதி புத்தியிற் பட்டு இதை
வேண்டிய படிசெய்யாமல் நாண்டியேசெய்து
பத்தியதாச் செய்தெடுத்துவிரித்துச் செலவு செய்து
பதிவான சுழிமுனைதான் கெதியும்பெறவே
சுத்தமாய்த் தொய்தநிலை பெற்றுநின்று ஞானமதை
சூட்சமாகப் பார்த்திடவே மோட்சமாகுமே. 79

## 45. கெந்திச் செம்பு

உத்தரவி னுலுபலம் பெற்றிடுகுகையி லிட்டு
உருக்குமுனையதிலே பெருக்கக் கெந்தியும்
பத்தவே யெடைசமனய் முக்தியே கிராசமிடு
பதிவாகத் தான்கரியாய் முதிருமேபாரு

சித்தமாய் வெங்காரிகாலாம் வித்தகமாயதைச் சேர்த்துச்
சிதரும லரைத்துமே பதருமலே
புத்தியா யுருக்கியெடு சத்துவாகுஞ் சத்துக்காலில்
புக்கியே நீவீரமிட்டுத் தொக்கவேகேளே. 80

அண்டனுரை பாணியாலே கண்டுமே சிவந்துநிற்கும்
அதுவேதை ரொம்பவோடும் எதுவாகவே
கண்டரவி தானெடுத்து வுண்டபுளியிலே போலே
காதலாகத் தானேஅடி வேதையாகவே
கொண்டவெடி யுப்புஎடு வண்டமான சீனம்நிறு
கோரமான குன்றிமணி பாரமாஉரை
பண்டுமூன்று மூன்றெடைகண்ட தோரெடையுமாலி
பத்தியே கழுதையுட கத்தம்நீரிடே. 81

கத்தநீரை விட்டுநீயும் பத்தவேகுழப்பிக் கொண்டு
கனிவாக ரவியைத்தான் இனியாகவே
பத்தவே கரியோடதில் சித்தமாகக் காய்ச்சித்தோய்க்க
பதமாகவே வேழுதரம் இதமதாகவே
நித்தமாகவே வெட்டயாக முற்றவேநீதான் தோய்க்க
நிலவர மாகுமேமிக விலையாகுமே
முத்தமார வித்தகட்டில் பத்தியாகவே அங்கி
முனிவுடன் கட்டிப்போடு தனியதாகுமே 82

கட்டியே புடத்தில்வைக்க முட்டியே ரவிநீர்த்து
கனகம்போ லாகுமிது இனமதாகவே
பட்டியாகப் பூசிப்பூசித் துட்டியாக அஞ்சிபுடப்
பதிவாகப் போட்டெடுநீ கெதியதாகவே
வட்டியாரவி யெடைக்குக் கட்டியானஏமஞ்சேர்த்து
வழியோடே எட்டுமதி சுழியாகவே
துட்டியாக ரெண்டுசேரு கொட்டியே நீயூதிப்போட
துரிதமா எட்டுமாகுப் பறியதாகுமே, 83

உற்றபறியே மமதைவிற்றுச் செலவு செய்து
உறுதியாய் ஞானயோகம் பொறுமையாப்பாரு
உத்தமாய்ச் சிவயோகத்தை யெத்திசையும் பார்த்து ஏறி
உறுதியாய் ஞானவழி வருதியாகவே.
மெத்தவே பொதிகைமுனி யுற்றசாத்திரப் படியே
மேன்மையாகப் பார்த்துணர்ந்து ஞானமாகவே
சித்தமாக வுலகத்தின் மெத்தவேபிழைக்கச் சொன்ன
சித்திபெறத் தக்கவர்த முத்தியாகவே. 84

### 46. பித்தளைச் செம்பு

உற்றுமே யெடுத்துச்சேரு பித்தளைபலமு நாலு
உண்மையா யுருட்டித்துணி தன்மையாயிடு
மெத்தவே யுருட்டிக்கட்டி சித்தமாய்ப் பெரியபுடம்
மேனமையாகப் போட்டெடுக்கத் தான்கரியதாம்
சித்தமாகத் தான்கடைநீர் உற்று இதைவிட்டுப் பார்க்க
சித்திபெற நீலநிற முத்தியேகாணும்
வித்தகமாம் எட்டிலொன்று முத்தகமாய் நாத்தஞ்சேரு
வீரமொன்று சேர்த்திடவே காரமாகுமே. 85

ஆதியான பீங்கானிட்டுக் கோதியே யுமியில்வறு
அன்பதாக வில்லைபண்ணித் தென்பதாகவே
வேதியா ரவியிலிடு கோதியே புடமுமொன்று
வித்தகமாய்ப் போட்டெடுக்கச் சித்தம்வேணுங்காண்
சேதிகேளு காரங்காலாம் போதிலேகல்வ மிட்டுச்
சேர்த்துரைத்து மூசையிட்டுப் பார்த்துருக்குங் காண்
கோதிலாநீ கடமையாகப் போதியே யூதிப்போடு
கோதையரே சுத்தரவி பாதையாகுமே. 86

சாத்தியே யெடுத்துரவி போற்றியே யேமமுமிட்டுச்
சரியா யுருக்கியெரி பிரியாமலே
வாத்தியே நொறுக்குவெள்ளி யேத்தியெட்டுத் தானி
வழியோடே கொடுத்தூத வொளியாகுமே [றுத்து
பாத்திடவே மாற்றுஎட்டு ஏத்திடுஞ் செட்டிகையில
பதிவாக விற்றிடவே நிதியாகுமே
ஏத்திடு புனலையுண்ட சாத்திரமா மகத் தியனர்
ஏதமறச் சொன்னதிது வேதையாகுமே. 87

### 47. வெடியுப்புத் திராவகம்

உற்றதொரு பூநீரு பத்துப்பல முமெடு
உண்மையா யமுரியுரி தண்மையாய்விட்டு
மற்றதொரு படியொன்று சித்திரமாய் விட்டுக்காய்ச்சி
மகவேக மாகுமாநீ தகைமையாய்வைத்துச்
சித்தமாக வுப்புவரும் வித்தகமாய்ப் பீங்கானிடு
சிதருவுமி நெரும்பினிலே பதறாமல்வறு
கத்தமகா வெடிபத்துச் சித்தமாகச் சினம்ரெட்டி
கருத்தாக அஞ்சுடனே நிறுத்துமெடுத்தே. 88

எடுத்துமே சட்டியிடு அடுத்துமே வாலைமூடு
இதமாகத் தாவெரிக்க முதனீர்வறுநீ

தடுத்துமே தள்ளியெடு கடுத்துக்கடை நீர்பிடி
தண்மையாய்மஞ்சள் போலுண்மை யாகுமாம்
தொடுத்து அரக்குக்குப்பி எடுத்ததி லடைத்துத்
தொன்மைபெறக்ச் சரக்கெல்லா நன்மையாயரைநீ
படுத்துமுன் காய்ச்சியிடுந் தொடுத்த பூநீருமிடை
பதிவானவீரம் எடைவிதி போலச்சேரே. 89

சேர்த்துமே பொடிக்கநிறம் பார்த்திடமஞ்சட் போலாம்
சிக்கெனவே புகைநீரை மிக்கெனவிட்டு
காத்துமே பீங்கானிலிட்டு ஏத்தியே யுமியில்வறு
காரணமாத் தான்சுண்டப் பாரமாயெரி
பார்த்துமே வழித்துக்கடம் ஏத்திடவே தானுள்ளிட்டுப்
பதிவாய்க் கடத்தைமூடி யிதமாகச்சீலே
வேர்த்திடவேசீலேயேமு சாத்திடவே செய்துஎரி
விதமாகப் பத்துநாளில் அதமதாகுமே. 90

ஏறவே பொரித்துஎடு சாரவேவழித்து அடி
இன்பமாக நின்றதோடே அன்பமாயிட்டுக்
காரவே கடைநீர்விட்டுத் தூரவே வறுத்துஎரி
கனிவாக அஞ்சுதரம் இனிமையாயெரி
வாரவே யெடுத்துப்பாரு கூறவே சிவப்புமாகும்
வடிவாகப் பணவெடை துடியாகவுண
வாரமான சூலேரோகங் கோரமான வாதமுதல்
வகையா யேழரைநாளில் தொகையதாகுமே. 91

கத்தவர கத்தியமுனி சித்திரத் தமிழிற்சொல்லக்
கருத்தினி லுகந்தபடி யுரைத்திடவேதான்
சித்தம்வைத்து வாதிமார்கள் வெற்றியாச் செய்துசெயஞ்
சித்திபெற வீரமதைப் பற்றிற்செந்தூரி
குற்றமற்ற ரவிமேலே பத்தியாகவே கட்டிக்
குணமாகப் புடம்போடப் பணமதாகுமே
பத்தனும் புலத்தியற்கு மெத்தவே யுன்னிமலேயப்
பதிமகாமுனி சொன்ன விதியுமானதே. 92

## 48. சுரத்துக்குக் குடிநீர்

சந்தனமிலா மிச்சைவெப் பாலேமுத்தக்காசு சுக்கு
சரியாகப் படியொன்று நீரதில்விட்டுச்
சிந்திடா தெரிகாலதிற் சீனியிட்டருந்து
சலதோடஞ்சுர வாய்வு அகலாதவாதம்
தொந்தமாம் பித்தகாமலே துடிகண்ணீர்க் கட்டுமினுந்
தொடர்ந்த நோயுள்ளதெலாங் கடந்துசென்றிடுஞ்

சொந்தமுனிவர் சொன்ன அந்தமாந் தமிழ்ப்படிக்கு
தொல்லுலகிலே கியாழம் வெல்லும்பாருமே. 93

வெண்சந்தனம், இலாமிச்சைவேர், வெட்பாலையரிசி,கோரைக் கிழங்கு, மேற்றோல் சீவின சுக்கு இவை வகைக்கு 3 வராகனெடை (10½ கிராம்), சீனிசருக்கரை ½ பலம் (17½ கிராம்).

**செய்முறை:**—மேற்கண்ட சரக்குகளை நன்ருகச் சிதைத்து இரண்டு ஆழாக்குத் தண்ணீரில்போட்டு அரை ஆழாக்காகச் சுண்ட வைத்து இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கின குடிநீரில் மேற்படி சீனிச் சருக்ரையைப் போட்டுக் கலக்கிப் பருகச் செய்யவேண்டும். இவ் விதம் காலை, மாலை இரண்டுவேளையும் செய்துவர சலதோடம், சுரம், வாயு, பித்த காமாலை, கண்ணில் நீர்வடிதல் முதலிய நோய் கள் தீரும்.

### 49. கண்ணுக்கு மாத்திரை

காசுக்கட்டி பலமொன்று களிப்பாக்கு அதில்பாதி
கண்ணுப்பீளைச் சாறுவிட்டுத் திண்ணமாகவே
ஆசுவாய்க் கலத்தூரிலிட்டு மாசில்லா மற்ருன்
அரைத்ததியக் கயறதாக்கி மசியமாகவே
மாசியாங்கண்குந்தம் வெள்ளைக்கூசியே நீர்ப்பாய்ச் சலுக்கும்
மகிழப் புளியிலைநீரில் அளவாயிடவே
பேசியவாய் மூடுமுன்பு வாசியாமென்று முனிவர்
பொங்கமாஞ் சாத்திரப்படி சங்கையாகுமே. 94

காய்ச்சுக்கட்டித்தூள் 1 பலம் (35 கிராம்) களிப்பாக்குத் தூள் ½ பலம் (17½ கிராம்) சிறுபீளைச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—மேற்படி தூள்களை வெண்கலப் பாத்திரத்திற் போட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு வேப்பங் கட்டை மத்தின் நடுவில் அரையணுவைப் புதைத்து அதனல் நான்கு சாமங்கடைந்து நீண்ட சிறு மாத்திரைகளாகச் செய்து நிழ லிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும். அவசியமான காலங் களில் புளியிலைச் சாற்றிலிழைத்துக் கண்ணிலிட்டு வரவும்.

**தீரும்நோய்:**—கண்குந்தம், கண்பூ, கண்கூசுதல், கண்ணீர்வடி தல் ஆகியவை தீரும்.

### 50. கிராணிக்கு அடை

உற்றவெந்தயஞ் சீரக மற்றபன்றிநெய் யதனில்
ஊட்டியேசலத்தை விட்டு ஆட்டியேநன்ருய்

பத்தமாய்வெள்ளைக் கருவை மெத்தவேய திலிட்டுப்
பாச்சியெடுத் தெண்ணெ யிதில் மாச்சிதையொக்க
வற்றவே யெரித்தடையாய்ப் பத்தமா வெரித்துஉண்ண
வளர்ந்த கிராணியது பிளங்தேகிடும்
கற்றவர் பொதிகைமுனி யுற்றசாத்திரத் தின்படி
கண்டுசெய்ய விம்முறைதா னன்றதாகுமே. 95

வெந்தயம் 1 வராகனெடை($3\frac{1}{2}$கிராம்), சீரகம் 1 வராகனெடை; இவ்விரண்டையும் அரைப்பலம் பன்றி நெய்விட்டு வறுத்து மணம் வந்த நேரத்தில் கொஞ்சம் நீர்விட்டுக் கடைந்து அதில் ஒருகோழி முட்டையின் வெள்ளையம்பிலியை விட்டுக் கொஞ்சம் விளக்கெண்ணெயை விட்டு அரைபக்குவமாகப் பொரிந்த பக்குவத்திலெடுத்துக் காலையிற் சாப்பிட வேண்டும். இவ்விதம் மாலையும் உபயோகிக்க வேண்டும். இவ்விதம் செய்துவந்தால் கிராணி நோய் தீரும்.

## 51. காமாலை பாண்டுக்கு மருந்து

வேறில்லாக் கரியவங்கங் கூறியபலமோ ஒன்று
மிககபசுங் கோமியத்திற் றுருக்கதாகவே
மாறியே யீரஞ்சுதரம் சீறியே சாய்த்திடுமதில்
வாய்த்ததிரி கடுகதுவும் நேர்த்தியாகவே
கூறிய வெருகடி தேறியேரெண்டு நேரங்
கொள்ள வரட்சைகாமாலை யுள்ளபாண்டுமே
நாறிய விடபாகம் வேரிய சுவாசமுள
மாந்தைகள திகப்பிணி தீர்ந்துபோகுமே. 96

கருவங்கம் 1 பலம் (35 கிராம்), சங்குத்தூள் 1 பலம், மேற்றோல் சீவிய சுக்குத்தூள், மிளகுத்தூள், அரிசித்திப்பிலித்தூள் வகைக்கு 2 பலம்.

**செய்முறை:—** வங்கத்தையுருக்கிப் பசுமூத்திரத்திற் சாய்க்க வேண்டும். இந்த மூத்திரமானது வங்கம் ஆழ்ந்திருக்கும்படியாகத் தாராளமாக இருக்கவேண்டும். ஒரு தடவைக்கு உபயோகித்த மூத்திரம் மறுதடவைக்குதவாது. தடவைக்குத்தடவை புதிதாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் பத்துத்தடவை மடக்கி மடக்கி உருக்கிச் சாய்த்தெடுக்க வங்கம் தூய்மையாகும். இவ்விதம் தூய்மை செய்த வங்கத்தைச் சட்டியிலிட்டுருக்கி நன்றாயுருகின பின்பு மேற்படி சங்குப் பொடியைச் சிறுகச் சிறுகச் சுருக்கிட்டு இரும்புக் கட்டப்பாரையாற்கடைந்து வரவும் வேண்டும். இவ்விதம், சங்குத்தூளெல்லாம் செல்கிற வரையிற் செய்து வந்தால் வங்கமானது மடிந்து பற்பமாகிவிடும். இந்தப்பற்பத்துடன் முன் தூள்களையும் சேர்த்துக் குப்பியிற் பத்திரப்படுத்தவேண்டும்.

அளவு:— ½ முதல் 1 வராகனெடை

**துணைமருந்து:**—தேன், நெய், கையாந்தகரையை அரைத்த விழுது, கிழ்க்காய் நெல்லியை அரைத்தவிழுது முதலியவை களாகும்.

**தீரும்நோய்:**— மஞ்சள்நோய் வகைகள், பாண்டுவகைகள், நஞ்சுவீறு, சுவாச நோய், உளமாந்தை, மேகவறட்சி முதலிய வைகள் தீரும்.

### 51. (அ) கவசைச் செயநீர்

ஆனசீனக் காரமுடன் வெடியுப்பு நவட்சாரம்
அரிய வெங்காரநாலுஞ் சரியதாகவே
பானமாஞ் சாராயம்விட்டு ஏனமாந்தூள திற்சிப்பி
பற்றியெரித்த சுண்ண முற்றதிலாட்டி
தானமாஞ் செயநீர்தா னூறுமாங் காசெடையது
தாக்கிடக்க விசைநோவு தீர்த்திடலாமே
தேனுலாவிய பொதிகை ஞானமாமுனிவர் சொன்ன
செம்மையாஞ் சாத்திரப்படி யுண்மையாகுமே. 97

படிக்காரம், வெடியுப்பு, நவச்சாரம், வெண்காரம், இவை வகைக்கு 2½ பலம் (87½ கிராம்), தாளித்த சிப்பிச் சுண்ணம் 10 பலம் (350 கிராம்), பிராந்திசாராயம் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**— முன் நான்கு சரக்குகளையும் கல்வத்திற் போட் டுப் பொடித்துச் சாராயத்தைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாம மரைத்துப் பிறகு சுண்ணும்பைச் சேர்த்து மேற்படி சாராயத்தையே சிறுகச் சிறுகவிட்டு இன்னொரு சாமமுமரைத்துப பீங்கான் பாத்தி ரத்தில் வைத்து மூடிச் சந்தில்லாமற் சீலைமண் செய்து ஈரமான இடத்திற் புதைத்து இருபது நாட்சென்றபின் எடுக்க செயநீர் இறங்கியிருக்கும். அதைக் குப்பியில் பத்திரப்படுத்திக்கொள்ள வும்.

அளவு:— 1¼ முதல் 2 வராகனெடை.

**துணைமருந்து:**—இளநீர், முள்ளங்கிக்கிழங்குச் சாறு, நெருஞ் சிற் குடிநீர், சுரைக்கொடிக் குடிநீர் முதல்ய நீர்க்கழிச்சல் முறை களாம்.

**தீரும்நோய்:**—கௌசை, பாண்டு முதலியவைகள் தீரும்,

### 52. மூலக்கிராணிக்கு அடை

மெத்தவே பிரண்டைத்தளிர் உற்றகுறு வைப்பரிசி
மிகவேயிடித்து நன்றாய்த் தகமையாய்க்கேளும்

உற்றதொரு ரவியிற்காட்டி நத்தியவடையாய் மாட்டி
　　உகந்துவிளக் கெண்ணெயுநீ மகிழ்ந்திடவிட்டே
பற்றவே சுட்டதையுண்ண வுற்றவுடம்பு வீக்கம்
　　பதிந்த கிராணிமூல மிகந்தேகிடுய
முத்திய பசுமோர்சோறு நித்தமு முண்ணென்று
　　முனிமொழி யின்படிச்செய்யக் குணமதாகுமே. 98

குறுவையரிசி ½ ஆழாக்கு, பிரண்டைத்தளிர் ½பலம்(17½கிராம்) இரண்டையும் உரலிலிட்டு இடித்து மாவாசத் தெள்ளி வெய்யிலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும். அவசியமான காலங்களில் கொஞ்சம் மாவைஎடுத்துத் தண்ணீரிற்கரைத்துதோசைச்சட்டியில் கொஞ்சம் விளக்கெண்ணெய் வார்த்து முன் கரைத்தமாவைவிட்டு அடையாகச் சுட்டுச் சாப்பிடவேண்டும். இவ்விதம் காலையில் ஒரு வேளை,அல்லது,காலைமாலை இரண்டுவேளையும் சமயோசிதம்போல சாப்பிட்டுவர மூலக்கிராணி தீரும்.

சித்தி யாஞ்சக லகலைக் கியானமுந்
　　தெளிந்து சிங்கப்பொதிகை மலைதனில்
பத்தி யாய்வரு கின்றத போதனர்
　　பணிந்துபோற்ற மிகுந்து வளர்கின்ற
சத்திய வாக்குக்கு றுமுனி வேதநூல்
　　சகல சிந்து புகழ்ந்திடப் பாடியே
வெற்றி யாக வுலகினிலே நன்றாய்
　　விளங்கப்பாடி யறிவிப்பார் பாருமே. 99

## 53. சூத மாத்திரை (பொது மருந்து)

ஏறழிஞ்சிப் பட்டைவெட்டிக் காயவைத்து - நல்ல
　　இலுப்பைப்பூச் சலம்விட்டு ரவியதில்வைத்துச்
சீறியே யிடித்ததனைத் தூளிதமாக்கி - நாழித்
　　தூளுக்கு ரசம்பலம் நாலதிற்சேர்த்து
வேறில்லை கற்சுண்ணம் காலதிற்றூற்று - குப்பை
　　மேனிச்சாறு விட்டரைத்து வெல்லத்திலுண்ணு
காறலோ டிருமல்சு வாசகாசமும்—எலிக்
　　கடியினை குன்மம்கண் துடிகள்போமே. 100

ஏறழிஞ்சிப்பட்டையை வெய்யிலிலுலர்த்தி ஒரு பாத்திரத்திற் போட்டு இலுப்பைப்பூவை இடித்தசாற்றை அதில்விடவேண்டும். அந்தச் சாறனது பட்டைக்குமேல் நாலங்குலமிருக்க வேண்டும். அதாவது, பட்டை நாலங்குலம் சாற்றில் அமிழ்ந்திருக்கவேண்டும். பிறகு இதனைப் பிரதிதினமும் வெய்யிலில் வைத்து நாள்தோறும் நாலைந்து தடவைகள் நன்றாகப்புரட்டிக் கொடுத்து வரவும் வேண்

டும். கொஞ்சமும் ஈரமில்லாமல் நன்முக உலர்ந்த பின்பு இடித்துத் தூளாக்கித் துணியில் சலித்து வைத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் சித்தப்படுத்தப்பட்ட ஏறழிஞ்சிப்பட்டைத் தூள் $\frac{1}{4}$ படி தூய்மை செய்த இரசம் 4 பலம் (140 கிராம்), வடிகட்டின கற்சுண்ணும்பு 4 பலம், குப்பை மேனிச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**— மேற்கண்ட கற்சுண்ணத்தையும், மேற்படி தூள்களையும் கலந்து வைத்துக்கொள்ள வேண்டும். இரசத்தைக் கல்வத்திலிட்டு மேற்படி தூள்களையும் கொஞ்சமெடுத்து அதிற்றூவிக் குப்பைமேனிச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து அரைக்கவேண்டும். இவ்விதம் கொஞ்சந்தூளைப் போட்டுப் பிறகு மேற்படி குப்பைமேனி இரசத்தைவிட்டு நான்கு சாமநேரமரைத்துக் குன்றி மணி அளவு மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

**அளவு:**— 1 முதல் 2 மாத்திரை

**துணைமருந்து:**— வெல்லம், சர்க்கரை ஆகியவைகளாம்.

**தீரும்நோய்:**— இருமல், சுவாசகாசம், எலிக்கடி ஈளைநோய், குன்ம நோய் முதலியவைகள் தீரும்.

## 54. கண்டாவிழ்தம்

சித்திரம துரமேலந் திப்பிலியக்கிரா - காரஞ்
சிறந்தமுந்திரிப் பழநிறைந்த பூரமும்
முத்திரவ வலம்புரிக்கா யிலுப்பைப்பூக் கோரோசனை
முடுகிய நன்னரி முத்தக்காசு
உத்திராட்சம் உலர்த்தினநாங் கூழ்ப்பூச்சி - மஞ்சட்கரு
உயர்சந்தனம் முசுறுமுட்டை சேரிஞ்சிச்சாற்றில்
பற்றியரைத்தே மூலைப்பா லதிலுண்ண - வறட்சி
பகர்ந்ததிரி தோடங்காணு தொழிந்துபோமே. 101

அதிமதுரம், ஏலம், திப்பிலி, அக்கிராகாரம், திராட்சைப் பழம், பச்சைக்கருப்பூரம், வலம்புரிக்காய், உலர்ந்த இலுப்பைப்பூ கோரோசனை, நன்னரி, முத்தக்காசு, உத்திராக்கம், உலர்த்தின பூநாகம் (இதனை வறுத்துக்கொள்ளவும்) கோழிமுட்டை மஞ்சட் கரு, சந்தனம், முசுறுமுட்டை இவை வகைக்கு 1 வராகனெடை (3$\frac{1}{2}$ கிராம்), (இவற்றுள் சரக்குகளைத் தனியாக இடித்துத் துணியிற் சலித்த தூளை மேற்கண்ட எடை நிறுத்தெடுத்துக்கொள்ளவேண்டும்) இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**— இவை எல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு ஒன்ருகச் சேர்த்தரைத்து கலந்து இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து மெழுகைப்போலாவது, அல்லது, மாத்திரைகளாகவாவது செய்து பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

**தீரும்நோய்:**—இதனை முலைப்பாலில் இழைத்து நாக்கில் தடவிவர, திரிதோடம், சன்னி வகைகள், நாவறட்சி, சீதளத்தாலுண்டாகுந் தாகம் முதலிய அநேக சீதள நோய்கள் தீரும்.

உற்றநொச்சி யிலைதும்பை துளசிகஞ்சாங் - கோரை
உயர்ந்தகுப்பை மேனிசெருப்படி கையானும்
மித்தபொடு தலைச்சாறு மிகுவசம்பு - சுக்கு
மிளகுதிப்பிலி விகடுக்காய் வெள்ளுள்ளியிந்து
வத்தபெருங்காய மூன்று சரியெடையதாய்க் - கழஞ்சு
வகையாப் பிரமாணங் காலமேயுண்ண
சித்திரக்க டுககற்றிப் பத்தாறு - போதில்
செய்திடுகை கண்டதுண்மை மெய்யதுபோமே. 102

## 55. புறஎருவாய் முளைக்கு மருந்து (வெளிமூலம்)

சீருலாவு கெந்தகமும் வேறுதாரமும் - துத்தம்
துருசியுடன் லிங்கமது சரியெடைசேர்
பாரிதையெ டுத்துக்கல்வ மீதினில்வைத்து - அரைக்கப்
பண்ணினதூள் தன்னில்நெய்யை யுண்ணவிட்டு
சேரும்வெளி மூலமதில் மீறியேதொட்டுப் - புளி
தீயனலரை நாழிகை காயவேபட்டு
நேருடன் விழுந்துவிடும் மாறுமேகெட்டு - இது
நிச்சயம்புகழ்ந்துசெய்யவுச்சிதங்காணும். 103

தூய்மை செய்த கெந்தகம், தூய்மை செய்த அரிதாரம் துத்தம், துருசு, இலிங்கம், இவை வகைக்கு 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்), நெய் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—இவையெல்லாவற்றையும் கல்வத்திலிட்டு ஒரு மணிநேரமரைத்து நன்ருகக் கலந்தபின்பு பசுவின் நெய்யைச் சிறுகச் சிறுக விட்டு, 2 சாமமறைத்துக்களிப்பு பதமாக எடுத்துக் கொள்ளவேண்டும். பின் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

**தீரும்நோய்:**—இந்தக் களிம்பிற் கொஞ்சமெடுத்து மூல முளைகளின்மீது தடவி புளியம் புறணியை நெருப்பாக்கி அந்த அனலில்

அரை நாழிகை நேரம் காட்டவேண்டும். இவ்விதம் சமயோசிதம் போல தினமுஞ் செய்துவர வெளியிலுள்ள மூல முளைகள் (புறஎரு வாய் முளைகள்) தீய்ந்து உதிர்ந்துபோகும்.

## 56. கிரந்திப் புண்ணுக்கு மருந்து

வெள்ளிய முருங்கைப்பட்டை துள்ளியபலம்-ஒன்றுகூட்டி
மீதினிற்காயங் கழஞ்சுதான திற்சேர்த்து
அள்ளிய பசுவின்வெண்ணெய் மெள்ள முன்னெடைகள்
ஆர்க்கவே யரைத்துருட்டித் தீர்க்கமாகவே
கொள்ளவே யஞ்சாறுபோது கிரந்திபுண்ணும்-புரை
கெட்டிடுமோர்விட்டு அன்னஞ்சட்டி யிலுண்ணு
வள்ளலார் பொதிகைமுனி தெள்ளுதமிழிற் - சொன்ன
வாறிதன் படிக்குட்கொள்ள மாறிப்போமே. 104

வெண் முருக்கம்பட்டை 1 பலம் (35 கிராம்), பெருங்காயம் $1\frac{1}{4}$ வராகனெடை, பசுவின் வெண்ணெய் $1\frac{1}{4}$ பலம்.

**செய்முறை:**—முருக்கம்பட்டையை அம்மியில் வைத்து மைபோலரைத்துப் பிறகு காயத்தையுஞ் சேர்த்தரைத்து மைபோலான பின்பு எடுத்து வெண்ணெயையுஞ் சேர்த்துக் கலந்து ஆறுபங்காகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

**தீரும்நோய்:**—இதனை வேளைக்கு ஒவ்வொரு உருண்டையாக காலை, மாலை இரண்டுவேளையும் சாப்பிட்டுவர வேண்டும். மோர் சோறு தவிர மற்றதொன்றுமாகாது. இவ்விதம் செய்துவந்தால் கிரந்திப்புண் முதலியவை தீரும்.

## 57. நீலகாசத்துக்கு நசியம் (மூக்குறிஞ்சல்)

நான்முகன் கழஞ்சுதாரம் நாலுபங்கிலே - யொன்று
நல்லமுலைப் பாலில்விட்டுச் சொல்லவேகேளும்
கானக்களாலத் தப்பால்முன் தானமாகவே - யதிற்
சலந்துநன்ருய் ரேகித்துக்கலந்து கொண்டுதான்
தானிதை மூக்கினிலூற்றி மூன்றுநேரம் - நிறுத்திடத்
தனித்தகலக் குத்துடனே துணித்தகாசமும்
வானமீதினிற் பறந்து நாணுதோடுமே - முனிவர்
வாக்கியப்படிக்குச் செய்த தாக்கிப்பாருமே. 105

பிரமதண்டுக் கொழுந்து 4 வராகனெடை, தூய்மைசெய்த அரிதாரம் 1 வராகனெடை இவ்விரண்டையும் அரைத்துக் குன்றிமணி அளவு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும். அவசியமான காலங்களில் கொஞ்சம் தாய்ப்

பாலில் மேற்படி மாத்திரையை இழைத்து வடிகட்டி நோயாளியை மல்லாந்து படுக்கச்செய்து மூக்கில் இரண்டிரண்டு துளி நசியஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலை, மாலை இரண்டுவேளையும் மூன்று நாள்கள் செய்தால் கண்ணிலுண்டாகும் காசநோய், நீலகாச நோய் ஆகிய கண்நோய்கள் தீரும்.

## 58. விக்கலுக்கு மருந்து

சாம்பிராணி வெல்லமுடன் ருனேசேர்த்து - நல்ல
சரியா யரைத்துருட்டி மிளகது போல்
வாம்பிராணி யேழரைநா ளுண்டபோது - வலி
வாயுவுடன் விக்கலது மாண்டுபோகும்
பாம்பிராணி நஞ்செல்லாம் பறறியே'தாம் - பதி
பாதிமதி யணிந்தவர் சொன்னநீதி
கோம்பொதிகை யகத்தியர் பிழைக்கச்சொன்ன - நீதி
கொள்ளையாக வயித்தியங் கோடிதானே. 106

பாற்சாம்பிராணி 1 பலம் (35 கிராம்), இதனைக் கல்வத்தில் பொடித்து கொள்ளவேண்டும். இதற்குச் சமனெடை நல்லவெல்லம் இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்தில ஒருமணிநேரம் அரைத்து மிளகு அளவு மாத்திரைகள் செய்து வைத்துக்கொள்ளவேண்டும்.

**அளவு:**—1 முதல் 2 மாத்திரை.

**துணைமருந்து:**—சர்க்கரை, சுக்கை அரைத்த விழுது முதலியவைகளாம்.

**தீரும்நோய்:**—காலை மாலை இரண்டுவேளையும் ஏழுபொழுது மூன்றரைநாள் உபயோகிக்க, விக்கல், வாயு, மார்புநோவு, வயிற்று நோவு ஆகியவைகள் தீரும்.

## 59. அப்பிரேகத் தாளகச் சுண்ணம்

உற்றசீன மொருபல மூதியெடுத்துக் - கரி
உண்மையாக அப்பிரேக மணலிலொன்று
மெத்தெனவே வீரமதைச் சேர்த்தேயரைத்து - வில்லை
மேன்மையாகப் பிடித்தாக்கால் வெண்ணெய்
சித்தெனவே கரிவைத்து ஊதியெடுத்து - அதில்
சித்தமாகச் சீனச்சுண்ண மிசையவேசேர்த்து
கற்றவரே ஊதக்கடுஞ் சுண்ணமாகு - மிதைக்
கண்டுகண்டு தாளகத்தில் அங்கியூட்டே. 107

சீருலாவிய சுண்ணம் வேறுலாவிய - சட்டி
சித்திரமாய் நடுவிலே பத்திரத்துடன்

காருலாவி யேவைத்து வேறுஅனல் தீப் - போடு
கமலம்போ லெரித்திடு விமலனைப்பணி
பாருலாவிய பனிவேரு மோரெண்டு - போடு
பதிவாகக் கொக்கிறகு நிதிபோலாகும்
சேருலாவியே காசம் வேறுலாவியே - யீளை
செயமாகப் போகுமுனி தனியேசொன்னார். 108

படிக்காரம் 1 பலம் (35 கிராம்), இதனை நமது இரசவாத சிந்தாமணி பாகத்திற் சொல்லியிருக்கிறபடி கரியில் வைத்தூதிச் சுண்ணமாக்கிக் கொள்ளவேண்டும்.

பிறகு அப்பிரேக நவநீதம் ஒருபங்கு, சவ்வீரம் 1 பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து நீர்வார்த்தரைக்க வெண்ணெய்போலாகும். இதனை வில்லைசெய்து படிகாரத்தை ஊதினதுபோலவே இதனையும் கரியில் வைத்தூதி எடுக்கச் சுண்ணமாகும்.

பிறகு தூய்மைசெய்த தாளகம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்) இது ஒரே கட்டியாக இருக்கவேண்டும். பிறகு முன் சித்தப்படுத்தின சீனச் சுண்ணம் $\frac{1}{4}$ பலம், சித்தப்படுத்தின அப்பிரேகச் சுண்ணம் $\frac{1}{4}$ பலம் இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு உமிழ்நீரைவிட்டு மெழுகுபோலரைத்துத் தாளகக்கட்டிக்குக் கவசம்செய்துலர்த்தி ஒருசட்டியில் நாலங்குல கனம் கற்சுண்ணமிட்டு அதன் நடுவில் முன் சிததப்படுத்தின தாளகக் கட்டியைவைத்து அதன்மேலும் சுண்ணத்தைக் கொட்டிச் சட்டி வாயைமூடிச் சீலைமண்செய்து அடுப்பேற்றி நான்கு சாமம் எரித்து ஆறினபின்னெடுக்க, வெண்மையான பற்பமாகி இருக்கும்.

**அளவு:**—1 முதல் 2 குன்றிமணி எடை.

**துணைமருந்து:**—தேன், நெய், வெண்ணெய் ஆகியவைகளாம்.

**தீரும்நோய்:**—சயம், காசம், ஈளை, இருமல் முதலிய கபநோய்களெல்லாம் தீரும்.

**குறிப்பு:**—மேற்கண்டபடி படிக்காரத்தையும் அப்பிரேகத்தையும் சுண்ணம்செய்து தாளகத்திற்கு அங்கிபூட்டி பற்பம்செய்வதில் சிறப்பென்பதிற் சந்தேகமில்லை. அப்படிச் செய்யக்கூடாத சமையங்களில் படிக்காரத்தைப் பொரித்ததூள் தாளகத்திற்குச்சமனெடை, அப்பிரேக நவநீதம் தாளகத்திற்குச் சமனெடை, இந்த இரண்டையும் உமிழ்நீர்விட்டரைத்து மேற்படி தாளகத்திற்குக் கவசம்செய்து முன்போற் சுண்ணாம்பில் வைத்தெரித்தெடுக்கப் பற்பமாகிவிடும், மேற்கண்ட நோய்களில் உபயோகிக்கலாம்

### 60. காரீயச் செப்பு

நீலனும் பலமெடுத்து நின்றெடைநாற்றஞ் - சேரு
நிற்கவே யரைத்துச்சாமந் தொக்கவேகட்டி
ஆலகால மாகவே புடத்தைப்போடு - இது
அன்பதாக வெந்துமே சிங்கிகூட்டிக்
காலமாக வெட்டுக்கு ஒன்றுகூட்டி - ஊது
கனகம்போல ரவியாகும் நொறுக்குவெள்ளி
சீலமாக எட்டுக்கு நாலுகூட்டி - பேமம்
சித்திபெறக் கொடுத்தாது முத்திகாணண்டே. 109

முத்திபெறவேமத்தைப் புடத்தைப்போடு - காவி
முன்னிலையாய்த் தானிறங்கும் உப்புக்குத்தான்
சத்தியமாய்த் தானிறங்கும் கண்டமாத்து - இனிச்
சரியாய யோகமது துறந்திதுகாண்
சித்திபெறவகத்தியர் சொன்னநீதி - ஏமம்
சித்திபெற்று மூவுலகி லிருப்பதாகும்
பத்தியதோ ரகத்தியர் பத்தமாகவே - சொன்ன
பரிவாக மாமுனிவர் விரிவாச்சொன்னார். 110

### 61. சன்னிதோடத்திற்கு நசியம்

உற்றநொச்சிக் கொழுந்தும்புங் கங்கொழுந்தும் - நல்ல
உறைப்பதா மிளகுள்ளி நிறைக்கவேகல்லில்
பத்தவே நசுக்கியதை மெத்தவெள்ளைச்சீ - லையில்
பரப்பியே பிழிந்துசா றுறைப்புடன்கூசு
மெத்தவே அமுரியிங் கெடையாய்ச்சேர்த்து - மூக்கில்
மேன்மையாய்ப் பிழியச்சன்னி கூசியேயோடும்
கற்றவர் பொதிகைமுனி யுற்றதமிழின் - படிக்கிக்
கண்டுசெய்ய வேதோகடங்கள கன்றுபோகுமே. 111

வெண்ணொச்சிக் கொழுந்து, புங்கங்கொழுந்து, மிளகுத் தூள், தோலுரித்த வெள்ளைப்பூண்டு, இவை வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்); இவை எல்லாவற்றையும் நன்றாயிடித்து ஒரு மெல்லிய துணியில் வைத்துப் பிழிந்துகொண்ட சாற்றிற்குச் சமனெடை பசுவின் மூத்திரத்தைச் சேர்த்து ஒன்று அல்லது, இரண்டு துளி நாசியில் நசியஞ் செய்யவேண்டும். இவ்விதம் நாளுக்கு இரண்டொரு தடவை செய்ய எல்லாவகைச் சன்னிகளும் (கலப்புநோய்) தீரும்.

### 62. திமிர்வாதத்துக்கு ஒற்றடம்

வட்டநொச்சி வேம்பிலையும் புங்கப்பட்டை - யுடனே
வளர்திருகு கள்ளிவேர் துளிர்கொத்தானும்

திட்டமாய் வறுத்துநன்றாய் வெள்ளை மண்ணுடன் - சேர்த்
துத்திறமுடனுடம்பிலொற்று நலமதாயிட
சட்டமாகுமாந் திமிர்வாதமேல் குத்து - மொழிகள்
தன்னிலத்திலே திரண்டைநீரை யுண்ணுமே
மட்டில்லாத தமிழ்முனிவர் திட்டமாய்ச்சொன்ன - படி
மானிலத்திற் செய்பிணிகள் தானகலுமே. 112

வெண்ணொச்சியிலை, வேப்பிலை, புங்கம்பட்டை, திருகுக்கள்ளி வேர், திருகுக்கள்ளிக்கொழுந்து முடக்கொத்தானிலை இவை வகைக்குச் சமனெடை. இவையெல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்திடித்து இதற்குச் சமனெடை ஆற்று வெள்ளைமணலைச் சேர்த்து ஓட்டில் வறுத்துத் துணியில் வைத்து நோயுள்ள இடத்தில் ஒற்றட மிடவேண்டும். இவ்விதம் நோயின் பலத்திற்குத் தகுந்தபடி நாள் தோறும் மூன்று நான்கு தடவைகள் ஒற்றடமிட்டு வந்தால், திமிர் வாதம், முழங்கால் வாதம், முட்டுவாதம், குத்துவாதம் முதலிய வைகள் தீரும்.

மருத்துணவு:—நோய் வலிமைக்குத் தகுந்தபடி புளி, புகை முதலியவைகளை நீக்கிவைக்கவேண்டும்.

## 63. வாயுவுக்கு இளகம்

ஆதியாந் திப்பிலிகுரோசானியோமமும் - நிறை
யாமான விராகனென்று நெய்படிகாலில்
கோதில்லாமலேவறுத்து இளகம்பாக்கு - நிறையாய்
கொண்டே யேழுபொழு துண்டுதான்பாரு
சோதிசேர் தமிழ்முனிவர் நீதியாய்நிலத் - தவர்க்குச்
சொன்னபடி செய்வாயுவை வெல்லும்பாருமே
கைத்திடும் பூனைவங்கி யற்றதோர்பலம் - பத்தஞ்சு
கரியசீரகமூன்று சரியாய்ச்சேர்த்தே. 113

அரிசித் திப்பிலி, குரோசானியோமம் இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்), சீனிசர்க்கரை அல்லது, நாட்டுச் சர்க்கரை 4 பலம் (140 கிராம்), பசுவின் நெய் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—நெய்யைச் சட்டியில் வார்த்து நன்றாகக் கொதித்த பின்பு திப்பிலியைப் போட்டுப் பொன்னிறமாக வறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதமே குரோசானியோமத்தையும் நெய்யிற் பொன்னிறமாக வறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். பிறகு இவ்விரண்டையும் அம்மியில் வைத்து மைபோலரைத்துச் சர்க்கரையைப் பாகுசெய்து பக்குவத்தில் மேற்படி சூரணத்தைப் போட்டுக் கிளறி இளக பதமாக எடுத்துக் கொள்ளவும்.

**அளவு:**—*1* முதல் *2* வராகனெடை. காலை மாலை இரண்டு வேளையும் உபயோகிக்கவும்.

*தீரும்நோய்:*—எல்லாவகை வாயுக்களும் தீரும்.

### 63. (அ) பிரமேகப் பொதுமருந்து

*உற்றதோர் தூளிதஞ்செய்து நறுநெயிற் - குழைத்து*
*உகந்தொரு மண்டலந் தொடர்ந்துகொள்ளவே*
*மெத்தவுஷ்ண ரோகங்கள் நீரடைப்புப் - பிரமேகம்*
*மேலெரிவுகாந்தல் குன்மம் மூளையுருக்கி*
*தத்திய சதையடைப்புத் தாகமுடன்வாய் - நாத்தங்கள்*
*தணியு முனிவர்வாக்குப் புனிதருமே.* **114**

*நெருஞ்சிமுட்தூள் 15 பலம், கருஞ்சீரகத்தூள் 3 பலம் (105 கிராம்), சீனிச்சர்க்கரை 18 பலம்.*

**செய்முறை:-** இவை எல்லாவற்றையும் ஒன்ருக கலந்து பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

**அளவு:**— $1\frac{1}{2}$ முதல் $2\frac{1}{2}$ வராகனெடை.

**துணைமருந்து:**—பசுவினெய், பசுவின் வெண்ணெய் முதலியவைகளாகும்.

**தீரும்நோய்:**— இதனை நாற்பதுநாளுபயோகித்தால், எல்லாவகைப்பிரமேகங்கள், நீரைடைப்பு, சதையடைப்பு, கல்லடைப்பு, கைகாலெறிவு, கைகால் காந்துதல், உட்டிணநோய்கள், எலும்புருக்கி நோய், குன்ம நோய் ஆகியவைகள் தீரும்.

விண்ணுயர மேவுசொன்ன மிக்க பொகிகைவளர்
பண்ணு தமிழ்முனிவர் பாடுதமி முக்குவந்து
எண்ணு முலகிலுள்ளோர்க் கெதிர்த்த பிணியாமதனை
உண்ணும் படிக்கிமருந் துகந்தருளிச் செய்தனரே. **115**

### 64. மிருதார்சிங்கிச் செம்பு

ஏறுகின்ற நீலனது பலமுநாலு - கரி
இனமான ஓடுதனில் ஊதியெடுக்க
ஆறவே நிறமது வெள்ளையாகு - மீதில்
ஆதியான சித்தருபி முக்காலெடு
காறவே பாணிவிட்டு அரைத்துக்கொண்டு - வில்லை
கனமாக வேபிடித்து ரவியிலிடு
மூறவே புடமிட்டு எடுத்துப்பாரு - கரி
முக்கியமாய்த் தானிருக்கும் மிருமோபோமே. **116**

சித்தியான கரிக்கிநீ பாதிசிங்கி - சேருஞ்
சித்தமாகப் பாணியாலே யரைத்து வில்லை
முத்திபெறப் புடமிட்டு எடுத்துக்கொள்ளு - கல்வம்
முக்கியமா யிட்டுக்காரங் காலாகும்
வெற்றிபெற வரைத்துநீ குகையிலிட்டு - ஊத
வித்தகமாய்த் தானுருக்க வுருகிநிற்கும்
பத்தியதாய்ச் சிவப்பென்ன முருக்குநிறம் - ரவி
பாகமாக வட்டுப்போல நிற்கும்போமே. 117

சீருலாவும் தட்டத்தைத் தானெடுத்துடை - நடு
சித்தமாக நின்றரவி தானெடுத்துப்
பாரிலாவு ரவியெடை தங்கஞ்சேர்த்து - அடி
பாகமாகத் தகடாக்கிப் பூசவேகேளு
கோருநாற்றம் வாலைரசம் தானெடையுரம் - அரை
குணமாகத் தகட்டதின் மேலேபூசி
வாருடனே புடம்போடக் கரியதாகும் - தினம்
வடிவாகவெட்டிரண்டு சேர்த்துமே கொள்ளே. 118

சேர்த்திடவே மதியேமம் எட்டதாகும் - இது
சித்திபெறப் புடத்துக்கு இறங்கும்பாரு
பார்த்திடவே ஞானவழி யடுத்துப்பாரு - நல்ல
பாதையாகு மோனமய மாகும்பாரு
கோத்திரமெல்லாம்பிழைப்புப் பார்த்திடுங்காணும் - மிகு
குணமான மாமுவர் அருளிச்செய்தார்
சாற்றிடவே ஞானவான் றனக்குச்சொன்ன - நல்ல
சங்கையிது செய்திடுகை கண்டதாமே. 119

தங்கமில்லா ரசவாதந் தாளவுமாகும் - இதில்
தானே கெந்திசேராததால் வண்ணமில்லை
உங்களுக்குப்புத்தி சொன்னாற் கேட்கமாட்டீ - ரிது
உண்மையிது சத்தியமா யுற்றுப்பாரு
திங்களணி வேணியர் சொன்னவாதம் - இதைத்
திறமாகப் பாகப்படி செய்துரெண்டு
சங்கவரை கண்டதொரு மாமுனிவர் - சொன்ன
சரியான நீதியிது தெரியப்பாரே. 120

ஓதியறி வதுவேதம் நீதிகாணும் - ஆண்டே
உற்றுப்பாரு பாகமெலாஞ் சித்தத்தில்தோணும்
நீதியறிந்தேளரிந்தால் ஞானமாகும் - வாதம்
நித்தமுந்தான் சோதித்தால் ஒன்றுதோணும்

போதியறிந் தாலல்லோ மந்திரமாகும் - இது
போதமில் லாமலே தந்திரமாகும்
ஊதியறிந் தாலல்லோ வாதமாகும் - வாதம்
உற்றுமே பாராட்டால் ஒன்றுமில்லையே. 121

## 65. நொறுக்கு வெள்ளி

செம்புதனைப் புடம்போட்டு எடுத்துக்கொள்ளு - இதை
செம்மையாக வூதியெடு வெய்யோனுகும்
செம்புடேன நொறுங்கின வெள்ளிகேளு - கெந்தி
செப்பமாகத்தான் கெந்திமதியெ டைசேரு
தம்பமாகக் கல்வதிலிட்டுப் பொடித்துக் - கொஞ்சந்
தாக்கிடவே மதியூதி அதன்மேலிடு
வம்புடனே கரிபோல வெட்டையாகும் - எடு
வாகுபெறநீ கடையில் வடிவதாமே. 122

வடிவாக நீகடையில் வைத்துமேயூதி - குடு
வாகுபெறக் காரீயம் எடையேசேரு
முடிவாக வூதியெடு கந்தம்போல - நன்ரு
முக்கச்சுடப் பசும்பொன்னும் தக்கபதியே
துடிவான செம்பெடுத்து இதிலேவாக்கு - ஊது
சுத்தமாகக் கடுமையா யூதிப்போடு
நெடிவாக ஓமத்தைப் பாதிசேரு - வாதம்
நொடிக்குமுன் வாதம்வரும் மெய்யிது ஆண்டே. 123

ஊதுகிறவூதுதப்பில் பழுப்புமாகும் - இதில்
உற்றுமே ஓமத்தைக் கூடவேசேர்த்தால்
வாதுகிற பழுப்பாலே புடமிறங்கா - மட்டம்
வடிவாக வூதியெடு மட்டஞ்சேர்த்தால்
சோதிமய மகுமே புடமிறங்கும் - சித்திரை
சித்தம்வைத்து இப்படியே செய்யுமார்க்கம்
சாதுவாக அகத்தியர் சொன்னநீதி - இதைச்
சரிவர சோதித்தால் சரியாகுமே. 124

சரியாகும்வெள்ளிதனில் ரவியைக்கூட்டி - ஊது
சல்தியாய்ப் பசுமைமபோ லெடுத்துக்கொண்டு
பிரியாமல் ஏமமது பாதியிட்டு - ஊது
பெலக்குமே அந்தமதி புடமிறங்கும்
விரியாமல் மூசைதன்னை யெடுத்துப்பாரு - இது
வித்தகமாய்ப் பொன்னுகும் எத்திசைமெய்க்கும்
துரிதமா யிந்தவித்தை சுளுவுமாகும் - இது
சூட்சமாகும் ஏமவித்தை நிலைக்குமாண்டே. 125

எட்டுமதி நாலுரவி சேர்த்துருக்கி - ஊது
இன்பமாகப் பசுமையா யெடுத்துக்கொண்டு
வட்டமாகத் தாயைத்தான் பாதிசேர்த்து - ஊது
வடிவாக மாற்றேழு காணுமேகாணும்
முட்டவே தானகுருதான் கட்டியிறங்கும் - இது
முக்கியமாய்ச் செய்துபிழை ஞானம்பாரு
அட்டதிக் கெல்லாம்புகழு மகத்தியனார் - எனக்
கருளிய சொற்படிக்குப் புகழ்ந்துசொன்னேன். 126

அட்டதிசை யும்புகழு மன்பா மகத்தியர்தான்
சட்டமாய் வாதமெல்லாஞ்சரியாகச் சொல்வினர்காண்
விட்ட குறையிருந்தால் மேவும் ரச வாதம்வரும்
தொட்டசெயலாலே தொல்லுலகில் வாழ்வீர்காண். 127

## 66. அயக் களங்கு

உற்றவயந் தன்னிடைை பெற்றிடுகெந்தி - இட்டு
உருக்கி யெடுத்துப்பின் னெறுக்கிக்காரம்
பற்றவே கொடுததுருக்கு நித்தியமா - யுருகும்
பரிவாக எடுத்துப்பார் விதிமணியாம்
சித்தமாக மணிமுக்கால் பெற்றிடுஞ்சிங்கி - யிட்டு
சிதறுமல் மணிக்குக்கால் பதிவாய்வீரம்
நத்தியரைத்துச் சாமம்வித் தகமாயநீல - ஊத்தான்
நாடியே யுமிநெருப்பில் வாட்டியேயாண்டே. 128

வாட்டியெடு வெள்ளையாகுங் கூட்டிமுன்சரக் - கெடுத்து
வடிவாகச் சேர்த்தரைத்து முடியக்கேளும்
கோட்டியே செய்யாமலதைத் தாட்டிகமாய்த்தா - னரை
குணமாகப் பாணியா சினமரைத்து
முட்டியே யீரஞ்சுசாமம் ஊட்டியேவில்லை - கட்டி
முனிவர் காவியிடி தணியவேதான்
பாட்டிகமாய்க் காயவைத்துக் காட்டியேசுண்ணச் - சீலை
பதிவாகச் செய்துபுடம் விதியாய்ப்போடே. 129

விதியாகப் பாட்டெடுத்து நிதியாகக்காரங் - கூட்டி
விநப்பமா யுருக்கிடத் திரவியாம்
கெதிபெறவே தானெடுத்து முதியனெறுக்கி - வெள்ளி
கேட்டிடவே பூட்டிஞலு மூட்டிதைச்சேரு
பதியாக வூதியெடு சதியாப்பசுமை - யாகும்
பற்றியெ டுபாதியிடு சித்தியாயேமம்
நதியாக வூதியெடு கதிபெறவெட்ட - தாகும்
நத்தியே பொதிகைமுனி சத்தியாய்ச்சொன்னார். 130

சித்திபெற வுப்புக்குத்தான் மெத்தவேயருகு - கட்டுஞ்
செகமெய்த்த தங்கமிது தகமையாம்பாரு
முத்திபெற்ற மாமுனிவர் சத்தியவாக்காற் - சொன்ன
மேன்மையை யறிந்துசெய்யத் தாழ்வுமாகுமோ
மெத்திடவே தங்கமாகுஞ் சித்தியாய்விற்றுச் - சோர்வு
விதமாக ஒன்றுமில்லை அதமாகுமாம்
நித்தியவாசகர் சொன்ன மத்திமபாக - முறையை
நிலவர மாகச்செய்யப் புலனாகுமே. 131

சொன்ன பொதிகைவளர் சுருதிதனை யாராய்ந்து
பன்னுதமிழ் வாதமெலாம் பலனாகப் பாடினர்காண்
நன்னயமாய்ப் பாகமெலாம் நாடிமிகப் பார்த்துச்செய
முன்னமே செய்தா லுறுதிகாண் மானிடரே. 132

## 67. இரசக் கட்டு

நிறுத்தடியோ சூதம் நிறுத்தடியோ பள்ளி
நேடஞ்சொல்ல வேண்டாம் நிறுத்தடியோ
கறுத்தமுகில் வண்ணனைப் பேணியே நீத்தியெடு
கருத்தாகச் சூதமது கட்டிடுமாண்டே. (நிறு)

வங்கச்சுண் ணமும்பண்ணு வழியோடே வீரமிடு
வகையாகக் குழைத்துமே நீலன்மேலிடு
துங்கமாய்க் கவுதாரித் துடியாப்புடமு மிட்டுத்
துருசு தானீறிடும் அதியவேதை. (நிறு)

சீனச்சுண்ணமும் பண்ணு ஆனசாரமுங் கட்டு
சித்திபெற நாகத்தை முத்தியாற்கொல்லு
வானகமுந் தங்கமிடு கோனகமாக வுடைத்து
வடிவாகச் செந்தூரம் படியவேசெய்யே. (நிறு)

துருசுக்குட் செம்பைக்கொல்லு வரிசையாய் வாதமாகுக்
தொல்லுலகில் ரசவாத மெல்லவேயாகும்
கரிபோலே துருசானாற் புரியாவாதமு மாகும்
கற்றுவந்தால் பாகம்வருஞ் சித்தியாகுமே. (நிறு)

வாதத் திறவுக்கோலாஞ் சூதத்தாற் றூன்றிறந்து
வடிவாகப் பார்த்தாலே முடியுமைந்தும்
போதத்துடனே செய்து நீதத்துட னெடுத்தாற்
புத்தியான வாதம்வருஞ்சித்தி காணுண்டே. (நிறு)

அண்டத்தோல் பலம்நாலு கண்டுஎடுத்து உவர்
ஆதியான சுண்ணம்நேரே பாணிலவிட்டு

துண்டமாயெரித் திடண்டம் எண்ணெயை வாங்கும்
தொல்லுல கிலூதிட மெல்லவேகேளும். (நிறு)

சுண்ணத்தை வங்கத்தில் வின்னமாய்க் கொடுத்தூது
சுத்திபெற மேலதாகுந் தப்பிலாதெடு
வின்னமில் லாரவியைச் சொன்னபடி போலிடு
விருப்பமாயண்டச் சுண்ணம் பெருக்கமேலிட
பெரியபுட மூன்றுபோடு பிரியப்பட வுருக்கு
பேத்திடுங் காண்களிம்பறு முத்தியுமாகுந்
துரியமாய் மதியெட்டில் விரியவேரவி ரெண்டு
தொக்கவே சேர்த்திட மிக்கவேழுமாம். 133

ஆதி பொதிகைவள ரன்பா மகத்தியர்தான்
நீதியாய் வாதம் நிலவரமாய்ப் பாடினர்காண்
சோதி சகலகலை தொல்லுலகிற் சோதித்து
வாதிக்கச் சொன்ன வகையான வாதமுங்காண். 134

68. நிணக்கழிச்சலுக்கு மருந்து (கழிச்சல் முறை)

முத்தியாய்க் கடுக்காய் பலமொன்று
சுத்தி செய்தெடுத்து ரோகணி
முடுகியே பலமாம் ஆவாரை
விடுகியே பலமாம்
வெற்றியாய்த் தட்டிச் சட்டியில்
சித்தியாய்க் கொட்டிப் பாணிநால்
விருப்பமாய் விட்டு எரித்திடு
குறுக்கியே யொன்ருய்
புத்தியா யிறுத்துக் கண்டெடை
பெற்றிடுந் தேங்காய் பாலிடு
புதியவே சீனி பலமது
நிதிபெறக் கலந்து
நத்தியா யரைச்சேர் கொண்ட
நலமுள பேதி சீதமும்
நாடியே விடுங்காண் சோகையும்
வாடிடு மாண்டே. 135

**மஞ்சட் கடுக்காய்த்தோல் 1 பலம் (35 கிராம்), கடுகுரோகணி 1 பலம், குச்சி, காம்பு நீக்கிய சூரத்து நிலஆவாரை 1 பலம், இவை களைச் சிதைத்து அரைப்படி தண்ணீரில் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டி எடுத்துக் கொள்ளவும். உடல் இயல்புக்குத் தகுந்தபடி இந்தக் குடிநீர் 1 முதல் 2 பலம் வரை தேங்காய்த் தனிப்பால் 1 - 2 பலம், சீனிச்சருக்கரை**

1 பலம், (அவரவர்களுக்குப் பிரியமான வரையிற் சேர்த்துக் கொள்ளலாம்). இதனைக் காலையிற் சாப்பிட்டால் பழைய மலங்கள் வெளிப்பட்டு அது சம்பந்தமாக உண்டாயிருக்கிற நிணக்கழிச்சல் (சீதபேதி) நிற்கும். சோகை நோய் தீரும்.

குறிப்பு:—நிணக்கழிச்சலானது பழையமலம் தங்கி நின்று அதனால், உண்டாயிருந்தால், எவ்விதமான கட்டுவாதி மருந்துகளைக் கொடுத்தபோதிலும் அது கட்டுப்படாது. அவ்வித நோய்க்கு இவ்வித மருந்துகளை உபயோகித்துப் பழைய மலங்களை நீக்கித் தூய்மை செய்து பிறகு கட்டுவாதிகளை உபயோகித்துக் கட்டுப் படுத்தவேண்டும். அவசியமானால், மேற்படி குடிநீரை அளவில் அதிகப் படுத்திக்கொள்ளலாம். ஒன்றைவிட்டொரு நாளாகப் பல தடவைகளும் உபயோகிக்கலாம்.

### 69. சகலநோய்த் தீர்வு தோசை

கதித்திடும் வாளம் பலமது
கருதியே யெடுத்துச் சட்டியில்
கரியதாய்க் கறுக்கி யெடுத்திடு
பிரியமாய்க் கேளும்
விதித்தி டுமவிளக் கெண்ணெயில்
விருப்பமாய்ப் படியா மிதிலிடு
விரும்பி யேயிடு நன்றாய்
வரும் பதந் தன்னில்
பதித்திடுங் குறுவை யரிசி
பாகமா யிடித்துத் தெள்ளியே
பதிவுடன் பாணி யதிலிடு
விதியதாய்க் குழப்பி
உதித்துட னெண்ணெய்ச் சட்டியில்
உண்மையாய்த் தடவித் தோசைபோ
லூற்றியே சுட்டுத் தினமுணு
நித்திய மாண்டே. 136

மண்டல மருந்த வயிற்றினில்
மலமுடன் கிருமி யெடுபடும்
மயக்கமும் போகுந் திடப்படும்
நயத்திலே பதிவாம்
கண்டிடுங் குன்மஞ் சூலையும்
கதிபெறு வாத நிர்மூலம்
கனியதோர் சுரமும் இதுமுதல்
இனியவே யோடும்

பண்டிடும் பழைய நோய்முதல்
பதியவே யெட்டுக் காசமும்
பதிவுடன் போகு மிதில்
விதியுட னயமாய்
மண்டலந் தன்னில் மாமுனி
கண்டிடு நிலையால் மதியிலே
மனமுடன் சொன்னூர் இதுநல
வழியதா மாண்டே. 137

தூய்மை செய்த நேர்வாளம் 1 பலம் (35 கிராம்), இதனைச் சட்டியிலிட்டு நன்ருக வறுத்துக் கறுகினபதத்தில் ஒரு படி சிற்ரு மணக் கெண்ணெயைவிட்டுக் கடைந்து நாலைந்து கொதிவந்தபின் இறக்கி ஆறினபின் வடிகட்டிக் குப்பியில் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

கருங்குறுவையரிசியை மாவாக்கி வைத்துக்கொண்டு கொஞ்சம் மாவெடுத்து தண்ணீரில் கரைத்துப் புளிக்கவைத்து முன் எண்ணெயில் நாலைந்துதுளி ஒரு சட்டியில்விட்டு முன்மாவை அதிற்போட்டு தோசையாகச் சுட்டுச் சர்க்கரையுடன் காலையிற் சிற்றுண்டியாக உபயோகிக்கவேண்டும்.

**தீரும்நோய்:**—இவ்விதம் நாற்பதுநாள் உபயோகித்துவந்தால், மலபந்தநோய், மலச்சிக்கல், குன்மநோய், சூலைரோகம், கிருமிநோய், நாட்பட்ட சுரம், காசவகைகள், நாட்பட்ட நோய்கள் முதலிய அநேகவகை நோய்கள் தீரும்.

கன்னற்பொதிகை வள்ளல் கருத்தில்வைத்து மானிடர்க்கு
நன்னயமாய்ச் சுகபேதி நாடியே சொல்லிடவே
பின்னைவே றில்லாமற் பிரியமாய்ச் செய்துகொடு
நன்னயமாப் பண்டிதமு நாடிப் பலித்திடுங்காண். 138

## 70. தாளகக் கட்டு

தும்பையிலையை யரைத்துச் சிரட்டையில் தடவி
தொடுத்துநறுக்கி யதற்குள்வைத்திடு பெரிய
அன்பாய்மூடிக் கொண்டது நெருப்பிந்து நோக்கி
அதிகவப்புத் துரிதமாகச் சரியாய்விடுவீரே. 139

கொம்பனுத்தஞ் சாற்றில் பணவெடையிதனை விட்டுக்
கொடுக்கவிடம்போந் தகரைச்சாற்றி னிலேயதிக
வம்பாந் தேமல்போகுங் குருவிச்சாற்றிற் கொடுக்க
மதியாமென முனிவர்மொழியிது வாகுமறிவீர். 140

வீரமுள்ள வெள்ளறுகு சாரணையமுக் குராவும்
மிக்கசங்கு ஆமணக்கின் வேரதிகமான
வாரமுள்ள மாலைக்கும் மேகவகை யெல்லாம்
வேறதாக வருத்திபலங் கொண்டிடித்துப்போடும்
காரமிளகு சுக்குத்திப்பிலி முன்பொடியி னூடே
கழஞ்சொன்று சேரிது கைகண்டதாமே
பாரமெனச் சொல்லவாத சூலையும் நீயறிவாய்
பன்னுந்தமிழில் முனிவர் சொன்னதிதுவாமே. 141

தேவையான கொட்டாங்கச்சியை எடுத்துக் கொள்ளவும். தும்பையிலையை வெண்ணெய் போலரைத்து மேற்படி கொட்டாங் கச்சிகளுக்குட் பூசி, வெய்யிலில் உலர்த்திக் கொட்டாங்கச்சிகளை உடைத்துத் தோண்டிக்குள் போட்டுக் குழித்தைலமாக இறக்கி வைத்துக் கொள்ளவும், தூய்மைசெய்த தாளகம் 1 பலம் (35 கிராம், (இது ஒரே கட்டியாக இருக்கவேண்டும்) இதனை ஒரு தட் டில் வைத்துச் சூடுகண்டபின்பு மேற்படி கொட்டாங்கச்சித் தைலத் தைத் தடவிச் சுருக்கிட வேண்டும். இந்தத் தைலத்தால் நான்கு சாமம் சுருக்கிட்டால் தாளகமானது கட்டிப்போகும். இதனை எடுத்துத் தூள்செய்து குப்பியிற் பத்திரப்படுத்தவும்.

அளவு:—1 முதல் 2 குன்றியெடை.

**துணைமருந்தும் தீரும்நோயும்:**—கொம்புக் கள்ளியை நெருப் பில் வாட்டி இடித்துப் பிழிந்தச்சாறு $1\frac{1}{2}$ வராகனெடை ($5\frac{1}{4}$ கிராம்) தேன் $1\frac{1}{2}$ வராகனெடை இவ்விரண்டையும் கலந்து மேற்கண்ட தாளகக்கட்டை அளவுப்படி கலந்துண்ண எல்லாவகை நஞ்சும் தீரும்.

தகரையிலைச்சாறு $1\frac{1}{2}$ வராகனெடை, தேன் $1\frac{1}{2}$ வராகனெடை இவ்விரண்டையும் கலந்து மேற்கண்ட தாளகக்கட்டை அளவுப்படி கலந்துண்ண எல்லாவகைத் தேமல் நோய்களும் தீரும்.

இவ்விதமே குருவி ஆவிலைச்சாற்றிலும் கலந்துண்ணத் தேமல் நோய்கள் தீரும்.

உலர்த்தின வெள்ளறுகு, உலர்த்தின வெள்ளைச் சாரணைக் கிழங்கு, அமுக்குராக்கிழங்கு, சங்கங்குப்பி வேர்ப்பட்டை, ஆம ணக்கு வேர்ப்பட்டை இவற்றைத் தனித்தனி இடித்துத் துணியில் சலித்தத் தூள் வகைக்கு 1 பலம் இவை எல்லாவற்றையும் ஒன் றாக கலந்துக்கொள்ளவும். இந்தத் தூள் $\frac{1}{2}$ வராகனெடை, தேன் 1 வராகனெடை, இவ்விரண்டையும் கலந்து மேற்கண்ட தாளகக்

கட்டைக் கலந்துண்ண எல்லாவகை மேக நோய்கள், காமாலை நோய்கள் ஆகியவைகள் தீரும்.

மேற்கண்ட தூள்கள் வகைக்கு 1 பலம் (35 கிராம்), மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, இவற்றைத் தனித் தனியிடித்துத் துணியில் சலித்த தூள்கள் வகைக்கு $1\frac{1}{4}$ வராகனெடை, இவை எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து வைத்துக் கொள்ளவும் இந்தத் தூள் $\frac{1}{2}$ வராகனெடை, தேன் 1 வராகனெடை இவ்விரண்டையும் கலந்து மேற்கண்ட தாளக்கட்டை அளவுப்படி கலந்து உண்ண வாதசூலை முதலிய எல்லாவகைச் சூலை நோய் களும் தீரும்.

### 71. சகலசுரக் குளிகை

கதித்தநாவி விராகனென்று கான் திப்பிலி யஞ்சு
கனகலிங்க மணலுடன்சேர்த் துப்புதுமையாக
மதித்தசலம் விட்டரைத்துச் சிறுபய றளவாக
மகிழ்ந்து நிழலிலுலர்த்தி யதையினிமையான
துதித்தசீரகச் சலத்திலிடச்சுரமுந் தணிந்து போகும்
தொலைந்துபோகு மென்றருமையான கிரிதன்னி
லுதித்தகுறுமுனி தமிழின்படிக் கிப்பாரி லேதான்
உண்மையாயு ரைத்தமுறை தனைத்தெரிகுவீரே. 142

அரிசித்திப்பிலித் தூள் 5 வராகனெடை ($17\frac{1}{2}$ கிராம்), தூய்மை செய்த சாதிலிங்கம் 5 வராகனெடை, தூய்மை செய்த நாபித்தூள் 1 வராகனெடை. எலுமிச்சம்பழச் சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—முன்மூன்று சரக்குகளையுங் கல்வத்திலிட்டு அரை மணிநேரம் அரைத்துக் கலத்து பிறகு மேற்படி சாற்றைச் சிறுக்ச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்துப் பயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்), சீரகத்தை ஒரு ஆழாக்கு தண்ணீரில் போட்டு $\frac{1}{4}$ ஆழாக் காகச் சுண்டவைத்து வடிகட்டின குடிநீரில் மேற்படி மாத்திரை களில் ஒன்றை இழைத்துப் பருகச் செய்விக்கவேண்டும். இவ்விதம் காலை, மாலை இரண்டுவேளையும் செய்துவர எல்லாவகைச் சுரங் களும் தீரும்.

### 72. அட்டசுரக் குளிகை

சுத்தவிரதங் கெந்திசாதிக் காய்பூரம் வாளம்
குமரிச்சாற்றினி லிட்டுத்துரித முடனே தான்
பத்தவரைத்துக் கடிகையஞ்சி ரண்டுதனை யெடுத்துப்
பயறவ்விதம் முறையாக வாக்கியேவிடுத்து

முத்தக்கருப்புக் கட்டிதலிடச் சுரங்களெட்டும்
முறையுள பிணியகலு மென்றருமையான
சித்துக்கதிக முனிவர் தமிழி லுரைத்த படிக்குத்
தீர்க்கமிது கண்டறிந்து பார்த்தியற்றுவீரே. 143

தூய்மைசெய்த இரசம், தூய்மைசெய்த கெந்தகம், தூய்மை செய்த இரசகருப்பூரம், தூய்மைசெய்த நேர்வாளப் பருப்பு, சாதிக் காய் இவை வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை, சோற்றுக் கற்றாழைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்ட ரைத்து நன்றாகக் கறுத்தபின்பு பூரத்தைச் சேர்த்தரைத்துப் பிறகு வாளத்தைச் சேர்த்தரைத்துப் பிறகு சாதிக்காயைத் தூள்செய்து சேர்த்து அரைத்து எல்லாம் நன்றாக மசிந்தபின்பு மேற்படி சோற்றுக் கற்றாழைச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்துப் பயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

அளவு:—$\frac{1}{4}$ மாத்திரை

துணைமருந்து:—பனைவெல்லம், நல்லவெல்மை, இவைகளுக் குள் மாத்திரையைப் பொதிந்து விழுங்கவேண்டும்.

தீரும்நோய்:—வயிற்றிலுள்ள தீயநீர்களை நீக்கி எல்லாவகைச் சுரங்களையும் கண்டிக்கும்.

இதனைக்கழிச்சல் மாத்திரையாகவும் உபயோகிக்கலாம், உடல் இயல்பிற்குத் தகுந்தபடி இரண்டு மூன்று மாத்திரைகளும் கொடுக்கலாம். இதன் அளவை அனுபவத்தால் நிச்சயித்து அறிந்து கொள்ளவேண்டும்.

குறிப்பு:—இந்த மாத்திரையை அரைக்கும்போது அரை வராகனெடை கருவேலம்பிசின் தூளைச் சேர்த்துக் கொண்டரைத் தால் மாத்திரைகள் உடைந்து போகாமல் பக்குவமாக இருக்கும். பிசின் சேர்க்காவிட்டால் மாத்திரைகள் நொறுங்கித் தூளாகி விடும். மாத்திரையுருட்டப் பதமாயிராது. (இது அநுபவம்)

### 73. மாறல்சுரம் சன்னிக்கு மருந்து

துடித்தவெள்ளை தாரம்லிங்க முஞ்சரிய தாகத்
தொகுத்தபாகல் மிதித்தசாற்றிலே யரைத்தவுண்
பிடித்த மிளகுதடுப் பதாகவே பசுமோரில் [டை
பெருகவரைத்துக் கொடுக்கமாறல் போகுமறிமே

மூலித்தசீத சுரங்களது மோடுமொன்று முன்பு
முனிவருரைத்த தமிழிலருமை யாகவேதான்
படித்தபடிக் கறிந்துசெய்திட தப்பாது தானே
பாருங் குளிகையது நேரதுமாகுமே. 144

தூய்மைசெய்த வெள்ளைப்பாடாணம், தூய்மைசெய்த அரிதாரம், தூய்மைசெய்த இலிங்கம் இவை வகைக்கு 1 வராகனெடை (3½ கிராம), மிதிபாகல இலைச்சாறு செல்லததக்க அளவு.

**செய்முறை:**—முதலில் அரிதாரத்தைக் கல்வத்திலிட்டு நன்ருய்ப் பொடித்துப் பிறகு வெள்ளைப்பாடாணத்தைச் சேர்த்தரைத்துப் பின்பு இலிங்கததைச் சேர்த்தரைத்து மூன்றும் ஒன்ருய் கலந்தபின்பு மேற்படி பாகல் இலைச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்துச் சிறுபயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

**அளவு:**—¼ மாத்திரை.

**துணைமருந்து:**—பசுமோர் கால் ஆழாக்கில் மாத்திரையைக் கரைத்துப் பருகச் செய்விக்கவேண்டும். சமயோசிதம்போல் காலையில் ஒரு வேளை அல்லது, காலை மாலை இரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

**தீரும்நோய்:**—மாறல் சுரம், குளிர்சுரம் ஆகியவைகள் தீரும்.

**மருத்துணவு:**—பசுமோர் சாதம், பசுமோர் ஆகியவைகளும் பச்சைப்பயற்றை வறுத்துப் பச்சையரிசியுடன் சேர்த்துக் காய்ச்சின கஞ்சி வகைகளும் ஆகும்.

**குறிப்பு:**—இந்த மாத்திரையால் சிலருக்குக் கக்கல் உண்டாவதுண்டு. ஆகையால், இதனைச் செய்த ஆறுமாதத்திற்குப் பின்பு உபயோகித்தால் அவ்விதம் வாந்தியுண்டாக ஏதுவிராது. இதனை அனுபவசாலிகள் உடற்கூறறிந்து உபயோகிக்க வேண்டியதே முறைமையாம். அனுபவமில்லாதவர்கள் இதனை உபயோகிக்காமலிருப்பது உத்தமம்.

## 74. சன்னிவாத பஞ்சக்குளிகை

கதித்தகெந்தக மிரதனுபியும் வெங்கார மிளகு
கடிகைமுப்பது சரியதாய்விட் டினிமையாக
மதித்தமத்தஞ் சாறரைப்ப தாங்குன்றி மணியிஞ்சி
வளர்சலந்தனி விடுவழகாம் பிடியதாகக்

கொதிக்தெழுந்திடும் வாதசன்னி தானிரஞ் சுன்றுயான
கொடுக்கக்கண்டது திடுக்கிட்டே குமென்றருமை
கருத்தமாமுனி சகத்திலவற்குத் தமிழினிற் சொன்ன
கனகமாம்பஞ்சக் குளிகையாகுந் தகுதியாகவே. 145

தூய்மை செய்த கெந்தகம், தூய்மை செய்த இரசம், தூய்மை செய்த நாபித்தூள், பொரித்தவெண்காரம், மிளகுத்தூள், இவை வகை ஒன்றுக்கு $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்), ஊமத்தனிலைச் சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—இரசத்தையும் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்ருய்க் கறுக்கிறவரையில் அரைத்துப் பிறகு மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து அரைமணி நேரம் அரைத்து நன்ருய்க் கலந்த பின்பு மேற்சொல்லப்பட்டிருக்கிற ஊமத்தனிலைச்சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து 4 சாமநேரம் அரைத்துக் குன்றிமணி அளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

**அளவு:**—1 முதல் 2 மாத்திரை.

**துணைமருந்து:**—இஞ்சிச்சாறு, சுக்குக் குடிநீர் முதலியவைகளாம்.

**தீரும்நோய்:**—வாதசன்னி முதலிய பல சன்னி நோய்கள் தீரும்.

**குறிப்பு:**—இந்த மாத்திரையினுல் மயக்கமுண்டாகும். ஆகையால் உடல் இயல்பு அறிந்து உபயோகிக்க வேண்டியது.

## 75. சன்னிசுர மாத்திரை

காட்டுக்கடுக்காய் நெல்லி தான்றிக்காய் நாலிரதங்
கனத்தகெந்தி நேரதாம்வாள மூன்றுமாமே
பூட்டுஞ்சலத்தை விட்டரைத் திடுசிறுபயருகப்
புகழுமிஞ்சித் துளசிச்சாற்றினில் கொடுக்கக்கண்டு
மாட்டிக்கிடக்குஞ் சன்னிவாத முறைகளாக மெஞ்ஞானம்
வழங்குஞ்சுரங்கள் தாகம்போய் விடுமோன
தேட்டுக்கதிக மாமுனிவர் தன்றமிழின் படிக்குச்
செய்யவிம்முறை தானுமேமிக மெய்யதாகுமே. 146

தூய்மை செய்த இரசம், தூய்மை செய்த கெந்தகம், மஞ்சட் கடுக்காய்த்தோல் தூள், தான்றிக்காய்த் தோல் தூள், நெல்லி வற்றல் தூள், இவை வகைக்கு 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்),

தூய்மை செய்த வாளம் 3 வராகனெடை, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை;—இரசத்தையுங் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்ருய்க் கறுக்கிற வரையிலரைத்து மற்றத்தூள்களையும் சேர்த்து அரைத்து கலந்தபிறகு வாளத்தைச் சிறுகச் சிறுகச் சேர்த்த ரைத்து எல்லாம் ஒன்ருக நன்ருய்க் கலந்தபிறகு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு நான்கு சாமமரைத்துச் சிறுபயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

அளவு:—1 முதல் 2 மாத்திரை.

துணைமருந்து:—இஞ்சிச்சாறு, துளசிச்சாறு.

தீரும்நோய்:—சன்னிவகைகள், சுரவகைகள் ஆகியவைகள் தீரும். சுரம் சன்னி முதலியவைகளாற் காணுந் தாகமுந் தீரும்.

## 76. சிந்தாமணிக் குளிகை

சித்திரநாவி யிரதங்காரமும்லிங்கத்தி னேடு
சிறக்கரெண்டதி லுரைப்பதாகவே காயந்திப்பிலி
மித்திர்மா மென்றெருக்கின் பாலதில்லரை மிளகுபோல்
முறையதாம்படி பருகும்பாலதில் கொடுக்கச்சுரம்
தத்திரமா மிஞ்சிச்சாறு சீரகம்சுக்கு நீரில்
தயவாய்க்கொடுக்கில் பேசிடாதென்று மருமையான
உத்திரமாம் முனிதமிழின்படிக் கதைத்தெரிந்து செய்ய
உயர்சிந்தாமணிக் குளிகையுமிது திறமதாகுமே. 147

தூய்மை செய்த நாபி, தூய்மை செய்த இரசம், தூய்மை செய்த கெந்தகம், தூய்மை செய்த வெண்காரம், தூய்மை செய்த சாதிலிங்கம், பொரித்த பெருங்காயம், வறுத்துத் தூள் செய்த திப்பிலித் தூள், இவை வகைக்குச் சமனெடை, எருக்கம்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திலிட்டு நன்ருய்க் கறுக்கிற வரையிலரைத்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக விட்டு இரசம் மடிந்துபோகிற வரையிலரைத்துப் பிறகு லிங்கத்தையும் வெண்காரத்தையும் சேர்த்தரைத்துப் பிறகு மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து மேற்படி பாலைச் சிறுகச் சிறுகவிட்டு மூன்று சாமமரைத்து மிளகு அளவு மாத்திரைகள் செய்து வைத்துக் கொள்ளவும்.

அளவு:—1 மாத்திரை.

**துணைமருந்து:**—பசுவின்பால், இஞ்சிச்சாறு, சீரகக் குடிநீர், சுக்குக் குடிநீர் முதலியவைகளாம்.

**தீரும்நோய்:**—எல்லாவகைச் சுரங்களும், சன்னி வகைகளும் தீரும்.

**குறிப்பு:**—இதன் மூலத்தில் கெந்தகம் சொல்லப்படவில்லையாயினும் அனுபவத்தில் கெந்தகம் சேர்த்துச் செய்யப்பட்டு வருகின்றபடியால் அனுபவப்படியே இங்கெழுதப்பட்டிருக்கிறது.

## 77. சுர மாத்திரை

கதித்தகாரங் கழஞ்சுமூன்றுகால் நெருப்பில் வெந்த
கடியசுண்ணமுன் படியதாய்விட்டுப் பொடிசெய்து
துதித்தசலத்தி லரைத்து உருட்டியே மிளகுபோல்
துவட்டிநிழலி லுலர்த்திமாட்டி யிளவெந்நீரில்
துரித்தமிளகு வருந்தியதிலிடு குளிகை ரெண்டு [தனில்
செலுத்தச்சுரங்கள லுத்துப்போமென்றே கிரிய
உதித்தமுனிவர் திருத்தமாகவே முன்னூலின் படிக்கு
உரைத்தவுண்டை செலுத்தியாருங் குணத்தைப்
[பாருமே. 148

பொரித்த வெண்காரம் 4 வராகனெடை (14 கிராம்), கிளிஞ்சில் வேகவைத்த சுண்ணம்பைத் துணியில் சலிக்கச் செய்த தூள் 4 வராகனெடை, எலுமிச்சம்பழச் சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—மேற்படி இரண்டையுங் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமமரைத்து மிளகு அளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

**அளவு:**—2 மாத்திரை.

**துணைமருந்து:**—ஒரு வராகனெடை மிளகை வறுத்துத் தூள் செய்து கால் ஆழாக்கு வெந்நீரிற் கலக்கி மேற்படி மாத்திரைகளை இழைத்துப் பருகச் செய்விக்கவும். இவ்விதம் காலை, மாலை இரண்டு வேளையும் செய்யலாம்.

**தீரும்நோய்:**—எல்லாவகைச் சுரங்களும் தீரும்.

## 78. கருவங்க பற்பம்

சித்துக்க ரியவங்க மாமுடன் அண்டத்தோடு
தொடுத்தநீரிலரைத்துப்புடமிட வெளுத்துநீறும்
சித்துப்பணத்து விடயதாகுமே நெய்யிற் றேனில்
சிறந்துகொடுக்க விருமல்காசம்போம் பொழு

சத்தியுடனே மேகமானது முலந்த வுடம்பிற் [தஞ்சாறில்
தாகமுடனே தேகமானதிற் சிறந்தநோவு
அற்றுவிடுமென் றகத்தியமுனி தமிழிற் சொன்ன
அதிகபற்ப முறையிதை யறியழகதாகுமே. 149

கருவங்கத்தூள் 1 பலம் (35 கிராம்), அண்ட ஓட்டுத்தூள் 1 பலம், * புகைநீர் (திராவகம்) செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—இரண்டு தூள்களையும் கல்வத்திலிட்டு மேற்படி புகைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு ஜாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடிச் சீலைமண் செய்து உலர்த்தி இருநூற்றைம்பது பல வறட்டியிற் புடமிட்டாறின பின்னெடுக்க மேலான பற்பமாயிருக்கும்.

**அளவு:**—2 முதல் 4 குன்றியெடை.

**துணைமருந்து:**—தேன், நெய் முதலியவைகளாம்.

**தீரும்நோய்:**—இருமல், காசநோய், காசநோய், காசத்திலுண்டாகும் கக்கல், மேகநோய், உடல் வறட்சி, அதிதாக நோய், உடல் உளைச்சல் முதலியவைகள் தீரும்.

## 79. வங்கச் சுண்ணம்

வங்கந்தனைக் குகையிலிட்டிடு உருக்கு முகத்தில்
வளமாகத் தாரமெடைய தாக்கவேகேளு
துங்கமாகக் கரியாய் நொறுங்குமே எடுத்துக்கல்வந்
தொடுத்து இட்டே அரைத்திட மெழுகாகும்
பங்கமாகவே உயருஞ்சுண்ணம் நேரிட்டுச் சட்டியில்
பதிவாயண் டத்தோடு போட்டுமே யெடுக்கவே
சங்கமாகவே எண்ணெய்காய்ச் சிடுங்கரியி னேரிடு
சத்தியாகநீயும் வெண்கருவையும் விட்டிடே. 150

விட்டுஅரைத்துக் கரியிலூதிடு வெள்ளை யாகும்
விருப்பமாக அஞ்சாறு மூதுஅரைத்துக்
கட்டுப்பட்டுமே அதுநீறிக் கடுமையாக வஞ்சாறு
போதுபதமா யிடவுங்காசம் போய்விடுமே
துட்டுமேலே கவசங் கட்டிடுபுடமு மூன்றிட
துடியதாகக் கமும்புகட்டிடும மதியெட்டிலிட
கட்டுமேயுள மாற்றுஆறதாம் பொதிகை வாழுங்
கனகமா முனிசொன்ன சொல்லிதுகாணுவாயே. 151

* இதன் விவரம் பின சொல்லப்படும் வெடியுப்புத் திராவகத்திற் காண்க.

## 80. துருசுச் செம்பு

துருசுதன்னை யெடுத்துக் காலெடைக்காரஞ் சேர்த்துத்
தூக்கிமெள்ளக் குகையிலிட்டிடு உருக்கரவியாம்
வரிசையாகப் பலம்நிறுத்து மேதகடு தட்டி
வகையதாச் சீனமோரெடை சேர்ததுநீயுமே
பரியமாகப் பருவமாகவே யிணங்க னேரிடை
பக்குவமாகக் கத்தநீரிடு குழப்பபியேகொள்ளு
துருவமாய்க் குன்றிமணியுங் காலதாமுரைத்துக் குழம்பு
தொக்கதாரவீ தத்தினெடை ஒக்கதாக்கிடு. 152

காய்ச்சிக் கரியிலூற்றித் தோய்ச்சிடு வெட்டை யாகவே
கட்டியரெண்டுபத்துத் தாரமி டெடுத்துருக்கி
வாச்சிதை நல்லவூதி யுருக்கியே யுருக்குமுகத்தில்
வலுமையான பாணிவிட்டிடக் கொதிக்காமலே
பாச்சியிருக்கு மெடுத்துத் தகடடிகாய்ச்சிக் காய்ச்சிப்
பதியஅடித்துச் செப்பக்கேளுமே ரவியினெடைக்கு
தாச்சிதுயரப் பொடியை யெடுத்துமே வீரங்காலிடு
தாக்குமிப் படிக்கடை நீர்விட்டிடே. 153

விட்டுமரை நேர்சாமம் ரெண்டுமே விரைவிலரைத்து
விடுபட்ட ரவிமேலே வேகமாம்
கட்டிக்கெசமாம் புடத்துதில் வைத்திடு எடுத்துக்கவசம்
கருணை ரவியையுருக்கிப் பார்த்திட ஏமம்போல
தொட்டுத் தகடையடித்துப் பாகமாய்த் தகடுநேரெடை
தூக்கிக்கெந்தகம் பொடித்துக் கல்வத்தில்
கட்டுமேகரிதன்னிற் பழுக்கவே காய்ச்சிக் கொண்டு
கனிவால் நாகத்தைமேல்வைத்துப் பார்த்திடே. 154

பார்த்திடக்கரி தூளாயாகிடும் எடுத்து நிறுத்துப்
பதிவாய்ச்சிங்கி தானேபாதியாம் அரைக்கக்கேளு
எட்டிப் பரணிதன்னில் வாட்டியே வில்லைகட்டி
எடுத்து ரவியிலுலர வைத்திடு
சத்திடப் புடம்போட் உருக்கிடக்காரங் கூட்டிச்
சரியாயுருக்க ஏமமாகிடும் நொறுக்குவெள்ளியில்
செத்திட எட்டுநாலு ரவியதாம் ஏமம்நாலு
சேர்த்து ஊதஎட்டு மாத்துமாம். 155

உப்புக்காவிக்குந் தானிறங்கிடும் உரைக்கு நல்ல
ஒத்திடு மாற்றும்பத்து மாகுமாம்.

அப்புக்கடலையுண்ட மாமுனி யகத்தியர் தானும்
ஆதிநூல்களை யாய்ந்துபார்த்துமே சுருக்கிச்சொன்ன

செப்பினேன் பள்ளில்செம்பு பகத்திலதிலே சொன்னதை
சோதித்தறிந்தால் வாதமாகிடும் பாகமாகத்
தப்பிதமாகப் பார்த்துப் பொய்யென்று உலகிற்சொன்ன
சவுங்கல் வாதியைநம்ப வேண்டாமே. 156

அன்னமிசைந் தாடு மன்பாய்ப் பொதிகைமுனி
தன்னை நினைந்து தயவாக முத்தமிழால்
இன்னிசையாய்ப் பாதி யிசைவான வாதமெலாம்
கன்னிலே சொல்லித் தயவாய்ப் புலம்பினர்காண். 157

## 81. அயத்துருசு செம்பு

தெந்தினத்தினனாத் தினனத் தெந்தினத்தினனா தினனா
தெந்தினத்தினனாத் தினனத் தெந்தினத் தினனா.

உற்றவயந்தன்னெ டைக்கு மொத்தரவிசேர் - நல்ல
ஓங்கிய ரவியெடைக்குக் காரிசேர்த்திட
மெத்தெனவுருக்கிக் கொள்ளச் சத்தவெங்காரி - கூட்டு
மேன்மைபெற வூகநல்ல உண்மைரவியாம்
முத்தெனவே யூதியெடு வைத்திடேமமு - நேரே
மேன்மை யாகத்தானேதக டாகவடித்து
குற்றமில்லனாற்றம் சேர்த்திடு சூதமும் - நேரே
குணமாகத் தான்மசியச் சினமாயரையே 158

அரைத்துத்த கட்டின்மேலே அன்பாய்ப்பூசியே புடம்
ஆகமூன் றுபுடமிட்டு ஆறியெடுத்து
முரைத்துமேபார்த்திடக்கருப் பாகுமாம் - அடி
முத்திபெற மிருதாருசிங்கி காலதாம்
விரைத்துஅரைத்து எடுவில்லை கட்டியே - ரவி
விதமாகப் புடமிட்டு உருக்கியெடுத்து
பரைத்துமேரவி யாகு மிந்தச்செம்பு - நல்ல
பரிதிபோலக் காணுமருதா ருப்பள்ளி. 159

பள்ளிரவி சொல்லவந்தா யிந்தச்செம்பை - மதி
பத்துநாலு சேர்த்திடவே யேமமாகுமே
துள்ளியிந்தப் பாகமுந் தெரியும்படிக் - கள்ளன்
தூக்கத்திற் சயிக்கினைகள் காட்டுவானடி
கள்ளியேயுன் ரசவாத மெய்யாமடி - பாகங்
கருக்குரு வறிந்தாலே பொன்னாமடி
வள்ளலார் பொதிகைவளர் மாமுனிவர் - சொன்ன
வாதம்வகையான பாகமாய்ந்து செய்யடி. 160

### 82. துருசுச் செம்பு

தொகையாகச் செய்யச்சொன்ன மூத்தபள்ளி - அடி
துடித்துமே சொல்லாதே மார்க்கமல்லடி
வகையானகண்டரதுபலம் நாலெடு - நாற்றம்
வகையானமுக்காற் பலந்தானே யெடுத்துப்
பகையாகரெண்டுஞ் சேர்த்து அரைத்துச்சாமம் - வில்லே
பதிவாகக் கட்டிநீ ரவிபுடமிடு
நகையாநீ எடுத்துநீ பார்த்துக்கொள்ளு - கடி
நாடியே மிருதாருசிங்கியுங் கூட்டே. 161

கூட்டியே கரியெடைக்குக் காலதாகும் - அரை
கூட்டி வில்லேரவிதனில் காயவைத்தடி
போட்டிடுப் புடம்போட்டு காரங்கூட்டி - நல்ல
புதுக்குகை தன்னில்வைத்து உருக்கித்தீரு
பாட்டியே ரவியாகு மிந்தச்செம்பை - மதி
பதிவாய் நொறுக்குவெள்ளி யெடுபலமடி
போட்டியாய்க்கொடுத்தாதி யேமமாதி - சோத்துக்
கொடுமையாக வூதியெடு ஆறுவயதாம். 162

ஆறுவயதென்று சொன்ன மருதூருப்பள்ளி - ரவி
ஆடிஎடை யேமஞ்சேர்த்து உருக்கிக்கொண்டு
கூறுநத் தாமிரதமு மெடையேசேரு - இதில்
கூட்டிடு குமரியின்பால் விட்டரைத்து
வேறுடனே தகட்டின்மேற் பூசிப்பூசிப் - புடம்
வேறுபட மூன்றுபுடம் வைக்கக்கரியாம்
மாறுசொல்லாதே நொறுக்குவெள்ளி பத்திற் - ருக்கிட
மாசிலா தெட்டுவய தாகுமேயடி. 163

ஆதிசிவன் சொன்ன அடவான வாதமதில்
சோதிபெறப் பாகமதைச் செய்து மதைப்பார்த்து
நீதிபெற வேயுலகம் நேரான யோகியர்க்குச்
சோதிபெற மூத்தபள்ளி சொல்லினள் காண் சூர
[ணமே. 164

### 83. கருங்கோழிச் சூரணம்

தாரங் கெந்தக மோமங்கடுகு
தரும சத்துரு திரிபலே
சாதிப்பத்திரி யேல முடனே
சாதிக்காய்ச்சவுக் காரமும்
சீரகந் திரிகடுகு சாதி
லிங்கமுங் கருஞ் சீரகம்

சிவதை மூலங் கடுகுரோகணி
சேர்குளவிந்த மொடுபொரிக்
காரமுங் குரோசாணி கல்மதங்
கல்நார் கார்போ கரிசியுங்
கரியுப்புடன் கல்லுப்பு வளையல்
காய்ச்சுப்பு நவச்சாரமும்
நேர்வாளமபின் மல்லி உலுவா
நிறையு மகலப் பூவுட
னிண்ணயத் துடனின்ன மருந்து
தன்னைக்கேளடி பள்ளீரே. 165

தன்னைக் கேள்பெருங் காயமோடிந்து
சத்திச் சாரமெவட் சாரமுஞ்
சகல ரோக மகலவேபுகழ்
தருவெப்பாலை காந்தமும்
வின்ன மணுவா லவங்கப்பூவாய்
விளங்கமும் வாலு மூவையும்
விறல்தரு விழாலரிசி கோதுமை
மேவு மரிசி தன்னுடன்
வன்னச் சித்திர மூலவேருடன்
வாணவுப்புஞ் சரியதாய்
வகைக்குக் கால்பலம் மிகுத்திடாமாலே
வகைப்படிநன்றாய் நிறுத்தெடு
இன்னும் பறங்கிப் பட்டைநாற்பலங்
தன்னை முன்மருந் தோடுபோட்
டிடித்தமருந்தை நடத்துந் தொழிலை
விடுத்துக்கேளும் பள்ளீரே. 166

கேளு மேனி திருகுகள்ளி
கெடிய காணம் பொடுதலை
கெம்பீரத்தும்பை பசுவின் கோசலம்
கெஞ்சு மஞ்சிலை நொச்சியும்
வேளை சங்கங்குப்பி யுத்தாமணி
வெள்ளாட் டுச்சிறு நீருடன்
விதமதாக வகைக்கொ ருபடி
யிதமதாயதை யெடுத்திடு
நீளும்பானை புதிய தாயெடு
நாளுஞ் சாறு தனைவிடு
நிசமதாய்க் கருங்கோழி யொன்று
வசமதாய்ப் பிசகாதெடு

மாளும் படியே யறுத்ததின்குடல்
சூழும் ரோமம் போக்கியே
மருந்துப் பொடியைக் கோழிவயிற்றிற்
பொருந்தவையடி பள்ளீரே. 167

வைத்துவாயைத் தைத்திடு பானை
வாயினிலே வைத்திடு
மறுசட்டி கொண்டு மூடிச்சந்தை
மண்சீலைசெய்து மூடிடு
செய்ய வடுப்பில் தரித்திடுதீயைச்
சிறுகப் பெருகா தெரித்திடு
திட்டந் தானே பானைபட்டதாய்
சட்டம் தானே பதம்விட்டுநீ
பையக் கோழியை யெடுத்திடு
நையக் கையினல் பிதித்திடு
பண்ப தாகவெடுத் ததையெலும்
பானதையெலா மெடுத்திடு
வெய்யவன்பட வுலர்த்தி டுநர
ருய்ய வேநீ கொடுத்திடு
வெருகடி கொளவகலும் நோய்களைக்
கருதிக்கேளடி பள்ளீரே. 168

கருதி மேகச் சூலையாம்பல்
கள்ளிக் கிரந்தி பவுத்திரம்
கைகால் திமிர்ப்பு முடக்குப்பிலி
கருப்புடன்மேகப் பிடிப்புமே
உருகுமூனம் வெடிக்குஞ் சூலை
யூறல் மேகம் பெருஞ்சொறி
உதரவலிகள் குன்ம ரோக
முடம்புவலிகுத் துளைச்சலும்
குருதிப் படுவன் படருந்தாமரை
குருக நீர்களரை யாப்புடன்
குடலில்வாத மேகச் சிலந்தி
குட்டநோய் சலக்கிரிச்சினம்
பருதிப் பரவு பக்கவாயு
பகரொ ணுரோக வகையெலாம்
பகலவன்கண்ட பனியைப் போல
அகலும்பாரடி பள்ளீரே. 169

(அ) தூய்மைசெய்த அரிதாரம், தூய்மைசெய்த கெந்தகம், ஓமம், கடுகு, மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த் தோல், நெல்லிவற்றல், சாதிப்பத்திரி, ஏலரிசி, சாதிக்காய்,

சவுக்காரம், நற்சீரகம், மேற்றூல் சீனசுக்கு, மிளகு, அரிசித் திப்பிலி, தூய்மை செய்த சாதிலிங்கம், கருஞ்சீரகம், தூய்மை செய்த சிவதைவேர், கடுகுரோகணி, மஞ்சள், நாட்டு வெண் காரம், குரோசாணியோமம், கல்மதம், கல்நார், கார்போகரிசி, கறியுப்பு, கல்லுப்பு, வளையலுப்பு, காய்ச்சுப்பு, நவச்சாரம்,, தூய்மைசெய்த நேர்வாளப்பருப்பு, அபினி, கொத்துமல்லிவிதை, வெந்தயம், பெருஞ்சீரகம், பெருங்காயம், இந்துப்பு, சத்திச்சாரம் எவட்சாரம், வெட்பாலையரிசி, காந்தம், இலவங்கம், வாய்விளங்கம் வாலுளுவையரிசி, விழாலரிசி, கோதுமையரிசி, சித்திரமூலவேர், வெடியுப்பு இவை வகைக்கு $\frac{1}{4}$ பலம் சுத்திசெய்த பறங்கிப்பட்டை 4 பலம் (140 கிராம்).

(ஆ) குப்பைமேனிச்சாறு, கொள்ளுக் குடிநீர், பொடுதலைச் சாறு, தும்பைச்சாறு, பசுவின்மூத்திரம், வெண்ணொச்சியிலைச்சாறு, நல்லவேளைச்சாறு, பீநாறிச்சங்கங் குப்பிச்சாறு, வேலிப்பருத்தி சமூலச்சாறு, வெள்ளாட்டுநீர் இவை வகைக்கு 1 படி, திருகுக் கள்ளி 10 பலம் (350 கிராம்).

(இ) வளப்பமுள்ள ஒரு கருங்கோழி.

**செய்முறை:**—கோழியை அறுத்துக் கால், தலை, மயிர் ஆகியவை களைப்போக்கி வயிற்றைக்கீறி ஈரல் குடல் முதலியவைகளை நீக்கித் தூய்மை செய்து கொள்ளவேண்டும். (அ)விலுள்ள சரக்குகளில் இடிக்க வேண்டியவைகளை இடித்துத் தூள் செய்து வடிகட்டிக் கொள்ளவேண்டும். உப்புவகைகளை யெல்லாம் பொடித்துக் கொள்ளவேண்டும். காயம், அபின், வாளம் இவைகளைத் தனித் தனியே அரைத்துத் தூள்களைக் கலந்து கொள்ளவேண்டும். அரிதாரம், கெந்தகம், இலிங்கம் முதலியவைகளையும் தனித்தனியே அரைத்துக் கலந்து கொள்ளவேண்டும். இவ்விதம் (ஆ)விலுள்ள எல்லாவற்றையும் ஒன்ருகக் கலந்து கோழி வயிற்றில் செலுத்தி இரண்டுபுறமும் நன்ருகத் தைத்து ஒரு புதுத்தாளியில்(ஆ)விலுள்ள சாறுவகைகளையும் நீர்வகைகளையும் விட்டுத் தாளிவாய்க்கு வேடு கட்டி அதன்மேல் முன்சித்தப்படுத்தி வைத்திருக்கிற கோழியை வைத்து மேற்சட்டிமூடி ஏழு சீலைமண் செய்து அடுப்பேற்றி ஒரு சாதி விறகால் சாறு வற்றுகிறவரையில் சுமாராக எரித்துக் குளிர ஆறவிட்டுப் பிரித்தெடுத்து எலும்பு, சவ்வு ஆகியவைகளை நீக்கி மற்றவைகளையெல்லாம் ஒன்ருகச் சேர்த்து வெயிலில் உலர்த்தி இடித்து வடிகட்டிக் குப்பியில் பத்திரப்படுத்தவும்.

**அளவு:**—$\frac{1}{2}$ முதல் 2 வராகனெடை, நோய்வலிமை, உடல் வலிமை முதலியவைகளுக்குத் தக்கபடி உபயோகிக்கவேண்டும்.

**துணைமருந்து:**—தேன், சுக்குக் குடிநீர் இஞ்சிச்சாறு, இளவெந்நீர், இவற்றுள் ஒன்றில் சேர்த்து நோய் வலிமைக்குத் தகுந்தபடி அரைமண்டலம், ஒருமண்டலம் சாப்பிடவேண்டும்.

**தீரும்நோய்:**—மேகநோய்கள், சூலைநோய்கள், ஆம்பல்நோய்கள், கள்ளிப்பூக்கிரந்தி முதலிய பல கிரந்திநோய்கள், பௌத்திர நோய்கள், கைகால் திமிர்ப்பு, கைகால் முடக்கு, பீலிகை நோய்கள், கருமேகம், மேகப்பிடிப்பு, வெடிசூலை, மேகஊறல், பெருஞ்சொறி பேய்ச்சொறி, வயிற்றுவலிகள், குன்மநோய்கள், உடல் உளைச்சல், உடல்வலி, உடற்குத்து, இரத்தப்படுவன், படர்தாமரை, அரையாப்பு, குடல்வாதம், மேகச்சிலந்தி, குட்டநோய், மூத்திரக் கிரிச்சரம். பக்கவாயு முதலிய அநேகநோய்கள் தீரும்.

**மருத்துணவு:**—முளைக்கீரை, அரைக்கீரை, பச்சைப்பயறு, துவரை, முருங்கைப்பிஞ்சு, வழுதுணங்காய், காடை, கௌதாரி, முயல், உடும்பு, திருக்கை, சுரு இவையாம்.

உப்பைப் பசுவின் மோர்விட்டுப் பொன்னிறமாக வறுத்துச் சேர்த்துக்கொள்ளவும்.

**குறிப்பு:**—இளமையுள்ள உடலினர்க்குத் தேன், சுக்குக் குடிநீர், இஞ்சிச்சாறு, இவற்றில் ஒன்றில் கால் அல்லது, அரை வராகனெடை சூரணத்தை கலந்துக் காலையில் மாத்திரம் உபயோகிக்கவும். சிலருக்கு இரண்டு மூன்று தடவை கழிச்சலாகும். ஒன்றைவிட்டொரு நாளும் உபயோகிக்கலாம். இது பல்லாண்டுகளாய் அனுபவ சித்திபெற்ற முறை.

### 84. கருங்கோழிச் சூரணம் (வேறு)

அகலுமழிஞ்சி வேரு நன்னெச்சி
வேருமெருக்கன் வேருடன்
ஆனவேலி திருகுக் கள்ளி
அமுக்குரா வெள்ளை யெருக்கின்வேர்
திகவரைப்பாய் பழத்தி னளவாய்ச்
சேர்க்குங் கற்க மேதுகேள்
சிறந்த காயும் வராகனெட்டு
சேர்த்தேயுள்ளி யிதழுடன்
புகலு மரிசம் பலமிரண்டு
பொருந்து சுக்குஞ் சவுட்டுமண்
போதக் கடுகோர் பலமுமோமம்
புதியகணமுமதி யுப்பும்
இகலப்புடலும் வளைய லவண
மிசைந்த உலுவா சீரகம்

ஏறுபலமு மரைய தாகவே
யின்ன மறிவாய் பள்ளீரே. 170

இன்னஞ்சீனங் கல்மதம் நாலு
மேற்ற விளங்கங் காரியும்
இசைந்த காந்தஞ் சவுக்காரநிறை
யேற்ற வராகன் மூன்றுடன்
வன்னமரத்தை வெடியுப்பு குப்பை
வாள முனையும் போக்கியே
வாய்த்த அக்காரஞ் சிவதைதேசாரம்
வகையுபலமுங் காலதாய்
திண்ணமுடனே யிடித்து வடித்துத்
திருகுக் கள்ளிப் பாலதுஞ்
சேர்த்துக்காற்படி நேர்த்தி யாயரை
தீட்டிமுன்மருந் தூட்டியே
முன்னமோர்கருங் கோழி யாண்டு
மூன்று சென்ற தறுத்தத்தின்
முடியுங் காலுங் குடலுரோம
முழுதும்போக்கடி பள்ளீரே. 171

போக்கி மருந்தை வயிற்றிலடைத்து
போற்றி மூடித் தைத்துமே
புதியதாளி லழிஞ்சி லெருக்கு
புகமும்வச்சிர நொச்சியும்
தாக்கி வெள்ளுகா திருகுக்கள்ளி
தானுங் காணச் சாருடன்
சமனாய் விடுத்துக் கோழியுடனே
சட்டிக்கொண்டு கெட்டியாய்
வாய்க்குப்பொருந்துஞ் சீலமண் செய்து
வாழ்த்தி யடுப்பி லேற்றியே
வறியோர்சாதி விறகா லெரித்து
வரியோர்சாதி விறகாலெரித்து
நீக்கிக்குடத் தெலும்பை யகத்தி
நிண்ணச் சாறு முலர்த்தியே
நேரதாய்த்தசை யதனுள் மருந்து
நெடியபருதி காட்டிடே. 172

காட்டியுலர்த்தி மருந்துந் தசையுங்
கண்ட சாற்றின் வண்டலும்
கடுகவெடுத்து இடித்து வடித்துக்
கலசத்தினுட் செலுத்தியே

நீட்டித்தேக மறிந்து மருந்து
நேர மோர்வெரு கடியதாய்
நேசமாய்ச்சிவ சுதனைப் பணிந்து
நினைவதாகநற் றேனுடன்
கூட்டிக் குறுக்குக் கியாழத்துடனுங்
கொள்ளு மிஞ்சிச் சாறுடன்
குளிர்ந்த நீரின் வெந்நீருடனுங்
கொண்டுவருக விண்ணமும்
ஈட்டிவ் வணத்த னுபானத்துட
னிருந்து மருந்தை யருந்திடில்
ஏற்குங்கறிகள் கூட்டும் வகையை
யிதமாய்க்கேளடி பள்ளீரே. 173

இதமாந் துவரை கொடிவழுதலை
யிசைந்த முருங்கைப் பிஞ்சுடன்
ஏத்திடுமரைக் கீரையு முளைக்
கீரையும் பச்சைப் பயறதும்
பதமாந் தூளை சுண்டனவற்றலும்
பலவ கைக்கறி குறவையும்
பகந்திருக்கை வராலுடன் சுறு
பருத்தவுளுவை நெய்த்தொலி
நிதமுங்காடை முயலு முடும்பு
நேர்ந்த வுள்ளானுங் கவுதாரி
நேரும் வெள்ளாட் டிறைச்சியுமிக
சீராமந்த வற்றலின்
விதங்க ளருந்த லவணமும்வறு
வேண்டிப் பசுவின் மோரினில்
வேகமாகப் போகும் நோயை
விளம்பக்கேளடி பள்ளீரே. 174

விளம்பும்வாத குன்மமும் பித்த
குன்மமு மய்யக் குன்மமும்
எரிகுன்மம்வலி குன்மமுஞ் சத்தி
குன்மம்பிறட்டுக் குன்மமும்
தளம்பும் வாய்நீர்க்குன்ம மெட்டுடன்
தரிப்படா தின்னந் திமிர்ப்புடன்
தணியும் வாதச் சூலைகிரந்திச்
சூலைகுண்டல வாதமும்
பயம்படக்குடல் பிறட்டுக் குண்டல
வாயுவும் பெருஞ் சட்டையும்

பாரிசையினின் வாத மிடுப்பு
வாதமுழங்கால் வாதமும்
தியம்புங் கடிகள் வாயுவுளதுஞ்
சேர்ந்த ரோகம் நூறதுந்
தினகரன்முன் பனியைப் போலே
தீரும்பாரடி பள்ளீரே. 175

(அ) தோலுரித்த பூண்டு, மிளகு, இவை வகைக்கு 2 பலம் (70 கிராம்), மேற்றோல்நீக்கின சுக்கு, கடுகு, சவுட்டுமண் வகைக்கு 1 பலம் (35 கிராம்), பொரித்த பெருங்காயம் $\frac{3}{4}$ பலம் ($26\frac{1}{4}$ கிராம்), அரிசித்திப்பிலி, ஓமம், இந்துப்பு, பேய்ப்புடல், வளையலுப்பு, வெந்தயம், சீரகம், இவை வகைக்கு 5 வராகனெடை ($17\frac{1}{2}$ கிராம்), சவுக்காரம், நாட்டு வெண்காரம், வாய்விளங்கம், காந்தம் இவை வகைக்கு 3 வராகனெடை ($10\frac{1}{2}$ கிராம்), சிற்றரத்தை, வெடியுப்பு, சதகுப்பை, தூய்மை செய்த சிவதைவேர், தூய்மை செய்த வாளம், கருஞ்சீரகம், இவை வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை. அக்கிராகாரம் 2 வராகனெடை; இவற்றுள் இடித்துத் தூள் செய்யவேண்டியவை களைத் தூள்செய்து கல்வத்தில் தூள் செய்யவேண்டியவைகளைத் தூள்செய்து எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து திருகுக்கள்ளிப் பாலைச் சிறுகச்சிறுக வார்த்து இரண்டுசாமம் அரைத்து எடுத்து வைத்துக்கொள்ளவும்.

(ஆ) திருகுக்கள்ளி வேர்ப்பட்டை, அமுக்குரா வேர்ப்பட்டை, வெள்ளுகா வேர்ப்பட்டை, அழிஞ்சில் வேர்ப்பட்டை, எருக்கின் வேர்ப்பட்டை, கொடிவேலி வேர்ப்பட்டை இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம்; இவற்றைத் தனித்தனி நீர்வார்த்து வெண்ணெய்போலரைத்து ஒன்றாகச்சேர்த்து (அ)விலுள்ள தூள்களுடன் கலந்து கொள்ளவும்.

(இ) வெள்ளுகா இலை, வெண்ணொச்சியிலை, எருக்கிலை, அழிஞ்சியிலை, பிரண்டை, திருகுக்கள்ளி, இவற்றைத் தனித்தனி இடித்த சாறுவகைக்கு 1 படி, வெள்ளாட்டு மூத்திரம், கோமூத்திரம், கொள்ளு வேகவைத்த நீர் இவை வகைக்கு $\frac{1}{2}$ படி இவை எல்லா வற்றையும் ஒன்றாகக் கலந்து பானைக்குள் விடவேண்டும்.

(ஈ) ஒரு வளமான கருங்கோழி.

**செய்முறை:**—முன் முறையிற் சொல்லியிருக்கிறபடியே கோழி யையறுத்துத் தூய்மை செய்து முன் சித்தப்படுத்தியிருக்கிற மருந்தை நன்றாகக் கலந்து கோழிவயிற்றிற் செலுத்தித் தைத்து (இ)தயிலுள்ளவைகளைத் ாளியில்விட்டு வேடுகட்டி அதன்மேல்கோ ழியை வைத்து மேல்மூடி முன்போல் சித்தப்படுத்திக்கொள்ளவும்.

**அளவு:**—முன்முறையிற் கண்டபடியேயாம்.

**துணைமருந்து:**—முன்முறையிற் சொன்னபடியேயாம்.

**தீரும்நோய்கள்:**—சத்திகுன்மம், எரிகுன்மம், வலிகுன்மம், வாயுகுன்மம் முதலிய எட்டுவகைக் குன்மங்களும், குடல்வாதம், குடல்முறுக்குநோய், குடற்புரட்டு வாதம் முதலிய நூற்றிருபத்தாறு வாதவகைகளும், வாதசூலை, கிரந்திசூலை முதலிய பலவகைச் சூலைகளும் தீரும்.

**மருத்துணவு:**—முன்முறையிற் சொல்லப்பட்டவைகளேயாம்.

## 85. கருவங்கச் செந்தூரம்

காரிபலமு நாலு எடுத்துக்
கனிய வேயதை யுருக்கிப்பின்
கண்டாயவ்வெடை யிணங்கன் பொடித்து
நன்றுவரிப் பாலினில்
வாரியாகவே சாமம் நாலு
வலுக்க வரைத்து உருட்டியே
வகையுடன் சுண்டக் காயின்பிரமாணம்
துகையாய்க் கிராசமிட்டிட
நாரியாக்கேளுங் குமரிப் பாலை
நாடி யூற்றிக் கட்டியே
நலமதாகவே வில்லை கட்டியே
பெலமதாய்ப் புடம் போட்டெடு
காரிசிவந்து முருக்கம் பூவெனப்
பாரினிலே வாத மெல்லாம்
கதிந்து முனிவர் தானுரைத்தது
பதிந்துபாரும் பள்ளீரே. 176

தூய்மை செய்த கருவங்கம் 4 பலம் (140 கிராம்), வெடியுப்பு 4 பலம் எருக்கம்பால் செல்லத்தக்க அளவு, சோற்றுக்கற்றாழை அடிமரத்தின்பால் செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—வெடியுப்பைக் கல்வத்திலிட்டுப் பொடித்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து சுண்டக்காய் அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவேண்டும். கருவங்கத்தைச் சட்டியிலிட்டு அடுப்பேற்றி உருக்கி நன்றாயுருகினபின்பு முன் சித்தப்படுத்தியிருக்கிற வெடியுப்பு மாத்திரைகளை ஒவ்வொன்றாக சுருக்கிட்டு இரும்புக் குச்சியால் துழாவி வரவேண்டும். எல்லா மாத்திரைகளும் சென்று

விட்டால் கருவங்கமானது நொறுங்கிக் களங்கமற்றதாகிவிடும். பிறகு, இதனைக் கல்வத்திலிட்டுக் குமரிப்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து வில்லை செய்துஉலர்த்திஓட்டிவிட்டு மேலோடு மூடி ஐந்து சீலைமண் செய்து இருநூறுபலம் விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுக்க முருக்கம்பூப் போன்ற செந்தூரமாகி இருக்கும்.

அளவு:—$1\frac{1}{2}$ முதல் 2 குன்றியெடை,

துணைமருந்து:—தேன், நெய், வெண்ணெய், அந்தந்த நோய்களுக்குத் தகுந்த இளகம் முதலியவைகளாகும்.

தீரும்நோய்:—பிரமேகம், குன்ம நோய், பறங்கிச்ரூலை, வாத நோய், பித்தநோய், அதிசாரம், மூல சயம், இருமல், வெட்டை, அரையாப்பு, புற்றுகள், இந்திரிய ஒழுக்கு நோய் மேக நோய் முதலியவைகள் தீர்ந்து தாதுவிருத்தி, உடல்வலிமை முதலியவைகள் உண்டாகும்.

குறிப்பு:— இது வாதமுறைகளுக் காகுமென மூலத்திற்சொல்லி இருப்பினும் இது நோய்களுக்கே சிறப்பாக உபயோகப்படுத்தப் படுகின்றபடியால் இதனை மருத்துவ முறைகளுடன் சேர்த்தெழுதி இருக்கின்றோம்.

## 86. அரிதாரச் செந்தூரம்

தாரம்பலமும் நாலு எடுத்துத்
தனித்த கிளிஞ்சி நீரதில்
தாக்கிடு பாணிநீரை விட்டுறு
நோக்கியே தாரஞ் சுருக்கிடு
வாரமாகவே சுத்தி யாகுமாம்
நேர மாகவே யெடுத்துமே
வதைய தாகவே பலமு நாலெடு
தொகைய தாக வப்பிரேகத்தை
கோரமாகவே வீரங் காலெடு
கூட்டிக் கல்வம் பாணியால்
குற்றமற்றரை யெடுத்துப் புடமும்
வித்தகமாக ஒன்றிடு
பாரமா வரியெடுத்துக் கல்வம்
பதியவேவரி பாலினல்
பகரவ ரைத்துத் தாரமேலிடு
சிகரம்போலவே பள்ளீரே. 177

ஞானிப்புடமா யொன்று போட்டிடு
நலமான முருக்கம்பூ
ஞாலமான முன்கரி செந்தூரம்
ஏலவேயெடை சேர்த்தரை
கூனி நிமிர்ந்து தான்வரிப்பாலை
கூட விட்டு நடத்திடு
கூட்டியே வில்லை வெய்யோன்படவே
தாட்டிக மாகவைத்தெடு
வானிலே வில்லை மேலேகவசம்
வகைய தான வப்பிரேகம்
வகையதாக வரைத்து யங்கித்
துகையதாகவே யிட்டுமே
ஊனிரவியில் காய வைத்துமே
உள்ள சேவற் புடமதாம்
ஊற்றுப்போடு செவப்பு மாகும்
சித்திக்காகும் பள்ளீரே. 178

அரிதாரம் 4 பலம் (140கிராம்) இது பெருத்த கட்டியாக இருக்க வேண்டும். ஊமச்சியைப்பிளந்து இதற்குள்ளிருக்கிற நீர் ஒருபங்கு, பின் சொல்லப்படும் வெடியுப்புத் திராவகம் 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துக் கலந்து செல்லத்தக்க அளவு எடுத்துக் கொள்ள வேண்டும். தாளகக் கட்டிகளை ஓட்டில்வைத்து அடுப்பேற்றிச் சூடு கண்டபின்பு முன் சேர்த்துவைத்திருக்கும் கிளிஞ்சிநீர்க்கலவையைச் சிறுகச் சிறுகக் கொடுத்துச் சுருக்கிடவேண்டும். நான்கு சாமம் சுருக்கிட அரிதாரமானது எல்லாவகை மாசுகளும் அற்று சுத்தியாகிவிடும்.

அப்பிரேக நவநீதம் 4 பலம், வீரம் 1 பலம்; இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்திலரைத்துப் பிறகு வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச் சிறுகவிட்டு நான்குசாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடுமூடிச் சீலைமண்செய்து கவசத்தின் இருபதுபங்கெடை வறட்டியில் புடமிட்டாறினபின்னெடுக்க ஒரு விதத் தூளாகியிருக்கும்.

இந்தத் தூளைக் கல்வத்திலிட்டு எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக விட்டு நான்கு சாமமரைத்து முன் சித்தப்படுத்தியிருக்கிற தாளகக் கட்டிகளுக்குச் சமமாகக் கவசஞ்செய்து வெய்யிலிலுலர்த்தி ஓட்டி விட்டுமேலோடுமூடி ஏழுசீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் ஆறு பங்கெடை வறட்டியிற் புடமிட்டாறினபின்னெடுக்கத்தாளகமானது முருக்கம்பூப்போன்ற செந்தூரமாகி இருக்கும்.

அளவு:—1 முதல் 2 குன்றியெடை.

**துணைமருந்து;**—தேன், நேய், முதலியவைகள்.

**தீரும்நோய்:**—சயநோய், காசநோய், குன்மநோய், மேகநோய் முதலிய அநேக கடின நோய்கள் தீரும்.

## 87. துருசுச்செம்பு வேதை

எடுத்துத்துருசு பலமும் நாலு
இனிய கார மதனெடை
எடுத்துநடத்தி யுருக்கி ரவியா
மிதமதாகத் தகடடி
அடுத்துக் கத்த நீர்பிழிந்து
எடுத்திடு வெடிசீனமும்
அன்பாய்க்கழஞ்சி ரெண்டு மிட்டிடு
தென்பாய்க் கரைத்த நீரிலே
விடுத்துரவியைப் பழுக்கக் காய்ச்சி
விதமா யேழு தரந்துவை
விருப்ப மாகத் துவைத்தெடுக்கப்
பொருப்பதாக வெட்டையாம்
குடுத்திடுரவி ரெண்டு ருக்கியே
தொடுத்தி டுகாரிச் செந்தூரம்
குணம தாகவே தான்கருப்பதாம்
மணமதாகும் பள்ளீரே. 179

மதியிலெட்டுக் கிரண்டு ரவியாம்
வண்மை யாகக் கொடுத்துமே
மாட்டியூதிடு மட்டம் நேரெடை
தாட்டிகமாகத் தானிடு
சுதிபெற வேமம் மெடையேசேரு
கணக்கை யறிந்து பார்த்துமே
கண்டீர் வாதத்தைப் பாகமாகவே
நன்ருய்ச்செய்து பார்த்தெடு
பதியுமாகுமே புடத்துக் கிருக்கும்
பண்பா யோடா யொளிடத்திடாப்
பரியு,மாகுமே ஞானம்வந்திடும்
துரியமகுமே யேவலாம்
குணமதாகுமே யகத்திய மாமுனி
குறித்துச் சாத்திரஞ் சொன்னது
கூர்மையகாவே செய்திடவாதம்
நேர்மையாகும் பள்ளீரே. 180

தேனிலேபண வெடையு முண்ணு
திறமாக் குன்ம மெட்டுமே
திடமதான பறங்கிச் சூலையும்
அடமதான வாதமும்
வானிலேகும் பித்த முமதி
சார மூல மேகிடும்
வறண்டவிருமல் சயமும் மேகம்
வகையதான வெட்டையும்
கூனல் நிமிரு மூலமுமரை
யாப்புப் புத்துச் சூலையுங்
கொடியதான நோவு மேகுந்
துடிகண்டடங்கு மூலகரே.
ஞானமாமுனி அகத்தியர் சொன்ன
மோன மான வாதத்தை
நலம தாகவே பாகமாக
பலமதாச்செயும் பள்ளீரே. 181

## 88. இலிங்க அயச் செம்பு

காரிஅயமும் ரவியும் நேரெடை
கனத்த குகையி லுருக்கியே
கண்டாய் கல்வத்தில் நன்றுயரைத்துக்
காண் பழச்சாறு விட்டிடு
வாரியரவே வன்னி கெற்பம்
வகையரைப் பலமு மிட்டுமே
வண்மையாயிரு சாமம ரைத்து
உண்மையாக்காரங் கூட்டியே
சாரி பெறவே சேர்த்திடு
தாக்கியே புடம் போட்டிடு
தகமையும்பெறக் குகையி லிட்டு
வகை படவதை யுருக்கியே
பாரியாறவே எடுத்து நீகடை
பக்கு வப்பட வூதியே
பண்பாயெடுக்க ரவியு மாகும்
இன்பமாகுமே பள்ளீரே. 182

ரவியினெடைக்கு நாலி லொன்று
நலமா மேமஞ் சேர்த்துமே
நலமாய்க்கரியி லுருக்கியே யெடு
பெலமதாய்த்தக டாவடி

கவியவேதாரங் கெந்தம் வீரம்
கணக்காய்ச் சூதஞ் சேர்த்திடு
கருதிரவிக்கு நாலி லொன்றெடு
பரிதிவரிபால் விட்டுமே
பவியநடத்தித் தகட்டில் பூசிப்
பாக மாய்ப்புடம் போட்டிடு
பாண்பாய்நொருக்கிக் கரிய தாகும்
தெம்பாய்மதியி லெட்டிலே
தவியரெண்டு கொடுத்து ஊதித்
தங்க மெடையே சேர்த்திடு
தாட்டி கமாகு மேமமாகு
நீட்டிப்பாரும் பள்ளீரே. 183

தள்ளிப்புனலை யண்ட மாமுனி
யுள்ள தறிவி லுதித்துமே
தகமை பெறவே யுலகவாதிக்கு
யுகமையாக வுரைத்தது
வெள்ளியங்கிரி யுதித்த சிவனும்
விருப்ப மாக நூல்தனில்
வேதம் பெறவே சொன்னதைமுனி
நீதமாக வெடுத்துமே
கள்ளிக்கறந்த பாலைப் போலே
தெள்ளி யேயிதிற் சொன்னது
கருத்துடன் பாகங் கண்டெடுத்து
விருத்தமாகச் செய்தது
பள்ளியரே பாகங் கண்டெடுத்துத்
துள்ளியே வாதஞ் செய்திடு
பக்குவமாக ஞான யோகம்
மிக்கவந்திடும் பள்ளீரே. 184

பரையி னுதம் வேதமேநிறு
பருதி வாய்க்கல்வ மீதிடு
பகரவீரங் காவிடு பாணி
நகரவரைத்துப் புடமிடு
உரையதாப்போடு வெளுக்குந் திரும்ப
வரையிசை பாணி தன்னிலே
உற்றெடுத்து வில்லை கட்டியே
மெத்தவேபுடம் போட்டெடு
குறையில்லாமலே தாரம் நாலு
பரையி னுதை மொன்றிடு

கூட்டியே கல்வ மிட்டுவரிப்பால்
நாட்டி யேயிதை யரைத்திடு
வரையதாயதை வில்லை கட்டியே
உறைகொள்ரவி தானிடு
வடிவதாக வெடுத்தி டுபாக
முடிவுகேளடி பள்ளீரே. 185

காரங் காலுஞ் சுண்ணமும்படி
சாரம் நாலு அளந்திடு
கனியச்சட்டி யிட்டிடு பாதித்
துணிவாய்வில்லை வைத்திடு
பராவேமூடு சுண்ண நீரால்
கோர மாக வழுத்தியே
பதியவடுப்பி லேத்திடு சாமம்
முடியக்கமல மெரித்திடு
வாரவேயெடு முருக்கம் பூவாம்
தேர ரவியிற் ருக்கிடு
வடிவதாக ரெண்டுக் கொன்றிடு
துடிவதாகக் கருப்புமாம்
தேரவேமதி யெட்டில் ரெண்டிடு
கோர மாக வூதிடு
திடமதாக ஏம மெடைசேர்
சடமுமேமம் பள்ளீரே. 186

சயமுங்காச மெலிக்கடி யீளை
நயம தாகு முலகிலே
சதிராய் மேக மிருபதும்வலி
கெதியாயோடு முலகிலே
பயமுங்குற மெட்டெ டுபடும்
பதிவாய் வாத மெண்பதும்
பதிவாய்ச்சூலை நாற்பது மேகும்
விதிவாய் வந்த கிராணியும்
செயமாய்க் கன்ன சூலைமுதல்
சீரிய விடுப்புப் பிடியுடன்
செங்கரப்பனும் போகு மெனவே
சங்கதிர் கண்ட பனிப்போலே
மதியாய்ப் பொதிகை மாமுனிசொன்ன
மதியை யறிந்து பாரடி
ஆகமகலை நூலை யறிநீ
யோகமாகும் பள்ளீரே. 187

### 89. மூலக்கிராணிக்குப் புட்டவியல்

உள்ளியோமஞ் சுக்கு மேலமு
முண்மை யாகத் தட்டியே
உற்றுச்சட்டியில் வேடு கட்டியே
யுறுதியா யிளநீர்விடு
தெள்ளியேவேடு தன்னி லேயிடு
தீர மாக மூன்றையுந்
திட்டமாகவே மூடிச் சட்டியை
நட்டமில்லாம லெரித்திடு
துள்ளியவித்து எடுத்துப் பிசைந்து
தொக்கவே யிட.மூலமும்
துட்டமூலக் கிராணி யுடனே
தோற்றுஞ்சோற்றுக் கழிச்சலும்
மெள்ளக் கழிச்ச லேகிடுமிது
மேன்முனி சொன்ன பாகமும்
மிக்கவறிந்து முறையாய்ச் செய்ய
விதத்தையறியும் பள்ளீரே. 188

தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ், மேற்றோல்சீவின சுக்குத் தூள், ஏலத்தூள், இவை வகை 1 பலம்(35கிராம்), இம்மூன்றையும் அம்மியில் சேர்த்தரைத்து எடுத்துக் கொள்ளவும். ஒரு சிறு மண் பாத்திரத்தில் அரைவாசி இளநீரைவிட்டு அதன்வாயில் மெல்லிய துணியைவேடுகட்டி அதன்மேல் முன் சித்தப்படுத்தினதை வைத்து மேற்சட்டிமூடி அடுப்பேற்றி மெதுவாயெரித்து இளநீர்சுண்டின பின்பு எடுத்துப் பீங்கான் பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும்.

**அளவு:**—½ முதல் 1 வராகனெடை.

**தீரும்நோய்:**—மேற்கண்ட மருந்தைக் காலை மாலை இரண்டு வேளையும் உபயோகித்துவர மூலநோய், மூலக்கிராணி, சோறு சோறாய்க்கழியும் கழிச்சல், மூலசம்பந்தக் கழிச்சல் ஆகியவைகள் தீரும்.

**குறிப்பு:**—முன் சித்தப்படுத்தின மருந்திற்குச் சமனெடை பனை வெல்லத்தைச் சேர்த்தரைத்து இளகிய பதமாகச் செய்துகொண்டு உபயோகித்தாலும் உயர்ந்த குணத்தைத்தரும்.

### 90. பவளச் சுண்ணம்

தோடைப்பூவு மெடுத்திடு நன்றாய்
வேடு கட்டி யவித்திடு

தொக்கவே யதைப்பிழிந்து நன்ருய்
மிக்கவதையும் வைத்திடு
கோடைப் பவளச் சோறெடுஅதை
யோட வேவைத் தூதிடக்
கொடுமை யாகவே சுண்ணமாகும்
அடுமையாய்ப் பணவெடையிடு
ஓடை யிருமற் சயமுமோடும்
வாடை யிலது ஏகிடும்
ஒக்கவே யெள்ளு தானதையெடு
மிக்கையாக உண்டிடு
பேடை யாசினுக் கிருமலுஞ்
சாடை யாயதை யொழித்திடும்
பித்த மமது அடிபடுமென
நித்தமுமுண்ணும் பள்ளீரே. 189

பவளம், அல்லது, பவளப்புற்று 1 பலம் (35 கிராம்), ஆடாதோடைப் பூவை பிட்டுப்போல அவித்துப் பிழிந்து எடுத்த சாறு செல்லத்தக்க அளவு.

**செய்முறை:**—மேற்படி பவளத்தை, அல்லது, பவளப்புற்றைக் கல்வத்திலிட்டுப் பொடித்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஈரமில்லாமல் நன்ருயுலர்ந்தபின்பு குகையிலிட்டு மேற்சில்லிட்டுச் சீலைமண் செய்து குகை பழுக்கும்படியாக ஊதியெடுத்து வைத்து ஆறினபின் உடைத்துப்பார்க்கச் சுண்ணமாகியிருக்கும். மஞ்சளிற் போட்டால் சிவக்கும் அப்படிச் சிவக்காவிட்டால் இன்னெருதடவையும் முன்போல் செய்து கொள்ளவும்.

**அளவு:**—2 முதல் 4 குன்றியெடை.

**துணைமருந்து:**—வெண்ணெய், நெய், தேன், முதலியவைகளாம்.

**தீரும்நோய்:**—இருமல், சயம், காசம், சினுக்கிருமல் முதலிய கபநோய்கள், உட்டிணநோய்கள், முதலியவை தீரும்.

## 91. அயச் செம்பு

அயமுங் கெந்தகம் வீரங்காரம்
அதிலுள்ள ரவிதா னெடை
அணியக் கல்வத்தி லிட்டுப்பழச்சாறு
துணியச்சாம மூன்றரை

COMPLIMENTARY

நயமாய் வில்லைசெய் சூரியன்பட
மயமா யுலர்த்திக் கெசபுடம்
நாட்டியிட்டு முன்ர வியெடை
கூட்டிக்காரி சேர்த்தரை

பயமாய் வில்லைசெய் புடமிடுஎடு
பதியக் குகையி லிட்டுமே
பார்த்து உருக்கு மணியதாகும்
கேர்த்தியாயதை யூதிடு
செயமாய் ரவியாம் எடுத்திடுமதி
தயவா யெட்டு ரெண்டிடு
சரியாயுருக் கியேமம் எடைசேர்
பரியாம்பாரடி பள்ளீரே. 190

### 92. உலோக செந்தூரம்

வைத்த லோகம் பலமும்நாலு
வகைபெற ரவிதானெடை
வகுத்து எடைசேர் குகையிலிட்டுத்
தொடுத்து ரெண்டையு முருக்கிடச்
சித்தமாக நோறுக்கி மணியாய்ச்
சிறக்கக் கல்வ மிட்டிடு
சித்திபெறவே யுடைத்துப் பொடித்து
நத்தியேவன்னி கருப்பமும்
குற்றமில்லாமற் பலமு மொன்று
குணம தாகக் காரமும்
கொண்டு அரைத்து விடுத்துப்பழச்சாறு
குணமதாய்ச் சாமம்நாலரை
வித்தகமாக வரைத்து வழித்து
விதம தாகவே வில்லைசெய்
விருப்பமாகவே வெய்யோன் முகத்தில்
நெருக்கவைத்திடு பள்ளீரே. 191

புத்தியாகப்புடம் ஒன்று வைத்து
புதுக்குகையிலிட் டுருக்கியே
புலம்படகுறங் கரிய தாகும்
நலம்படவஞ்சு உருக்கியே
நத்தியாகவே காரங் கூட்டி
நலம தாக நடத்தியே
நாடியேகுகை யிட்டு ருக்கவே
தேடியுமது மணியுமாம்

சித்தி யாவே யூதியெடுக்கச்
சிறந்த சூரியன் போலவே
சிறந்துவந்திடுஞ் செம்பை யெடுத்துக்
கரந்தமதியில் பத்துக்கு
பத்திபாகவே யொன்று இட்டிடு
சித்தி யேம மெடைசேரு
பகுந்து மாற்று எட்டதாகும்
உகந்தசெந்தூரம் பள்ளீரே. 192

அயத்தின் செம்பை நாலுருக்கியே
யன்பா யேம மொன்றிடு
அதையுருக்கியே தகடா வடித்து
அன்பாய்மருந்து பூசக்கேள்
நயத்திலேசிலை கெந்தி சூதம்
நலம தாக வீரமும்
நலமதான கட்டுக் கரைதான்
பெலமாய்க்கல்வ மிட்டுமே
பயத்தி லேயரை தானேவரிப்பால்
பக்குவ மாக விட்டுமே
பண்பா யரைத்துத் தகட்டிற் பூசித்
தெம்பாய்நொறுக்கிப் புடமிடு
தயத்தில் வைக்கக் கருப்பதாகுந்
தானே பொடித்துச் சொல்லக்கேள்
தாக்கிடக்கரி செம்பு மாகும்
நோக்கிக்கேளடி பள்ளீரே. 193

நொறுங்கினகரி நாலத் தொன்று
நுகர்வெங் காரம் பொரிச்செடு
நோக்குவெங்கா ரமெடை மனோசிலை
பார்க்கச்சிலை சூதமாய்
நருங்கினதொரு செங்கீரைச் சாற்றில்
நலமா யரைத்து உலர்த்தியே
நாடியேவோடு தன்னிலே வைத்து
மூடியேஞானிப் புடமிடு
உருக்கி முருக்கம் பூவதுபோலே
நொறுங்கிச் சிவந் திருந்திடும்
உறுதிபோலவே செம்பு நூற்றில்
அருதியொன்று கொடுத்திடு
அருதியாகவே செம்புகட்டியே
உறுதியாய் மதியேழிலே

அடவாகமூன்று ரவியைச் சேர்த்திடத்
திடமாயாகும் பள்ளீரே. 194

திடமாய்ச் செந்தூரம் பணவெடையுண்ணு
தீர்க்க மாகுமே பிணியது
திறமாம் வாத மெண்பதுமுதல்
நடமானசூலே பதினெட்டும்
வடமகோதரமும் பீலிகை
வகைய தாகும் நரைதிரை
வாட்ட மாகவே யேகிடுமது
நாட்டமில்லா தொழிந்திடும்
தடமாயயத்தை மறைத்து நூலில்
திடமா யிரும்பு என்றதில்
கண்டிற வாதி கல்லுளியிலிருந்த
விண்டிற் செம்பு நல்லது
தடமாய்ப்புனலே யெடுத்து உண்ட
திடம காமுனி சொன்னது
தாக்கிடவேதை யாகும் படிக்கி
நோக்கிப்பாரு பள்ளீரே. 195

**93. அயமறைத்துச் சொல்லிய பாகத்துக்கு விவரம்**

வாதிக் கயந்தானே மறைத்துப்
பேதிக் கிரும்பு சொன்னது
வகையாகுக்க லெலும்பைக் கடித்துத்
தடியும்ரெத்தமுங் கண்டாப்போல்
சேதியிலிரும் பிலிருந்த கருநீர்ச்
செம்பிற் சேர்ந்து வர்ணத்தைச்
செகுத்தழிக்கப் பிடித்து வங்கத்தைத்
திறமாய்க்கொடுத் தூதியே
கோதியெடுத்துப் பொன்ன தாச்சுது
குணமா யலேந்து திரிந்திடா
கொடுமையான வொழுக ரையெடு
திடமாய் ரவியைச் சேர்த்தெடை
நாதியாகவே சித்தி யாகுமாம்
வேதி யாமுனி சொன்னது
நடத்தும்பாகந் திடத்துடன் கண்டு
நலமாய்ச்செய்யும் பள்ளீரே. 196

ஊனே யுயிரே யுயிருக்குண் மெய்ப்பொருளே
தேனேநீ மூத்தபள்ளி சொன்னதெல்லா மெய்யாமோ

நானேதான் சொல்லும்வகை நட்டமாய்ப் பித்தளையும்
ஆனேன் பொன்னாக நாட்டி லறைவேனே.

### 94. சத்துக்கு வங்கச் செந்தூரம்

வங்கத்தைத் தகடடித்துக் கல்வம்
இங்கி தப்பலம் நாலிடு
வகைய தாயிட் டதைக்குமரிநீ
ரதுகைபடவே யரைத்துப்பின்
துங்கமாகவே வில்லை கட்டிப்பின்
தொக்கவே பானுவிற் காயவை
துடிய தாகவே பெரும்புடமிட்டு
படியவேகையா லெடுத்திடு
பங்கமாகவே பவள நிறமாம்
பதிய வேயதை யரைத்திடு
பருகவே யஞ்சுபுட மிட்டெடுக்கச்
சதிசெய்சத் தில்லையாம்
உங்கள் சிறப்பு நூறுரவியா
முகந்து செந்தூர முறையிதாம்
உறுதியாகவே முனிவர் சொன்ன
வருதிகாணும் பள்ளீரே. 197

பொட்டிலையொடு சீனம் நேரே
பொருந்த வேகல் லுப்பெடு
பொடித்துச் சட்டியி லுருக்கியெடுத்துப்
பொருந்தமுன் வங்கப்பவளத்தில்
கட்டளையிடை சேர்த்து வரிப்பால்
திட்ட முடனே யரைத்துப்பின்
காண ரவியிற் காயவைத்ததைத்
தோணவே புடமதிட்டெடு
இட்டமுடன் முருக்கம் பூப்போல
சட்ட மாகவே சிவந்திடும்
இனிய தாகவே ரவிநூறென்றில்
கனியவேயதைக் கொடுத்திடு
முட்டரவி யுமேம மாயிது
சிட்ட ரேயாண் டிருந்திடும்
செயமகாமுனி யருளின் சொல்லை
நயமாயாராய்ச்சி செய்திடே. 198

பணவெடைதான் மதுதனிலே யுண்டிடக்
குணம தாகும் வியாதியும்

பதியவே குன்மமெட்டு மேகும்
விதியின்சூலை பதினெட்டும்
உணவதான வாத மெண்பதும்
சினத மாகப் போய்விடும்
உகந்த மேக மிருபத்தொன்றும்
நயந்துகாட்டி லொளிந்திடும்
சணமதான நரை திரை யறுமிகச்
சடியு மெய்யில் அரிப்புப்போம்
சதியாம் நோய்களகன்று மிக்க
விதியின்கெதியாய்ப் போய்விடும்
தணியாநோய் தணிந்தி டுமிகச்
சரியாய்க் காயஞ் சித்தியாம்
சாற்று வீரிதைப் பார்த்துப்பாகஞ்
சரிமகாமுனி சொன்னதே.




### 95. வங்கச் செந்தூரம்

குமரிச் சோறுதனை யெடுத்திடுநீ
கூட்டிக் கடுக்கா யுடைத்திடு
குணமதாயதைப் போட்டுப் பிசைந்து
கூர்ந்துபிழிய நீரதாம்
அமரிக் கையுடன்வங் கத்திலிடு
அரைத்து வில்லை ரவியிடு
அடவதாகவே பொரியப் புடமுந்
திடமதாகப் போட்டெடு
தமரிக் கையுடனஞ்சு புடத்தில்
தாக்கச் சிவக்கு முருக்கம்பூ
தாக்கியேயெடு சிலையுஞ் சூதமுந்
தாகநேரெடை யிட்டிடு
நமரிக் கைவரிப்பா லைநேரிடு
நாட்டியே மெள்ளப் பூட்டிடு
நலம தாகவே வில்லைகட்டியே
உலரவேபுடம் போட்டிடே.

போட்டெடுக்க முருக்கம் பூப்போல
காட்டிற் பண்டித ரெல்லாரும்
பொருந்த மதுவிற் பணவெடையிட
அருந்தச் சயமுங்காசமும்
கேட்டுவாத மெண்பதும் போகும்
நாட்டு மேவலி குன்மமும்

கருத்த சூலைபதி னெட்டும்போகும்
சுருதியாய்ப் பித்தம்நாற்பதும்
வாட்டுங்கார் மேக முமனை
யாட்டியரை யிற்புத்தும்
வளிம கோதரம் பவுத்திரம்முதல்
ஒழியுமேழரை நாளினில்
பாட்டுதனக் கரியபத் தியமரைக்
கீரைப் பிஞ்சு மாங்கொட்டை
பதியவே சுட்ட வத்தலையாவின்
பாலுங் கூட்டி யுண்டிடே. 201

கருவங்கம் 1 பலம் (35 கிராம்), பேரண்ட ஓடு, அல்லது சிற்றண்ட ஓடு 1 பலம், இதனைப் பொடித்துத் தூள் செய்துக்கொள்ள வேண்டும். வங்கத்தைச் சட்டியிலிட்டு உருக்கி உருக்கு முகத்தில் மேற்படி அண்டத்தூளைச் சிறுகச் சிறுகச் சுருக்கிட்டு இரும்புக் குச்சியால் துழாவிவர வேண்டும். எல்லாத் தூளும் சென்று வங்கமும் நொறுங்கித் தூளான பின் எடுத்துக் கொள்ளவும்.

சோற்றுக்கற்றாழைச் சோற்றில் கடுக்காய்த்தூளைப் போட்டுப் பிசைந்து வடிகட்டின நீர் செல்லத்தக்க அளவு. மேற்படி வங்கத் தூளைக் கல்வத்திலிட்டு மேற்படி சோற்றுக்கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி, மூன்று சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் ஐந்து பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் கொள்ளவும்.

பிறகு மருந்தை எடுத்துக் கல்வத்திலிட்டு முன் போலரைத்து முன்போற் புடமிடவும். இவ்விதம் மடக்கி மடக்கி ஐந்து புடமிடச் சிவந்து போகும். அப்படிச் சிவக்காவிட்டால் சிவக்கிற வரையில் இன்னும் இரண்டொரு புடமிடவும்.

பிறகு இச்செந்தூரம் ஒரு பங்கு, மனோசிலை ஒரு பங்கு, தூய்மை செய்த இரசம் ஒரு பங்கு, இம்மூன்றையும் கல்வத்திலிட்டரைத்து எல்லாம் ஒன்றாய்க் கலந்தபின்பு எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து வில்லை செய்து உலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை விராட்டியில் புடமிட்டெடுக்க, முருக்கம் பூப்போன்ற செந்தூரமாகி இருக்கும்.

**அளவு:**—1 முதல் 1½ குன்றியெடை.

**துணைமருந்து:**—தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளாம்.

**தீரும்நோய்:**—சயம், காசம், வாதநோய்கள், குன்மநோய்கள், சூலை நோய்கள், பித்த நோய்கள், கருப்பு மேகங்கள், அரைப் புற்று, இலிங்கப்புற்று, மகோதரம், பவுத்திரம் முதலிய அநேக நோய்கள் தீரும்.

**மருந்துணவு:**—முருங்கைப் பிஞ்சு, அரைக்கீரை, அவரைப் பிஞ்சு, மாங்கொட்டை, சுட்டபுளி, பசுவின் பால், ஆகியவைகள் ஆகுமெனினும், நோய் வலிமை, உடல் வலிமை முதலியவை களுக்குத் தகுந்தபடி உடலியல்பிற்கு ஏற்கும் பண்டங்களைச் சேர்த் தும், ஏற்காத பண்டங்களை நீக்கியும் பத்தியம் வைக்கவேண்டியது மருத்துவர்களின் கடமையாகும்.

### 96. காக்கைப்பொன் செம்பு

உண்டிடவொரு குண்டவன் செம்பு
உறுதி பெறவே சொல்லுவேன்
உற்றுக் காக்கைப் பொன்னுதானு
உறுதியான குகைதனில்
கண்டிடவதை யுருக்கி யெடுத்துக்
கனிவாய்க் கட்டி யிட்டுநீ
கதிபெறவதின் மேலே கவசங்
கல்லுப்புப் பலம் நாலெடு
பண்டிதவீர மொன்று மெடுத்துப்
பதியக் கல்வ மிட்டுநீ
பாகத் துடனே பொடித்துச்சூடன்
ஏகத்துடனே போட்டுநீ
புண்டிதப்புடம் போட அதரும்
புறப்ப டுமதை எடுத்துவை
பொருந்தக் குடவணடியில் நின்ற
அருந்த உப்பைப் பொதிந்திடே. 202

பொதிந்திப் படியஞ்சு புடத்தில்
போக்கோ டேஎல்லாம் பதருமசம்
போகமான அதரெல் லாமெடு
தாகமாகவே காரீயம்
வதிந்தொன் றிட்டரைத் துருக்கி
வாட ஊதி யெடுத்துப்பார்
வலுமை யாகவே ரவியுமாகும்
வடிவதாக னலரிபோல்
கதிந்துரவியில் நாலுக் கொன் றிடு
கனிவாக ஏமம் ஒன்றிடு

கரியி லுருக்கி யடித்திடுதட்டிக்
கருவாய்த்தகடு தன்னிலே
உதிர்ந்தநாற்றம் வீரம் நிறுத்து
உறுதி யான தகட்டிற்
குற்றநிறுத் தரைக்கால் வாசி
யுறுதியாகப் பொடித்திடே. 203

பொடித்துக் கல்வ மீதிலிட்டுநீ
போக்கொடே தகட்டைக் காயவை
பொருந்த வெடுத்து நெருப்ப தாகப்
புலமைப்படவே கெந்தியில்
அருந்த இட்டெடு தகடும்அதரும்
அன்ப தாக நொறுங்கிடும்
அடவாயெடுத்து மதியில் நாலொன்று
திடமதாகக் கொடுத்திடு
நடித்துருக்கி யெடுத்துப் பாரு
நலமாய் மாற்றுறதாம்
நலமையாக விற்றுச் செலவும்
பிலமதான ஞானம்பார்
வடித்து மாமுனி பள்ளிற்சொன்ன
வளமை யான வாதத்தை
வகைய தாயதைப் பாகமாக
வலுவாய்ச்செய்யும் பள்ளீரே. 204

## 97. துருசிச் செம்பு

துருசுதன்னைப் பலமெடுத் துப்பின்
தூக்கி மெள்ள வுருக்கிப்பின்
தொக்க தாகவே ரவியதாகு
மிக்கவே அதையெடுத்திடு
பரியதாகவே நாலுக் கொன்றிடு
பாரய மேமமொன்றிடு
பக்குவப்படி யுருக்கித் தகடாய்
மிக்க வேயதை யடித்திடு
புரியுந்தகடுக் கரைக்கால் வாசி
புகல் கெந்தகம் வீரமும்
பொக்கோடே நிறுத்தரைக்கால் வாசி
பொடித்துக் கல்வமீதிலிடு
நரியதாகக் காய்ச்சித் தகட்டை
கலமா யதிலே வைத்திடு
நாடித் தகடு வெட்டையாகும்
நலமாய்க்கேளும் பள்ளீரே. 205

மதியி லெட்டுக் கிரெண்டுது
மயமா யேமம் ஒன்றிட்டு
மகம்பெற வேமம் எட்டதாகும்
மதியாய்ப்பழுத்தது நேர்மைபார்
விதியிலா வெடியுப்புக் காவிக்கு
மிக்க விருந்திடு முண்மைபார்
விருப்பமாகவே பாகத்தைக் கண்டு
உருப்படச்செய்யும் வாதிகேள்
நிதியதாகுமே எளிதிலே வேதை
நிசம தாகச் செய்திட
நிகரில்பெரிய ஞான மாகுமே
பகரில்சுழியின் மீதொரு
பதியுமாக அகத்தி யமுனி
செதியாய்ச் சொன்ன நீதிபார்
பரிவுட னுண்டே செய்திட வாதம்
பலிக்கும்பாரடி பள்ளீரே. 206

### 98. சகல நஞ்சுகளுக்கு முறிவு

மங்கை புருடனிடம் வாதாகப் பின்னொருவன்
செங்கையினுல் சேரச் சினந்த வகையதனுல்
திங்கவே பாடாணந் திறமாக நஞ்சையுண்டால்
இங்கிதமாய்த்தான்முறிக்க வியல்பாகச் செய்தனர்காண்

கன்னியரே எட்டிக்கொட்டை தின்ற
கனத்த நஞ்சை முறிக்கவே
கருணை பெறவே நல்வற்சாறு
கசக்கியுண்ண முறிந்துபோம்
பின்னிலேமரு தோன்றி யுண்டு
பிதற்று வாரை முறிக்கவே
பிசகில் லாததான் திக்காய்தட்டி
நசையாய்ப் பாணியிட்டுநீ
தன்னிலேகொடு மூன்று போது
உன்னி யேயது முறிந்திடும்
தக்கஊமத்தங் காயைத் தின்றிடத்
தாமரையிலை கசக்கியே
துன்னியே சாறுகொடுத் திடக்கடல்
நன்மையாக வொழிந்திடும்
தொன்மை மாமுனி யருளி னூரிது
நன்மையாகு மூலகீரே. 207

கள்ளிப் பாலை மெள்ளவுண்ட
கனத்த கன்னியை யிருத்தியே
கருத்தஆவரை யிடித்துப் பிழிந்து
பொருந்திப் போடத்தீருமாம்
துள்ளி அலரி மூலமெண்ணெய்
உள்ளிற் கொண்டு மயங்கியே
துடித்துக் கடக்கக் கடுக்காய்நறுக்கிப்
பொடித்துப்பாணியில் குழப்பியே
துள்ளிப் பாலடை தன்னிலேயிடு
மெள்ள நஞ்சு முறியுமாம்
குணமதாக நெய்யுண்ட பேர்க்கும்
மணமாய்வெந்நீரைக் கொடுத்திட
தெள்ளி யுருகி நீரிலிறங்கும்
உள்ள படிக்கு நல்லது
திறமையாகவே முனிவர் சொன்ன
வுரகமாகுமே பள்ளிரை. 208

நெல்லின் வேரைப் பிடுங்கி யரைத்து
நேராய்ச் சர்க்கரை தனையிட்டு
இருணயத் துடனுண்ட பேர்க்கு
துருணமாக முறிந்திட
பல்லுங்கூசு மெலுமிச் சம்பழம்
நல்லசா றரைப்படி
பகர்ந்து கொடுக்க நஞ்சுமுறியும்
உகந்துகருணை செய்திடு
சொல்லுகின்றேன் சுண்ணம்பு தின்றவள்
மெய்ல மஞ்ச ளுண்டிட
சித்தி மாகவே முறிந்துமோமது
பத்தியாகவே செய்திடு
கள்ளின் வாளத்தை யுண்டிட வாந்தி
கழிச்சல் மயக்கங் கண்டிட்டால்
கடினமாகவே வசம்பு சுட்டிக்
கறுக்கித்தேனை விட்டுமே
மெல்லக் கொடுக்க முறிந்திடுமது
சொல்லைப்போல நின்றிடும்
மேன்மை மாமுனி கூறின்றிதை
யாண்மையாகும் பள்ளீரே. 209

சிவதை வேரைப் பிடுங்கி யுண்ட
சிறந்த நஞ்சை முறிக்கவே

சேரும் வெள்வேற் சாறுபிழிந்து
தீர்க்கமாகவே கொடுத்திட
அவத்தை யில்லாமல் முறிந்திடுமது
கவன் மாக வொழிந்திடும்
அன்பாய்க் குன்றி யுண்டி டிலதைச்
தென்பாய் முறிக்கமருந்துகேள்
கவனமாகவே காரம் பொறித்துத்
தவன மாகக் கொடுத்திட
கருணை யாகவே முறிந்திடுமது
தருணமாக வொழிந்திடும்
தவனம் வெள்ளைப் பாடா ணமுண்ட
தக்க வாளைக் கிடத்தியே
தாட்டிகமாக மிளகு பாணியும்
நீட்டவேதீரும் பள்ளீரே. 210

வெற்றிலையெண்ணெய் விளர்விக் குடிக்கும்
விருப்ப மான பெண்ணுக்கு
வீதமான் முத்தின தேங்காய்
நீதமாய்ப் பாலைப்பிழிந்துமே
பற்றவே கொடுவிடங் கள்முறியும்
சித்தி பெறவே நல்லது
பரிவுடன் வீரந்தனையு முண்டால்
புளியாரை மூலிப்பிழிந்திடு
சாற்றி ல்ரைக்காற் படியுமுண்டால்
பத்தி யாக முறிந்திடும்
சரியாகப் பூரந் தனையு முண்டு
நெறியாய்வாய்கள் குழைந்திட்டால்
வித்தகரே யிளநீரிற் சீனம்
விருப்ப மாகப் பொடித்திடு
விரும்பி வழுக்கை தின்றிட நலம்
கரும்புமினிது பள்ளீரே. 211

தாளகமுண்டுத் தவித்துக் கிடந்தால்
தாட்டிக மாக வோமத்தைத்
தாகமுடனே கறுக்கிப் பர்ணி
போகம்ாகக் கொடுத்திட
னேமாகவே முறிந்தி டுமது
சோரம் வீரந் தின்றிடில்
தின்ணயத் துடனே மாசிக்காயைத்
தருணம் வெள்ளாட்டுப்பாலிலே

வாளமாக வரைத்துக் குழப்பி
வலுமை யாகக் கொடுத்திட
வடிவ தாக வொழிந்திடுமது
துடிகளடங்கிப் போய்விடும்
கூளமாகவே ரசத்தின் பதங்கங்
கூட்டிக் கொடுக்க வெந்திட்டால்
குணமதாக வாவின் பாலை
யுண்ணவேகொடு பள்ளீரே. 212

தொடுக்க வேகந் தீர்ந்துபோகு
மடுத்து மெள்ளப் பார்த்திடு
குணமதாக வெல்லா நஞ்சுக்கு
மணமதாகு நீலிவேர்
படுத்துமேயதைத் தட்டி சட்டியில்
அடுத்து மேயதைக் கியாழமாய்
பக்குவப்படி யிறுத்துக் கொடுக்க
மிக்கவேதீரும் நஞ்செலாம்
கடுத்துமே நஞ்செல்லா முறியக்
கொடுத்தி டோணங் கொடிதனைத்
தாட்டிக மாக மூன்றுபோது
நீட்டிக்கொடுக்கப் போய்விடும்
உடுத்த வகத்திய மாமுனிவருந்
தொடுத்து நஞ்சை முறிக்கவே
உண்மையாகவே பண்டிதஞ் செய்யத்
தன்மையாகும் பள்ளீரே. 213

ஆதியான் நூலை யறிந்து
அன்பாய்ப் பள்ளிரு நூருய்
அடவதாகப் படித்துப் பண்டிதந்
திடமதாகச் செய்திடு
சோதிபெறவே களங்கு செந்தூரஞ்
சுகம தான பிட்டுடன்
சுருக்கமாகப் புகையு டனயம்
நெருக்கமாகச் செம்பையும்
வீதியாகவே சரக்கி ழயாம்
விருப்ப மாகச் சொன்னதில்
வேக முடனே பாகமாக
வித்தகரே நீங்கள்செய்திடில்
சாதிச் சிறியனுயிருந் தாலும்
வேத மாமுனி யாகுவார்

சகல சரக்கு மடுத்துப் பாரு
சிகரில்வந்திடும் பள்ளீரே. 214

எட்டிக் கொட்டையைத் தின்று விடமித்தால் நாவல் இலையை இடித்துச் சாறுபிழிந்து சுமார் அரை ஆழாக்குப் பருகச் செய்விக்க அந்த நஞ்சு முறிந்துபோகும்.

மருதோன்றிவேரை அரைத்துச் சாப்பிட்டு விடமித்தால் ஒருபலந் தான்றிக்காய்த்தோலைக் காற்படி தண்ணீரில் போட்டு ஒரு ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிப் பருகச் செய்விக்கவும். இவ்விதம் மூன்றுபொழுது கொடுக்க மேற்படி நஞ்சு முறிந்து போகும்.

ஊமத்தங்காயைத் தின்று நஞ்சானல் தாமரை இலையை இடித்துப்பிழிந்த சாறு சுமார் அரையாழாக்குப் பருகச் செய்விக்க மேற்படி நஞ்சு முறிந்துபோகும்.

கள்ளிப்பாலைக் குடித்து நஞ்சானல், நிலஆவாரையை இடித்துப் பிழிந்த சாற்றை சிறுகச்சிறுகக் குடிப்பாட்ட மேற்படி நஞ்சு முறிந்துபோகும்.

அலரிவேரை அரைத்து எண்ணெயிற் கலக்கிக் குடித்து நஞ்சானல், ஒருபலங் கடுக்காய்த்தோலை ஒரு ஆழாக்கு தண்ணீரில் போட்டு அரை ஆழாக்காகக் காய்ச்சி வடிகட்டிப் பருகச் செய்விக்க அந்த நஞ்சு தீரும்.

நெய்யை அளவிலதிகமாகக் குடித்து நஞ்சானல் சற்று சூடான வெந்நீரைக் குடிப்பாட்ட, அந்த நஞ்சு முறிநதுபோகும்.

நெல்லிவேரை அரைத்துச் சர்க்கரையிற் கலந்து சாப்பிட்டு நஞ்சானல் அரை ஆழாக்கு எலுமிச்சம் பழச்சாற்றைக் குடிப்பாட்ட, அந்த நஞ்சு முறிந்துபோகும்.

சுண்ணம்பை அதிகமாகத் தின்று நஞ்சானல், மஞ்சளை அரைத்துத் தண்ணீரில் கரைத்துப் பருகச் செய்விக்க அந்த நஞ்சு முறிந்துபோகும்.

நேர்வாளத்தையுண்டு நஞ்சானல், வசம்பைச் சுட்டுச் சாம்பலாக்கிச் தேனிலிழைத்துச் சாப்பிட அந்த நஞ்சு முறிந்துபோகும்.

சிவதை வேரை அதிகமாகச் சாப்பிட்டு நஞ்சானல், வெள்வேலம்பட்டைச் சாற்றைப் பருகச் செய்ய அந்த நஞ்சு முறிந்து போகும்.

குன்றிமணிப் பருப்பை அதிகமாகச் சாப்பிட்டு அது நஞ்சானால் வெண்காரத்தைப் பொரித்துப் பொடித்து நெய்யில் கலந்து உண்ண, அந்த நஞ்சு முறிந்துபோகும்.

வெள்ளைப் பாடாணத்தைத் தின்று நஞ்சானால், ஒரு பலம் மிளகை வறுத்து உடைத்து ஒரு ஆழாக்கு நீர்விட்டு அரை ஆழாக் காகச் சுண்டவைத்துப் பருகச் செய்விக்க, மேற்படி நஞ்சு முறிந்து போகும்.

வெற்றிலைச் சாற்றையும் நல்லெண்ணெயையும் சேர்த்துக் குடித்து நஞ்சானால் முற்றின தேங்காய்பாலை குடிபாட்ட, அந்த நஞ்சு முறிந்துபோகும்.

வீரத்தைத் தின்று நஞ்சானால், புளியாரைச் சாற்றைச் சுமார் ஒரு ஆழாக்குப் பருகச் செய்விக்க அது முறிந்துபோகும். இன்னும் மாசிக்காயைப் பொடித்து வெள்ளாட்டுப் பாலிற்போட்டுக் கலக்கிப் பருகச் செய்வித்தாலும் நீங்கும்.

இரச கருப்பூரத்தைத் தின்று வாய்வெந்தாலும், நஞ்சானாலும் படிகாரத்தைப் பொரித்துப் பொடித்து இளநீரிற் போட்டு பருகச் செய்விக்க, இந்த நஞ்சு முறிந்துபோகும்.

தாளகத்தைத் தின்று நஞ்சானால், ஓமத்தை வறுத்துக் கறுக்கி ஆழாக்குத் தண்ணீர் விட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிப் பருகச் செய்விக்க, அந்த நஞ்சு முறிந்துபோகும்.

இரசப்பதங்கத்தைச் சாப்பிட்டு வாய் வெந்தாலும், நஞ் சானாலும், பசும்பாலைக் குடிப்பாட்டிவர, அந்த நஞ்சு முறிந்து போகும்.

அவுரிவேரைச் சிதைத்து ஆழாக்குத் தண்ணீரில் போட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிப் பருகச் செய்விக்க எல்லாவித நஞ்சுகளும் முறியும்.

ஓனுங்கொடிக் கொழுந்தையரைத்து ஒரு கொட்டைப் பாக் களவு காலை மாலை இரண்டு வேளையுந் தின்றுவர எல்லா நஞ்சு களும முறியும்.

**குறிப்பு:**—இந்த ஓனுங்கொடியை அதிகமாக உபயோகித்து வந்தால் சிலருக்கு உணவேற்காமை உண்டாவது வழக்கமாதலால் இதனை அதிக நாள் உபயோகிக்காமல் விழிப்பாக இருக்க வேண்டும்.

### 99. சுரக் குடிநீர்

சீந்திகாஞ்சொரி வேம்பு படகஞ்
சிறந்த மட்டி முத்தமுஞ்
சேரும்லாம்மிச்சை கோட்டந் திப்பிலி
தேக்குடன் கண்டங்காரியும்
ஈந்து சுக்குப் பனிரெண் டுமிது
யெடுத்த லளவு வடுப்பட
இலங்கும் கையுங் கோலுங் காலுட
னிசைந்தபூத சாத்திரந்
தீந்தகிழமை திசையும் ரெத்தினம்
திசவ தார மொன்றுடன்
திகழும் ராசி தன்னுடனதிற்
சேர்த்துபயத்தை யூற்றியே
போந்த வெரித்துக் குறுகச்சலமும்
பொருந்து மரைக்கா விறக்கியே
பொருந்துஞ்சுரங்க ளனைத்துங் கடலிற்
புகுதும்பாரடி பள்ளீரே. 215

மேற்றேல் சீவின சுக்கு 12 வராகனெடை (42 கிராம்), உலர்ந்த கண்டங்கத்திரி சமூலம் 11 வராகனெடை ($38\frac{1}{2}$ கிராம்), சிறுதேக்கு 10 வராகனெடை (35 கிராம்), அரிசித்திப்பிலி 9 வராகனெடை ($31\frac{1}{2}$ கிராம்), கோட்டம் 8 வராகனெடை (28 கிராம்), விலாமிச்சம்வேர் 7 வராகனெடை, கோரைக்கிழங்கு 6 வராகனெடை, சிற்றுமுட்டிவேர் 5 வராகனெடை, பற்படாகம் 4 வராகனெடை, நிலவேம்பு 3 வராகனெடை, சிறுகாஞ்சோறி வேர்ப் பட்டை 2 வராகனெடை, மேற்புறணி நீக்கிய சீந்திற்கொடி (உலர்த்தியது) 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்).

**செய்முறை:—**மேற்கண்ட சரக்குகளை எல்லாம் கல்லுரலிவிட்டு நையச் சிதைத்து வைத்துக் கொள்ளவும். இதில் ஒன்றரைப்பலம் தூளை எடுத்துக் காற்படி தண்ணீரில் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டிப் பருகச் செய்விக்கவும், இவ்விதம் வேளை ஒன்றுக்கு ஒன்றரைப் பலமாகக் குடிநீர் செய்து உபயோகிக்க வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளையுஞ் செய்து வந்தால், வாதசுரம், கபசுரம், வாத கபசுரம், சலதோடம், நீர்கோர்வை, உடற்கடுப்பு முதலியவைகள் தீரும்.

**மருத்துணவு:—**நோய் வலிமை, உடல் வலிமை ஆகியவைகளுக்குத் தகுந்தபடி எளிய உணவாக உட்கொள்ள வேண்டும்.

### 100. மேற்படி வேறு

முட்டி யிரண்டு சங்கம் வேரும்
மூன்று நிறைக ளொருபலம்
முதிர்ந்த சுக்குப் பரங்கிக் காவேளை
முதிருங்கிரந்தி முக்காலாந்
திட்டமரத்தைப் படகம் பிரப்பந்
தேக்கு வெள்ளை யருகரை
சிறந்த பூமியா வாரைகால்
சேரக்கூட்டி யிடித்துமே
தொட்டதோயம் விட்டுக் காய்ச்சி
துடிப்ப தாகக் கொடுக்கையில்
தோணும் புளியைத் தானும்நீக்கிற்
சொல்லக்கேளும் பிணியதை
கட்டின மான திமிர்வறட்சி
கடிந்த யிடிப்புக் காலெரிவு
கடலை நாடித் தேடியோடிக்
கலங்கும்பாரடி பள்ளீரே. 216

சங்கம் வேர்ப்பட்டை, சிற்றுமுட்டிவேர், பேராமுட்டி வேர் இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்), மேற்றோல் சீவின சுக்கு, பறங்கிச்சக்கை, முக்காவேளை, கிரந்திநாய வேர்ப்பட்டை இவை வகைக்கு $\frac{3}{4}$ பலம் ($26\frac{1}{2}$ கிராம்) சன்னராஷ்டம், பற்படாகம், பிரப்பங்கிழங்கு, சிறுதேக்கு. உலர்த்தின வெள்ளறுகு இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம், நிலஆவாரை 2 பலம்.

**செய்முறை:**—இவை எல்லாவற்றையும் உரலில் நைய இடித்து வைத்துக் கொள்ளவும். வேளையொன்றிற்கு ஒன்றரைப் பலம் வீதமாக எடுத்துக் கால்படி நீரில் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்துக் காய்ச்சி இறக்கி வடிகட்டிப் பருகச் செய்விக்க வேண்டும். இரண்டு வேளையுஞ் செய்துவர, வாயுசம்பந்தமான சுரங்கள், உடல் திமிர், கைகால் திமிர், உடல் வறட்சி, கைகால் பிடிப்பு, இடுப்புப் பிடிப்பு, கைகால் எரிவு, மெய்யெரிவு முதலியவைகள் தீரும்.

**மருத்துணவு:**—நோய் கடினமாக இருந்தால் புளியை நீக்கி வைக்கவும்.

### 101. சர்வசுரக் குடிநீர்

அருணுஞ் சுக்கரத்தை ரோணி
ஆன கண்டு திப்பிலி

அடுத்த தேக்கு பிச்சைமுந்த
மதுவு முக்காவேளையும்
தெருளுங் கண்டங் காலி கோட்டம்
சிறந்த படகம் புடோலுடன்
சீந்திலுடனே சித்திர மூலம்
சேரக்கேளடி பள்ளீரே. 217

சேருமுட்டி யிரண்டு வேம்பு
சிறுகாஞ் சோரி காந்தியும்
சிறுகுரிஞ்சா சிருய் சித்துடன்
திருவுங் கொத்த மல்லியும்
பேரீஞ்சோமங் தும்பை துளசி
பெருத்த தோடை கோரையும்
பெருமரப் பட்டை குராவின் சானி
பேசக்கேளடி பள்ளீரே. 218

பேசு மதுரங் குப்பை முசுக்கை
பெருத்த வேப்பம் நாக்குடன்
பெலத்த வெட்டிவேரு மிலுப்பைப்
பூவுமரசம் பட்டையும்
பூசெங் கழுநீர் தூதுவளையும்
புரியு முந்திரி யரிதகி
பொருந்தும் நெல்லி கிராம்புடனே
போதக் கேளடி பள்ளீரே. 219

போதச் சோம்பு பொன்முசுட்டையும்
புகழும் பாவட்டை சங்குடன்
பொருந்து முன்னை வெள்ளறுகுமே
பூண்ட நொச்சிப்பட்டையும்
பாதிரியுடன் குமுழுஞ் செவியும்
பருத்த சிற்ரு மணக்கம்வேர்
பருமர மஞ்சள் திப்பிலி மூலம்
பகரக்கேளடி பள்ளீரே. 220

பகருமஞ் சட்டிபெரு மருந்துவேர்
பருத்த பிரப்பங் கிழங்குடன்
பாங்காய்க் கரணை வேருமந்த
வேளை வேளைவேருமே
நிகரு மறுப துடனே நாலு
நீங்கிடவகை யாவையும்

நேர்மையாக வோடி யாடித்
தேடிச்சேரடி பள்ளீரே. 221

தேடிவேரு வகையிருபலஞ்
சிறந்தகிழங்கு மொருபலஞ்
சிறப்பதாகக் கடைமருந் தெல்லாஞ்
சேரும்பலமும் மொன்றரை
கூடிநறுக்கி யிடித்தெடுத்துக்
கோதுவான போதுமே
கூடிக்கலசத் திட்டுப் பின்னும்
கூறக்கேளடி பள்ளீரே. 222

கூறுமருந்து கழஞ்சீராறு
கோதில்லாத சட்டியில்
குருணிசலமும் விட்டெரித்துக்
குறுகக்காய்ச்சி யரைச்சேராய்
சேரவிருபோ தருந்து மறுநாள்
செலுத்து முதனுள் போலவே
சிறுகச்சிறுக வருந்த வருந்தச்
செப்பக்கேளடி பள்ளீரே. 223

செப்புவேனின்னம் பேதிமிகுதி
சிறந்த கியாழத் தூளதைச்
சிறப்பதாக வருந்துகியாழம்
சேர்த்தெரித்துக் கொடுத்திட
ஒப்பமாயிதின் படியருந்திட
உகந்து வருகும் வேளையில்
ஓடியொளிக்கும் பிணியைத்தானு
முகந்துகேளடி பள்ளீரே. 224

உகந்தவாத பித்தசுரமும்
ஒப்பில்லாத கபசுரம்
ஓதுவாயு சுரத்தின் சூலை
யுண்ணுங்கரடுப் பிடிப்புகள்
பாதக்குடைச்சல் சன்னிபாதம்
பருத்த சுரத்தின் வகையெலாம்
பறந்துபோமென அகத்தியவேதன்
பகர்ந்துவிட்டாண்டி பள்ளீரே. 225

(அ) மேற்றேல் சீவின சுக்கு, கடுகுரோகணி, சிற்றரத்தை அரிசித் திப்பிலி, சிறுதேக்கு, செஞ்சந்தனம், கோட்டம், பற்பாட

கம், பேய்ப்புடல், நிலவேம்பு, நன்னாரி, சீமை நிலவேம்பு, துராலெபை, கொத்துமல்லி, விதை நீக்கின பேரீச்சங்காய், ஓமம், கஞ்சாங்கோரை, பெருமரப்பட்டை, குரோசானியோமம், அதிமதுரம், சதகுப்பை, உலர்த்தின வேப்பீர்க்கு, உலர்த்தின இலுப்பைப்பூ, அரசம்பட்டை, விதைநீக்கின திராட்சைப்பழம், மஞ்சட்கடுக்காய்த் தோல், நெல்லிவற்றல், இலவங்கம், சோம்பு, உலர்த்தின வெள்ளறுகு, வெண்ணொச்சிப் பட்டை, செவ்வியம், கண்டந்திப்பிலி, மஞ்சிட்டி இவை வகைக்கு $1\frac{1}{2}$ பலம் ($52\frac{1}{2}$ கிராம்).

(ஆ) முக்காவேளைவேர், கண்டங்கத்திரிவேர், சித்திரமூல வேர்ப்பட்டை, சிற்றாமுட்டி வேர்ப்பட்டை, பேராமுட்டி வேர்ப் பட்டை, சிறுகாஞ்சொறி வேர்ப்பட்டை, தும்பை வேர்ப்பட்டை, துளசி வேர்ப்பட்டை, ஆடாதோடை வேர்ப்பட்டை, முசுமுசுக்கை வேர்ப்பட்டை, வெட்டிவேர், விலாமிச்சம் வேர், பூசணி வேர், தூதுவளை வேர்ப்பட்டை, பொன்முசுட்டை வேர்ப்பட்டை, பாவட்டை வேர்ப்பட்டை, சங்கம்வேர்ப்பட்டை, முன்னை வேர்ப் பட்டை, பாதிரி வேர்ப்பட்டை, நிலக்குமிழ் வேர்ப்பட்டை, சிற்றாமணக்கம் வேர்ப்பட்டை, பெருமருந்துப்பட்டை, நல்வேளை வேர்ப் பட்டை, நாய்வேளை வேர்ப்பட்டை இவை வகைக்கு 2 பலம் (70 கிராம்).

(இ) உலர்த்தின கோரைக் கிழங்கு, உலர்த்தின சீந்திற் கிழங்கு, உலர்த்தின செங்கழுநீர்க் கிழங்கு, உலர்த்தின மரமஞ்சட்கிழங்கு, * பிரப்பங்கிழங்கு தூய்மை செய்துலர்த்தின கருணைக் கிழங்கு இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்).

செய்முறை:—இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து நைய இடித்துச் சிதைத்துப் புதுப்பாண்டத்தில் வைத்துக் கொள்ளவும். இதில் வேளைக்கு ஒன்றரைப்பலம்வீதமாக எடுத்துக் காற்படி தண்ணீரில் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்ட வைத்திறக்கி வடிகட்டித் திப்பி நீக்கிக் குடிநீரைக் குடிக்கவும். இவ்விதம் காலை மாலை இரண்டு வேளை பருகச் செய்ய வேண்டும். ஒவ்வொரு வேளையும் புதிது புதிதாகச் செய்து கொள்ளவேண்டும். இப்படிச் செய்துவந்தால், வாதசுரம், பித்தசுரம், கபசுரம் முதலிய எல்லா வகைச் சுரங்களும், சன்னி வாதங்களும் தீரும். எல்லாவகை வாயுக்களும் தீரும். சுரசூலை, புண்கள், கரடுகள், பிடிப்புகள், கால்குடைச்சல் முதலிய பற்பல நோய்கள் தீரும்.

---

* இதனைப் புளித்த மோரில் வேகவைத்து உலர்த்திக் கொள்வதே இதன் தூய்மையாம்.

**மருத்துணவு:**—நோய் வலிமை, உடல் வலிமை ஆகியவை களுக்குத் தகுந்தபடி சமயோசிதம்போல் ஏற்படுத்திக் கொள்வது மருந்துவர்களின் கடமையாகும்.

**குறிப்பு:**—இவ்வளவு சரக்குகளையும் அவசரமான காலங்களில் தேடிச் சேகரிப்பது சில சமயங்களில் கடினமாகும். ஆகையால் ஓய்வுள்ள காலங்களில் இச்சரக்குகளைச் சேகரித்து நன்ருயிடித்துச் சிதைத்து ஆறுபடி நீர்வார்த்து இருபத்து நான்குமணி நேரம் ஊற வைத்து வாலையிலிட்டு நாலுபுட்டி திராவகம் இறக்கி வைத்துக் கொள்ளவும். வேளை ஒன்றுக்கு ஒரு அவுன்சு முதல் இரண்டு அவுன்சு வரையில் உபயோகித்து வர, மேற்கண்ட நோய்க ளெல்லாம் தீரும். இவ்விதம் சித்தப்படுத்தி வைத்துக்கொண்டால் எந்த சமயத்திலும் உபயோகிப்பதற் கேதுவாகும்.

### 102. உதிரக்கட்டுக்கு நஞ்சுக் குடிநீர்

அகலுஞ் சுக்கு மரத்தை யிரண்டு
மடுத்த கடுகு மிரண்டுடன்
அசம தாகம் போள மாப்பொடி
அமைந்தபுட்டி கிட்டமுந்
திகலு மூல முள்ளி கருங்கொள்
தேக்கு ரோணி விளங்கமும்
சேரு முக்கா வேளை காட்டுச்
சீரகமுங் கருஞ்சீரகமும்
பகலும் வங்காள மஞ்சட் கடுக்காய்
பகர்ந்த தாணி சணல்விதை
பத்து மாளி வித்துங் கண்டு
பரங்கியுடனே பிரம்புமே
புகலுஞ் சித்திர மூலமீசுரி
புகழ்வெள் ளறுகு தூதளை
பொரிநிலா வாரை சங்கின் மூலம்
பொதியமிள கரணையே. 226

கரணை மூங்கி லிலைப் பிராணி
கதித்த கண்டங் கத்திரி
காணு முள்ளி கஞ்சாங் கோரை
கழுதும்பை மலைவேப்பிலை
உரணுஞ் சாரணை மூக்கு ரட்டையும்
உற்ற வேப்பம் பட்டையும்
உகந்தும் நாற்பத் தஞ்சில் கார
சாரம் பலங்களிரண்டரை

பெறணி பத்திரி பிடியொன் றெடுநீ
பெலத்தவேரும் நாற்பலம்
பிசகா திவையே யிடித்து நறுக்கிப்
பெருத்த பாண்டத்தடைத்துமுக்
குறுணி சலத்தை விடுத்தடுப்பைக்
கூட்டி யெரித்து மூட்டியே
குறுகக் காய்ச்சிப் படிய தாக்கிக்
கொடுக்கும்வகைகேள் பள்ளீரே. 227

கொடுநீ யதனை யெடுநீ வீசம்
குணம தாயிரு போதுமே
கொடுத்துவருக அடுத்தவுதிரந்
தடுப்படாமலே வெளிப்படும்
படுபடு திரண்ட சூலை பக்கவாயு
பறக்குஞ் சூசிகா வாய்வுடன்
பருத்தமெய்யி லுருத்த சுவாசம்
படியுஞ்சுரோணித வாய்வுமே
மடியுஞ் சுரங்கள் வாய்வு கரப்பான்
வளர்ந்து மேக வறட்சியும்
வாங்கு மேகப் பிடிப்பு முடக்கு
வலியுங் குத்தல கன்றிடும்
தெடிய புளியும் புகையும் போக்கித்
தினமு மிதனை யருந்திடத்
தீருஞ் சகல ரோக முளதுந்
தீர்ந்து போமடி பள்ளீரே. 228

(அ) மேற்றேல் சீவின சுக்கு, சிற்றரத்தை, பேரரத்தை, கடுகு, வெண்கடுகு, ஓமம், கரியபோளம், அரப்பொடி, துராலெபை, சீமை நிலவேம்பு, கிட்டம், கண்டத்திப்பிலி, வெள்ளைப் பூண்டிதழ், கருங்கொள், சிறுதேக்கு, கடுகுரோகணி, வாய்விளங்கம், முக்காவேளை, காட்டுச் சீரகம், கருஞ்சீரகம், மரமஞ்சள், மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சணல் விதை, பறங்கிப் பட்டை, பிரப்பங்கிழங்கு, நில ஆவாரை, மிளகரணை, புளியரணை, கண்டங்கத்திரி, நீர்முள்ளி, கஞ்சாங்கோரை, கெளதும்பை, வெள்ளைச்சாரணைக் கிழங்கு, வேப்பம்பட்டை, வெள்ளறுகு, உலர்த்தின தூதுவளை இவை வகைக்கு $2\frac{1}{2}$ பலம் ($87\frac{1}{2}$ கிராம்).

(ஆ) மூங்கில் இலை, மூங்கிற் புறணி, மலை வேப்பிலை இவை வகைக்கு 1 பலம் (35 கிராம்).

(இ) சித்திரமூல வேர்ப்பட்டை, இசிரிவேர், சங்கம்வேர்ப் பட்டை, மூக்குரட்டைவேர் இவை வகைக்கு 4 பலம் (140 கிராம்).

**செய்முறை:**—இவை எல்லாவற்றையும் ஒன்றுகச் சேர்த்து நைய இடித்துப் புதுப்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும். வேளை யொன்றுக்கு அரைப்பலம் வீதம் எடுத்து இரண்டு ஆழாக்கு தண்ணீரில் போட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டித் திப்பி நீக்கிப் பருகச் செய்விக்கவேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டுவேளையும் உபயோகித்துவர, சூதகபந்தம், சூதகச்சூலை, பக்கவாயு, சூதக வாயு, சுவாச நோய், சோணிதவாயு, சுரநோய்கள், வாயு சம்பந்த நோய்கள், கரப்பான் நோய்கள், மேக வறட்சி, மேகப்பிடிப்பு, முடக்கு நோய்கள், உடல்வலி, உடற்குத்தல் முதலிய பல நோய்கள் தீரும்.

**மருத்துணவு:**—புளி, புகை ஆகியவைகளை நீக்கவேண்டியது. சமயோசிதம்போல் பத்தியம் ஏற்படுத்திக் கொள்ளவேண்டியது மருத்துவர்களின் கடமையாம்.

**குறிப்பு:**—இதுபோன்ற இன்னெரு முறையானது நமது பரம்பரையில் வழங்கப்பட்டு வருவதால் அம்முறையையும் இங்கெழுதுவாம்; அம்முறையிது:—

## 103. நஞ்சுக் குடிநீர் (வேறு)

மேற்ருேல் சீவின சுக்கு, ஓமம், சதகுப்பை, பறங்கிப்பட்டை, பிரப்பங்கிழங்கு, சிறுதேக்கு, சங்கம்வேர்ப்பட்டை, முக்காவேளை, மிளகரணை வேர்ப்பட்டை இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), சிற்றரத்தை, கண்டத்திப்பிலி, உலர்த்தின வெள்ளறுகு, வாய்விளங்கம், மரமஞ்சள், இசிரிவேர், கடுகுரோகணி, ஆளிவிதை, துராலெலபை, சீமை நிலவேம்பு, சணல்விதை, கருங்கொள் இவை வகைக்கு $\frac{1}{4}$ பலம் ($8\frac{3}{4}$ கிராம்), உலர்த்தின கண்டங்கத்திரி சமூலம் 2 பலம் (70 கிராம்).

**செய்முறை:**—இவை எல்லாவற்றையும் சேர்த்திடித்துப் புதுப்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும். வேளை ஒன்றுக்கு அரைப் பலம் வீதமாக 2 ஆழாக்கு தண்ணீரில் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்து வடிகட்டிப் பருகச் செய்விக்கவும். இவ்விதம் செய்துவர, சூதக சம்பந்தமான எல்லா நோய்களும் தீரும். பிரசவித்து அழுக்கு தடைப்பட்டிருந்தால், இதனை உபயோகிக்க உடனே குணமுண்டாகும்.

இது முன் முறையைப் பார்க்கினும் அதிக சுலபமானதாயிருக்கினும் சற்றேறக்குறைய முன் முறையிற் சொல்லப்பட்ட நோய்களெல்லாம் தீரும்.

# இரசவாத முறைகள்

## பொழிப்புரை விளக்கங்கள்

---

### 1. வெடியுப்புத் திராவகம்

(பா-எண்-47, பக்கம் 49 இல் பார்க்கவும்)

தூய்மை செய்த பூநீறு 10 பலம் (350 கிராம்), (பூநீறு தூய்மை முறை நமது **இரசவாத சிந்தாமணி** முதற் பாகத்தில் மிகத் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது) சிறு பெண் பிள்ளைகளின் மூத்திரம் ½ படி இதில் மேற்படி பூநீற்றைப் பொடித்துப் போட்டு கடு வெய்யிலில் வைத்து நாள்தோறும் இரண்டொரு தடவை கிளறிக் கொடுத்துவர வேண்டும். இந்த நீர் சுண்டிப்போன பின்பு மறுபடியும் ஒருபடி சிறு பெண் பிள்ளைகளின் மூத்திரத்தை அதில் விட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாக எரித்து உப்பாக எடுத்துக் கொள்ளவேண்டும். இதனை நெருப்புப் பீங்கானிலிட்டு உமிநெருப்பில் வைத்துக் கசிவில்லாமல் வறுத்தெடுத்துக் குப்பியில் பத்திரப் படுத்தவும்.

இவ்விதம் சித்தப்படுத்தின பூநீறு 5 பலம், நாலாங்காய்ச்சல் வெடியுப்பு 10 பலம், சீனக்காரம் 20 பலம், இம்மூன்றையும் ஒன்ருய்ப் பொடித்துத் திராவக வாலையிலிட்டு அடுப்பேற்றிச் சிறு தீயாக எரிக்கவும். ஆரம்பத்தில் புகையுடன் வெண்ணிறமான நீர் வரும். இதற்குப் புகைநீரென்றும், வெண்ணீரென்றும் இந்த நூலில் ஆங்காங்கு பிரயோகப்படுத்தி இருக்கிறது. மேலும், இது அநேக பாகங்களில் உபயோகப்படுகின்றபடியால் இந்த நீரைத் தனியே பிடித்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

இந்த வெண்ணீர் வந்த பிறகு மஞ்சள் நிறமான நீர்வரும். அதற்குக் கடை நீரென்றும், மஞ்சள் நீரென்றும், பாணியென்றும் இந்த நூலில் ஆங்காங்கு பிரயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால், இந்த மஞ்சள் நீரையும் தனியே வைத்துக்கொள்ள வேண்டும்.

இந்தத் திராவகத்தை அதிகக் காரமுள்ளதாகச் செய்ய வேண்டுமானல், முன் சரக்குகளை மடக்கி மடக்கி ஐந்து தடவை, அல்லது, ஏழு தடவை செய்து கொண்டால் கடுங்காரமாகி இருக்கும். இவ்விதம் மடக்கி மடக்கி இறக்கின திராவகத்தை குப்பியில்

வைத்தால் அது தெறித்துப் போகுமாகையால், இந்நூலில் சொல்லி இருக்கிறபடி அரக்குக் குப்பியில் அடைத்து வைக்க வேண்டும். இதனுல், எல்லாவித சரக்குகளேயும் கட்டிப் பற்ப மாக்கலாம். இந்தத் திராவகத்தை இந்த நூலில் குருதிராவக மாய்ச் சொல்லி இருக்கின்றபடியால், இதில் சொல்லியிருக்கிற முறைப்படி கைபாகந் தவருமல் செய்து கொள்கிறவர்களுக்கு இதில் சொல்லியிருக்கிற முறைகளெல்லாம் சித்தியாகும். ஆகை யால், இந்த திராவகத்தைக் கைபாகமாகச் செய்வதற்கு முயற்சி செய்ய வேண்டுமென நாமிங்கெடுத்துச் சொல்ல வேண்டியதில்லை.

## 2. வங்க அரிதாரச் செந்தூரம்

மேற்படி அரிதாரம் $\frac{1}{2}$ பலம் ($17\frac{1}{2}$ கிராம்), மருந்து செய்முறை எண் (85)இல் சொல்லியிருக்கிற கருவங்கச் செந்தூரம் $\frac{1}{2}$ பலம் இரண்டையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு எருக்கம்பாலேச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து வில்லே செய்துலர்த்தி மருந்து செய்முறை எண் (23)இல் சொல்லி இருக்கிறபடி அப்பி ரேகத்தைப் பாகப்படுத்தி எருக்கம்பாலே விட்டரைத்து மேற்படி வில்லேக்குக் கவசம் செய்து வெய்யிலிலுலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஏழு சீலேமண் செய்துலர்த்திக் கவசத்தின் ஏழுபங் கெடை விறட்டியிற் புடமிட்டாறின பின்னெடுக்க மேலான செந் தூரமாகி இருக்கும்.

**அளவு:**—1 முதல் 2 குன்றியெடை.

**தீரும்நோய்:**—இது காயசித்தி செந்தூரங்களில் ஒன்ருன தாகையால் உடலிலுள்ள எல்லா நோய்களேயும் நீக்கி உடலே வச் சிரகாயமாக்கி ஊக்கத்தையும் பலத்தையு முண்டாக்கும்.

## 3. வீரச் செந்தூரம்

வீரம் 1 பலம் (35 கிராம்), முன் சித்தப்படுத்தின பூநீறு 1 பலம் இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுச் சேர்த்தரைக்க மஞ்சள் போலாகும். பிறகு கடை நீரைவிட்டு இரண்டு சாமமரைத்து உலர்த்திப் பொடித்து நெருப்புப் பீங்கானிலிட்டு அது ஆழ்ந்து நிற்கும்படியாகப் புகை நீரைவிட்டு அது சுண்டும்படியாக உமி நெருப்பில் வறுக்கவேண்டும். பிறகு, ஒரு பானேயிலிட்டு மேற் சட்டி மூடி ஏழு சீலேமண் செய்து உலர்த்தி அடுப்பேற்றிச் சிறு தீயாக இரண்டு சாமம் (6 மணி) எரித்து ஆறின பின்பு பிரித்து மேலே பதங்கித்திருப்பதையும் கீழிருக்கின்ற மருந்தையும் சேர்த்து முன்போல் புகை நீரைவிட்டு அரைத்து முன்போற் புகைநீரை விட்டு வறுத்து முன்போல் பானேயில் வைத்து எரிக்கவேண்டும். இவ்விதம், பத்துத் தடவைகள் மடக்கி மடக்கிச் செய்யின் வீரம் கட்டுப்பட்டுப்போம்.

பிறகு, இந்த மருந்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடை நீரைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாம நேரம் அரைத்து அக்கினிப் பீங்கானில்இட்டு அது அதில் அமிழ்ந்திருக்கும்படியாக கடை நீரை விட்டு அது சுண்டுகிறவரையில் உமிநெருப்பில் வறுத்துப் பானையி லிட்டு மேற்சட்டி மூடி ஏழு சீலைமண் செய்து அடுப்பேற்றி கம லாக்கினியாக இரண்டு சாமம் எரித்துக் குளிர ஆறவிட்டு எடுத்துக் கல்வத்திலிட்டு முன்போற் கடைநீரை விட்டு ஒரு சாமமரைத்து அக்கினிப் பீங்கானிலிட்டு முன்போற் கடைநீரை விட்டு முன்போல் வறுத்தெடுத்து முன்போல் எரிக்கவும். இவ்விதம், மடக்கி மடக்கி ஐந்து தடவைகள் செய்யின், வீரமானது பதங்கிக்காமல் சிவந்து செந்தூரமாகிவிடும்.

**அளவு:**—1 முதல் $1\frac{1}{2}$ குன்றியெடை.

**தீரும்நோய்:**—எல்லாவகைச் சூலை நோய்களும் எல்லாவகை வாத நோய்களும் தீரும்.

## 4. துருசுச் செம்பு (வேறு)

தூய்மை செய்து கட்டின செம்பு 10 பங்கு. இதனை உருக்கி உருக்குமுகத்தில் ஒரு பங்கு மேற்படி செந்தூரத்தைக் கொடுத்து நன்ருய் உருக்கி எடுத்து பத்திற்கொன்று தங்கத்தைச் சேர்த்துத் தகடுதட்டிப் புடம் போட இரசவாதப் பொன்னாகும்.

## 5. அயச் செம்பு

(பா-எண்-14, பக்கம் 18இல் பார்க்கவும்)

அய அரப்பொடி ஒரு பங்கு, வீரம் ஒரு பங்கு, இவ்விரண்டை யும் சேர்த்துக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக விட்டு இரண்டு சாமம் அரைத்து ஒரு சட்டியிற் போட்டு மேற்சட்டி மூடி ஏழு சீலைமண் செய்து உலர்த்தி அடுப்பின் மீது வைத்து ஐந்து மணி நேரம் கமலாக்கினியாக எரித்து ஆறவிட்டுப் பிரித்துப் பார்க்க, மேற்சட்டி கீழ்ச்சட்டி முதலியவைகளில் பதங் கித்திருக்கும். மேற்சட்டி கீழ்ச்சட்டி முதலியவைகளில் உள்ளதை எடுத்துக் கல்வத்திலிட்டு முன்போல் கடைநீரைச் சிறுகச் சிறுக விட்டு இரண்டு சாமம் அரைத்து முன்போல் சட்டியில் வைத்து எரித்தெடுக்கவும். இவ்விதம், மடக்கி மடக்கி 4 அல்லது 5 தட வைகள் செய்யின் மேலே பதங்கமேருமல் நன்ருகச் சிவந்து போகும். இந்தச் செந்தூரத்திற்குச் சமனெடை துருசைச் சேர்த் துப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக விட்டு இரண்டு சாம மரைத்து வில்லை தட்டிக் காயவைத்து ஓட்டிவிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்து கவசத்திற்கு இருபது பங்கெடை வறட்டி யிற் புடமிட்டு ஆறினபின் எடுத்து அந்த மருந்திற்குக் காற்பங்

கெடை வெண்காரத்தைச் சேர்த்துக் குகையில் வைத்துருக்க சுத்தச் செம்பாகும்.

நல்ல வெள்ளி எட்டுப்பங்கு, மேற்படி செம்பு ஒரு பங்கு, தங்கம் 1 பங்கு இவற்றைச் சேர்த்துருக்கிப் பிறகு நறுக்கி உருக்க வேண்டும். இவ்விதம் மூன்று தடவைகள் உருக்கி ஓட்டில் வைத்துக் களங்கமற ஊதியெடுக்க, இரசவாதப் பொன்னாகும்.

குறிப்பு:—ஜோட் என்னும் கூட்டு வர்க்கங்களில் உத்தி புத்தி அனுபவம் முதலியவைகள் செவ்வனே தெரிந்திருக்க வேண்டும். கூட்டு வர்க்கத்திற் சேர்க்கப்படும் செம்பானது கூடியவரையில் களிம்பற்றதாக இருக்கவேண்டும். செம்பைப் பார்த்தவுடன் இது கூடிய வரையில் களிம்பற்றதெனத் தெரிந்து கொள்ளும் சக்தியுமிருக்க வேண்டும். செம்பின் களிம்பு ஊறல் முதலியவைகள் அதிகமாயிருந்தால் அந்தந்த இனத்திற்குத் தகுந்தபடி வங்கம் வெடியுப்பு முதலியவைகளினால் அதைத் தூய்மைசெய்து கொள்ள வேண்டும். 2-வது வெள்ளியுடன் செம்பைச் சேர்த்தால் அதன் வருணம், அதன் குணம், நைப்பு முதலியவைகள் எவ்விதமாயிருக்குமென நிதானித்தறியுஞ் சக்தியுமிருக்க வேண்டும். சில வகைச் செம்புகளை வெள்ளியுடன் சேர்த்தால் நைப்புக் குணமில்லாமல் வெட்டைக் குணமிருக்குமாகையால் அதனைச் சர உலையில் வைத்து ஊதி செம்பை வெள்ளிக்குச் சமனெடை சேர்க்கவேண்டியதாயிருக்கும். சில செம்பை வெள்ளிக்கு இரண்டு பங்கெடை சேர்த்து ஊதி நீக்கவேண்டியதாயிருக்கும். சில செம்பை வெள்ளிக்கு நான்கிலொரு பங்கு அல்லது, எட்டிலொரு பங்கு சேர்த்தால் நல்ல வண்ணமும், நல்ல குணமுமுள்ளதாக இருக்கும். இந்த செய்முறைகளை எல்லாம் அனுபவசாலிகள் மூலமாகத் தெரிந்து அனுபோகசித்தி பெறவேண்டும். நூலில் சொல்லி இருக்கிறபடியே எல்லாச் சமயங்களிலும் முடியாது. சரக்கின் பேதத்தாலும் கைபாக விகற்பத்தினாலும் எரிப்பு புடம் முதலிய அக்கினியின் விகற்பத்தாலும் பலவகை விகற்பங்கள் ஏற்படுவதுண்டு. இவ்வித விகற்பங்களை அறியக் கூடாதவர்கள்தாம் இரசவாதம் பொய் யென்று சொல்லித் திரிவார்கள். தெரிந்தவர்கள் மூலமாய்த் தெரிந்து கொண்டால் ஒருபோதும் பொய்யாகாது. இதன் மர்மம் முதலியவைகளெல்லாம் நமது **சுகாதார போதினி** பத்திரிகையில் எழுதியிருக்கின்றோம் மற்ற கருத்துகளையும் எழுத கடவுள் உதவி புரிவானாக.

### 6. துருசுச் செம்பு

(பா-எண்-15, பக்கம் 19இல் பார்க்கவும்)

துருசு 5 வராகனெடை ($17\frac{1}{2}$ கிராம்), (இது ஒரே கட்டியாக இருக்கவேண்டும்) நெல்லிக்காய்க் கெந்தகம் $\frac{3}{4}$ வராகனெடை,

கருப்பூரம் $\frac{1}{2}$ வராகனெடை, வீரம் $\frac{1}{4}$ வராகனெடை இம்மூன்று சரக்குகளையும் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து மேற்படி துருசுக் கட்டியின் மீது சமமாகக் கவசம் செய்து வெய்யிலில் வைத்துலர்த்தி கற்சுண்ணும்பைச் சீலை வடிகட்டிக் குழைத்து மேற்படி கட்டியின் மீது அரை அங்குலம் கனம் கவசம் செய்து உலர்த்தி அதன்மீது இரண்டு சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் கவசத்தைப் பிரித்துப் பார்க்கத் துருசானது சிவந்த வண்ணமாக இருக்கும். சில சமயங்களில் சிவக்காமல் கறுப்பாயிருப்பதுமுண்டு. எந்த வண்ணமாயிருந்தபோதிலும் பாதகமில்லை. அதையெடுத்து அதற்குக் காற்பங்கெடை வெண்காரத்தைச் சேர்த்துக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டுமணி நேரம் அரைத்துக் குகையிலிட்டு உருக்கி எடுக்கச் செம்பாகும். இந்தச் செம்பை ஓட்டில் வைத்து ஊதி எடுக்கவேண்டும். அது சுத்தமாகிற வரையில் இரண்டு மூன்று ஓடுமாற்றி ஊதவேண்டும். இந்தச் செம்பைப் புளியிலைக் கனம் தகடடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

நல்லவெள்ளி எட்டு, மேற்படி செம்பு ஒன்று, தங்கம் ஒன்று இம்மூன்றையும் சேர்த்துருக்க வேண்டும். நன்றாயுருகிக் கண்விட்டாடின பின் எடுத்து ஆறவிட்டெடுத்து இரண்டு மூன்று துண்டுகளாக நறுக்கிப் பழையபடியும் உருக்கவேண்டியது. இவ்விதம் மடக்கி மடக்கி, நறுக்கி நறுக்கி மூன்றுநான்கு தடவை செய்ய வேண்டும். ஏதேனும், கெடுதி இருந்தால் புடம்போட்டுத் தூய்மைப் படுத்திக் கொள்ளவேண்டும். இவ்விதம் செய்வதால் நல்ல இரசவாதப் பொன்னுகும்.

## 7. துருசுச் செம்பு

(பா-எண்-80, பக்கம் 78இல் பார்க்கவும்)

துருசு 1 பங்கு, வெண்காரம் $\frac{1}{4}$ பங்கு, (துருசைக் குகையிலிட்டு அதற்குக் கீழ்மேல் வெண்காரத்தைப் பொடித்துப்போட்டு உருக்கியெடுக்கச் செம்பாகும்). இவ்விதம் சித்தப்படுத்தின செம்பு 1 பலம் (35 கிராம்), இதனைத் தகடு தட்டி வைத்துக் கொள்ளவேண்டும்.

சீனக்காரம் 1 பலம், வெடியுப்பு 1 பலம் இவ்விரண்டையும் பொடித்து கழுதைலத்திச் சாற்றைவிட்டுக் குழப்பி மேற்படி தகட்டைக் காய்ச்சிக் காய்ச்சி இந்தக் குழம்பில் தோய்க்கவேண்டும். இவ்விதம், இருபது தடவை செய்ய செம்பு வெட்டையாகிவிடும்.

பிறகு, இதனை ஓட்டில் வைத்து நன்ருய் ஊதி அதன்மீது தண்ணீரை விட்டால், பதமல்லவென மறுபடியும் ஊதவேண்டியது இவ்விதம் ஊதித் தூய்மைப்படுத்தித் தகடடித்து வைத்துக் கொள்ளவும்.

இந்தத் தகட்டினெடை அய அரப்பொடி, வீரம் காலெடை, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து மேற்படி செம்புத் தகட்டின்மீது பூசி இருநூறு பங்கு வறட்டியில் புடமிட்டு உருக்கி எடுக்க நல்ல செம்பாகி இருக்கும்.

இதனைத் தகடடித்து இந்தத் தகட்டிற்குச் சமனெடை கெந்தகத்தைப் பொடித்து இந்தத் தகட்டின் கீழ்மேலிட்டு ஐம்பது பலம் வறட்டியிற் புடமிட்டெடுக்க இந்தத் தகடானது எல்லாம் கருத்துத் தூளாகி இருக்கும்.

இந்தத் தூளிற்கு அரைப்பங்கு மிருதார்சிங்கியைச் சேர்த்துப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக விட்டு இரண்டு சாமம் அரைத்து வில்லை தட்டி உலரவைத்து ஓட்டிலிட்டு மேலோடுமூடி ஏழு சீலைமண் செய்து கவசத்தின் இருபது பங்கெடை வறட்டியிற் புடமிட்டு எடுத்து, அந்த மருந்திற்குக் காற்பங்கு வெண்காரம் சேர்த்து உருக்கியெடுக்கச் செம்பாகும். இதில், வங்கப்பற்றிருந்தால் ஓட்டில் வைத்தூதி அதை நீக்கிவிடவேண்டும்.

பிறகு, * உருக்கு வெள்ளி எட்டுப் பங்கு, மேற்படி செம்பு நான்கு பங்கு, தங்கம் நான்கு பங்கு, இம்மூன்றையும் சேர்த்துப் பாகப்படி உருக்கியெடுக்க, எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னுகும்.

இதனை, உப்புங் காவியும் சேர்ந்த தூளிற்கு மத்தியில் வைத்துப் புடம்போட்டுவரத் தங்கமிறங்கி மாற்றேறும்.

### 8. துருசுச் செம்பு (வேறு)

(பா-எண்-82, பக்கம் 80இல் பார்க்கவும்)

துருசு 4 பலம் (140 கிராம்), கெந்தகம் $\frac{3}{4}$ பலம் ($26\frac{1}{4}$ கிராம்) இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லை தட்டி வெய்யிலில் உலர்த்தவேண்டும். நன்ருயுலர்ந்த பின்பு இந்த வில்லையின் காற்பங்கெடை மிருதார்சிங்கியைச் சேர்த்துப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லை தட்டி உலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்து

உலர்த்திக் கவசத்தின் இருபது பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுத்து, மருந்தின் காற்பங்கெடை வெண்காரம் சேர்த்துக் குகையில் வைத்துருக்கி எடுக்கச் செம்பாகும். இந்தச் செம்பில் வங்கப் பற்றிருந்தால் ஓட்டில் வைத்தூதி நீக்கிவிட வேண்டும்.

நொறுக்கு வெள்ளி 1 பலம் (35 கிராம்), மேற்படி செம்பு 1 பலம், தங்கம் 1 வராகனெடை ($3\frac{1}{2}$ கிராம்) இம்மூன்றையும் சேர்த்துருக்கிச் செம்பு போகும்படி ஊதியெடுக்க, ஆறு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

மேற்படி செம்பு 1 பங்கு, தங்கம் 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கித் தகடடித்துக் கொள்ளவேண்டும்.

இரசம் 1 பங்கு, கெந்தகம் 1 பங்கு இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு நன்றாய்க் கறுக்கிறவரையில் அரைத்துச் சோற்றுக்கற்றாழைப் பாலைச் சிறுகச் சிறுக வார்த்து 2 மணி நேரமரைத்து தகட்டிற்குக் கீழும் மேலும் பூசி, ஓட்டில் வைத்து மேலோடு மூடிக் கவசத்தின் மேல் 20 பங்கெடை வறட்டியிற் புடமிடவேண்டும். முன் போலவே முன் சரக்குகளை அரைத்துத் தடவி முன்போலவே புடமிடவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி மூன்று புடமிட்டால், தகடானது நொறுங்கிக் கறுத்த தூளாகிவிடும்.

இந்தத் தூள் ஒரு பங்கு, நொறுக்கு வெள்ளி பத்துப் பங்கு, நொறுக்கு வெள்ளியை உருக்கிக்கொண்டு உருக்குமுகத்தில் மேற்படி மருந்தைக் கொடுத்து நன்றாக உருக்கியெடுக்க எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

### 9. துருசுச் செம்பு (வேறு)

(பா-எண்-87, பக்கம் 91இல் பார்க்கவும்)

துருசு 4 பலம் (140 கிராம்), வெண்காரம் 1 பலம் (35 கிராம்) இவ்விரண்டையும் சேர்த்து உருக்கி எடுக்கச் செம்பாகும். இதனைத் தகடடித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

கழுதை லத்தியைப் பிழிந்தசாறு செல்லத்தக்க அளவு, வெடியுப்பு, சீனக்காரம் இவை வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை ($8\frac{3}{4}$ கிராம்) இவ்விரண்டையும் பொடித்து மேற்படி கழுதைலத்திச் சாற்றைக் கலக்கிவைத்துக் கொள்ளவேண்டும். முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற தகட்டைக் கரிநெருப்பில் பழுக்கக் காய்ச்சி மேற்படி கலவையில் தோய்க்கவேண்டும். ஆறின பின்னெடுத்து முன்போல் பழுக்கக் காய்ச்சி முன்போல் தோய்க்கவேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி ஏழு தடவைகள் செய்ய, செம்பானது வெட்டை

யாகிவிடும். தோய்க்கும்போது ஒவ்வொரு தடவையும் புதிது புதிதாகக் கலவையைச் சித்தப்படுத்திக் கொண்டால் உத்தமமாயிருக்கும்.

வெட்டையான செம்பு இரண்டு பங்கு, இதனை உருக்கி, உருக்கு முகத்தில் 85இல் சொல்லியிருக்கிற கருவங்கச் செந்தூரம் ஒரு பங்கு கொடுக்க கறுத்த நிறமாகிவிடும்.

வெள்ளி எட்டு, மேற்படி தூள் இரண்டு இவ்விரண்டையும் சேர்த்து உருக்கி எடுத்து ஓட்டில்வைத்து ஊதி எடுக்கவேண்டும்.

இந்த மட்டம் ஒரு பங்கு, தங்கம் ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்துப் பாகப்படி ஊதியெடுக்க, இரசவாதப் பொன்னாகும். புடத்திற்கும் வங்கத்திற்கும் ஓடாது.

### 10. துருசுச் செம்பு (வேறு)

(பா-எண்-*97*, பக்கம் *104*இல் பார்க்கவும்)

துருசை அகலில் வைத்து சர உலையால் ஊதிச் செம்பெடுத்துக் கொள்ளவேண்டும்.

இந்தச் செம்பு நான்கு பங்கு, தூய்மைசெய்த அய அரப்பொடி ஒரு பங்கு, தங்கம் ஒரு பங்கு இம்மூன்றையும் பக்குவமாக உருக்கிப் பக்குவமாகத் தகடடித்துக் கொள்ளவேண்டும்.

இந்தத் தகட்டிற்கு அரைக்கால்வாசி நெல்லிக்காய்க் கெந்தகம், அரைக்கால்வாசி வீரம் இந்த இரண்டையும் மைபோல் பொடித்துக் கல்வத்தின்மீது பரப்பி, மேற்படி தகட்டைப் பழுக்கக் காய்ச்சி, அந்தத் தூளின் மீது வைக்கத் தகடானது வெட்டையாகிவிடும்.

வெள்ளி எட்டுப் பங்கு, மேற்படி வெட்டை இரண்டு பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஊதித் தூய்மைப்படுத்தி ஒரு பங்கு தங்கத்தைச் சேர்த்து உருக்கியெடுக்க எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும். (*1*) வெடியுப்பு, காவி இவைகளுக்கு இது செயித்து நிற்கும். இதனைக் கைபாகமாகச் செய்துகொள்பவர்களுக்கு இது சித்தியாவதில் எவ்வித தடையுமில்லை. கைபாகந் தெரியாதவர்களுக்கு எதுவுஞ் சித்தியாகாதென்பது உலகறிந்த விவகாரம்.

### 11. பித்தளைச் செம்பு

(பா-எண்-*46*, பக்கம் *49* இல் பார்க்கவும்)

பித்தளை அரப்பொடி 4 பலம் (*140* கிராம்) இதனை ஒருசேலைத் துண்டில் முடிந்து அதன்மீது சுமார் ஒரு வீசை துணியைப் பந்து

போல் சுற்றவேண்டும். இதனை ஒரு ஓட்டில்வைத்து நெருப்பிட்டு எரித்தாறின பின்னெடுக்கக் கறுப்பாகியிருக்கும்.

இதனை ஒரு பீங்கான் பாத்திரத்திற் போட்டுக் கடைநீரை அந்தத் தூள் அமிழ்ந்திருக்கும்படியாகவிட வேண்டும், அப்போது இது நீலநிறமாக மாறிவிடும்.

இந்தத் தூளில் எட்டிற்கொரு பங்கு கெந்தகம், அந்த எடையே வீரம், இவையெல்லாவற்றையும் சேர்த்தரைத்து அக்கினிப் பீங்கானில் வைத்து உமி நெருப்பில் வறுக்கவேண்டும். பின்பு முன்போலரைத்து வில்லை செய்து வெய்யிலில் வைத்து நன்றாயுலர்ந்த பின்பு ஓட்டில் வைத்து மேலோடு மூடி 5 சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுத்து, கண்ட மருந்தின் எடைக்குக் காற் பங்கு வெண்காரம் சேர்த்தரைத்து மூசையிலிட்டு ஊதியெடுக்கச் செம்பாகும். இதனை ஓட்டில் வைத்து இரண்டு மூன்று தடவை ஊதியெடுக்கச் சுத்தமான செம்பாகும்.

இந்தச் செம்பு ஒரு பங்கு, தங்கம் ஒரு பங்கு இவ்விரண்டையும் உருக்கி எடுத்துக் கொள்ளவும்.

பிறகு, நொறுக்கு வெள்ளி எட்டு பங்குடன் சேர்த்துருக்கி ஊதியெடுக்க, எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும். சுய பொன்னைப் போன்ற குணங்கள் இதற்குண்டு.

## 12. காரீயச் செம்பு

(பா-எண்-60, பக்கம் 60இல் பார்க்கவும்)

துருசு ஒரு பங்கு, கெந்தகம் ஒரு பங்கு இவ்விரண்டையும் ஒரு சாமமரைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஐந்து சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தினெடைக்கு எட்டுப் பங்கு வறட்டியிற் புடமிட்டாறின பின்னெடுத்துக் கண்ட எடை மருந்திற்கு எட்டிலொரு பங்கு மிருதார்சிங்கியைச் சேர்த்துப் பொடித்து மூசையில் வைத்துருக்கச் செம்பாகும். இந்தச் செம்பை ஓட்டில் வைத்து வங்கம் போகும்படியாக ஊதியெடுக்க வேண்டும்.

நொறுக்கு வெள்ளி எட்டுப் பங்கு, மேற்படி செம்பு நான்கு பங்கு, தங்கம் ஒரு பங்கு இம்மூன்றையும் சேர்த்துருக்கி ஊதியெடுத்துத் தகடடித்து உப்புங் காவியும் தூள் செய்து அதற்குள் வைத்துப் புடமிட்டுவரத் தங்கமிறங்கும்.

## 13. மிருதார்சிங்கிச் செம்பு

(பா-எண்-64, பக்கம் 62இல் பார்க்கவும்)

துருசு 4 பலம், இதனைப் பொடித்துப் புது ஓட்டிற்போட்டு உலையில் வைத்தூதி ஆறவிட்டெடுக்க வெண்மையான பற்பமாய் இருக்கும்.

இந்தத் தூளில் முக்காலெடை இந்திரகோபப் பூச்சி இகி விரண்டையும் கல்வத்திலிட்டுக் கடைநீரை விட்டு ஒரு சாமம் அரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஐந்து சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் எட்டுப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுக்க கருநிறமான தூளாகி இருக்கும்.

இந்தத் தூளிற்குப் பாதி பங்கெடை மிருதார்சிங்கியைச் சேர்த்துப் பொடித்துக் கடைநீரை விட்டு இரண்டு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஐந்து சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் எட்டுப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுத்து, கண்ட மருந்திற்குக் காற்பங்கெடை வெண் காரம் சேர்த்து அரைத்துக் குகையில் வைத்துருக்க, முருக்கம்பூப் போன்ற சிவந்த நிறமான வட்டாக உருகி நிற்கும். அந்த வட்டை உடைத்துப் பார்க்க, நடுவிற் செம்பிருக்கும். இந்தச் செம்பிற்குச் சமனெடை தங்கஞ்சேர்த்து உருக்கித் தகடாக அடித்துவைத்துக் கொள்ளவேண்டும்.

கெந்தகம், பாலரசம் இவை வகைக்கு 1 பங்கு, உரம் ½ பங்கு இம்மூன்றையும் உமிநீரைவிட்டரைத்து மேற்படி தகட்டின்மீதுபூசி ஓட்டில் வைத்து மேலோடு மூடி மூன்று சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தினெடைக்கு எட்டுப் பங்கெடை வறட்டியில் புடமிட்டு ஆறின பின்னெடுக்கக் கறுப்பு நிறமானதாக இருக்கும்.

வெள்ளி 8 பங்கு, மேற்படி செம்பு 2 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்க, எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும். இதனைப் பாகப்படி புடமிட்டால் தங்கமிறங்கும்.

## 14. காக்கைப்பொன் செம்பு

(பா-எண்-96, பக்கம் 103இல் பார்க்கவும்)

காக்கைப் பொன்னைச் சிறு துண்டுகளாகக் கத்தரித்து ஒரு குகையில் போட்டுக் கொல்லுலையில் வைத்துப் பழுக்கக் காய்ச்சி நன்றாகக் காய்ந்த பின்பு கொஞ்சம் வெண்காரமுங் கொடுத்து

நன்ருயூதி எடுக்கச் செம்பாகும். இந்தச் செம்பை ஓலைக்கனம் தகடடித்து வைத்துக் கொள்ளவும். இது சுமார் 1 பலம் இருக்க வேண்டும்.

(அ) கல்லுப்பு 4 பலம் (140 கிராம்), வீரம் 1 பலம் (35 கிராம்), சூடன் 1 பலம் இம்மூன்றையும் கல்வத்திலிட்டுப் பொடித்துப் புகைநீரை விட்டு 2 மணி நேரமரைத்து 5 பாகமாகச் செய்து ஒரு பாகத்தை மேற்படி செம்புத்தகட்டின் மீது பூசி உலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடு மூடிச் சீலைமண் செய்யாமல் 60 பலம் வறட்டியிற் புடமிட்டாறினபின் எடுத்துத் தகட்டைத் தட்டினுல் அதர் உதிரும். அந்த அதரைத் தனியே எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். பின்பு, மற்ருெரு பாகத்தை மேற்படி தகட்டின் மீது பூசி முன்போற் புடமிட்டு அதரை எடுத்துக்கொள்ளவும். இவ்விதமே, மற்ற மூன்று பாகங்களையும் முறையே ஒன்றன்பின் ஞென்ருகக் கவசித்துப் புடமிட்டு அதரெடுத்துக்கொள்ளவும். இந்த அதருடன் ஒரு பலம் காரீயத்தைச் சேர்த்து அரைத்து மூசையிலிட்டுருக்கி எடுக்கச் செம்பாகும். இதனைச் சர உலையில் வைத்தூதித் தூய்மைசெய்யச் சூரியப் பிரகாசமுள்ள செம்பாகும்.

இந்தச்செம்பு 4 பங்கு, தங்கம் 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி எடுத்துத் தகடாக அடித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

(ஆ) இந்தத் தகட்டிற்கு அரைக்காற் பங்கு வீரம், அரைக்காற் பங்கு கெந்தகம், இவ்விரண்டையும் பொடித்துக் கல்வத்தின்மீது பரப்பி வைத்து மேற்படி தகட்டை நெருப்பிற் பழுக்கக் காய்ச்சி முன் பரப்பி வைத்திருக்கிற் தூளின்மீது வைக்க அந்தத் தகடானது அதர் அதராகி நொறுங்கி விடும்.

நல்லவெள்ளி நான்குபங்கு (ஆ) விலுள்ள அதர் ஒருபங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி எடுக்க ஆறுமாற்றுள்ள இரசவாதப் பொன்னுகும்.

## 15. கெந்திச் செம்பு

(பா-எண்-45, பக்கம் 47 இல் பார்க்கவும்)

தாமிரம் 4 பலம் (140கிராம்), நெல்லிக்காய்க் கெந்தகம் 4 பலம் தாமிரத்தைக் குகையிலிட்டுருக்கி உருக்கு முகத்தில் மேற்படி கெந்தகத்தைத் தூள் செய்து வைத்துக் கொண்டு கொஞ்சங் கொஞ்சமாகச் சுருக்குக் கொடுத்து வந்து கெந்தகமெல்லாஞ் சென்றபின் எடுக்கத் தாமிரமானது கரிந்து நொறுங்கித் தூளாகி இருக்கும்.

இத்தத் தூளை நிறுத்து இதற்குக் காற்பங்கெடை வெண்கா ரத்தைத் தூள் செய்து இரண்டையும் சேர்த்து மூன்று மணிநேரம் அரைத்துக் குகையில் வைத்துக் குகையழுகும்படியாகப் பக்குவ மாக ஊதியெடுக்கச் சத்தாகும்.

இந்த சத்துக்குக் காற்பங்கெடை வீரம் சேர்த்துக் கடைநீரை விட்டு இரண்டு சாமமரைத்து உலர்த்திக் குகையில் வைத்துக் குகைவாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்துலர்த்திக் கொல்லுலை யில் வைத்து மூசை அழுகும்படி ஊதி எடுக்கச் செம்பாகும். இதனைப் புளியிலைக் கனம் தகடடித்து வைத்துக்கொள்ளவும்.

வெடியுப்பு, சீனக்காரம், குன்றிமணிப் பருப்பு இம்மூன்றும் வகைக்கு மேற்படி தகட்டிற்குச் சமனெடை; மூன்றையும் அரைத்து கழுதை லத்திச் சாற்றிற் கரைத்துக் கொள்ளவும். மேற்படி தகட்டை நெருப்பிற் பழுக்கக் காய்ச்சி மேற்படி குழம்பில் தோய்க்க வேண்டும். இவ்விதம், மடக்கிமடக்கி ஏழுதரம் தோய்த்தெடுத்துக் கொள்ளவேண்டும். இப்படிச் செய்வதால் இது தூளாகிவிடும்.

அல்லது, முன் அரைத்த சரக்குகளை 5 பாகமாக்கி ஒரு பாகத்தை மேற்படி தகட்டிற் பூசி ஓட்டில் வைத்து மேலோடு மூடிச் சீலைமண் செய்யாமல் முப்பது பலம் வறட்டியிற் புடமிடவேண்டும். ஆறினபின்பு எடுத்து முன்போல் பூசி முன்போற் புடமிடவும். இவ்விதம் மடக்கி மடக்கி ஐந்து புடம்போட அது நொறுங்கித் தூளாகிப் போய்விடும்.

மேற்கண்ட இரு வகைகளில் எவ்வகையாயேனும் செய்யப் பட்ட தாமிரத்தூள் ஒரு பங்கு, நல்ல தங்கம் ஒரு பங்கு, நல்ல வெள்ளி எட்டுப் பங்கு இவற்றைச் சேர்த்துருக்கி ஓட்டில்வைத்து ஊதியெடுக்க எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

## 16. செம்புக் களங்கு

(பா-எண்-31, பக்கம் 35இல் பார்க்கவும்)

செம்பு 4 பங்கு, வெடியுப்பு 4 பங்கு, சீனக்காரம் 4 பங்கு, குன்றிமணிப் பருப்பு 4 பங்கு, கழுதை லத்தியை இடித்துப் பிழிந்த சாறு செல்லத்தக்க அளவு.

செம்பை புளியிலைக் கனம் தகடாயடித்து வைத்துக்கொள்ள வும்.

மற்ற மூன்று சரக்குகளையும் வெண்ணெய்போல பொடித்து மேற்படி கழுதை லத்திச் சாற்றிற் குழைத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

தாமிரத் தகட்டைக் கரியோட்டில் வைத்துச் சர உலையில் ஊதி நன்றாகப் பழுத்த சமயத்தில் மேற்படி குழம்பிற்றோய்க்க வேண்டும். ஆறினபின்பு, மறு ஓட்டில் வைத்து முன்போற் பழுக்க ஊதி நன்றாகப் பழுத்த தருணத்தில் முன்போற் றோய்க்கவேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி ஏழுதரம் ஊதி ஊதித் தோய்த்தெடுக்கச் செம்பு கட்டிப்போகும்.

அய அரப்பொடி மேற்படி செம்பிற்குக் காற்பங்கு, வீரம் காற்பங்கு இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் புகைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமமரைத்துச் சட்டியில் வைத்து மேற்சட்டி மூடி ஏழு சீலைமண் செய்துலர்த்தி அடுப்பேற்றிக் கமலாக்கினியாக ஒரு சாமம் எரித்து ஆறின பின்னெடுக்கக் கீழுமேலும் பதங்கித்திருக்கும். இவ்விரண்டையும் சேர்த்துப் புகைநீரை விட்டரைத்து முன்போல் பானையில் வைத்தெரித்தெடுத்துக் கொள்ளவும். இது சிவந்த வண்ணமாயிருக்கும்.

இந்தத் தூளைப் புகைநீர் விட்டு ஒரு சாமமரைத்து மேற்படி செம்புத் தகட்டிற் கவசஞ்செய்து இரவியில் வைத்துலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடு மூடிச் சீலைமண் செய்து உலர்த்திக் கெசபுடம் போடவும். ஆறின பின்னெடுக்கச் செம்பானது கட்டுப்பட்டுக் களங்காகியிருக்கும்.

நல்ல வெள்ளி 8 பங்கு, மேற்படி களங்கு 1 பங்கு, தங்கம் ஒரு பங்கு இம்மூன்றையும் சேர்த்து உருக்கியெடுக்க ஆறு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

## 17. அயக் களங்கு

(பா-எண்-66, பக்கம் 65இல் பார்க்கவும்)

அய அரப்பொடி ஒரு பங்கு, கெந்தகம் ஒரு பங்கு, இவ்விரண்டையும் சேர்த்து ஒருமணி நேரம் அரைத்துக் குகையிலிட்டுக் குகை வாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்துலர்த்தி உலையிலிட்டுக் குகையமுக ஊதி எடுக்க, அயம் கெட்டியாயிருக்கும்.

இதனையெடுத்து நொறுக்கி இதற்குக் காற் பங்கெடை வெண்காரத்தையும் சேர்த்து மூசையிலிட்டு மூசையமுக வூதியெடுக்க, மணிமணியாக இருக்கும்.

இந்த மணி 1 பங்கு, மிருதார்சிங்கி முக்காற் பங்கு, வீரம் காற்பங்கு இம்மூன்றையும் கல்வத்திலிட்டு இரண்டு சாம நேரம் அரைத்து,எல்லாம் கலந்து வைத்துக்கொள்ளவேண்டும். (இதற்கு மணி சிங்கித் தூளென) நாமிங்கு சொல்வோம்.

உமி நெருப்பின்மீது ஓட்டை வைத்துத் துருசைத் தூள் செய்து போட்டு வறுக்க அது வெள்ளையாகும். இதற்குத் **துருசு வெள்ளையென்று** சொல்வோம்.

மணிசிங்கித் தூளுக்குச் சமனெடை துருசுவெள்ளையைச் சேர்த்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக விட்டுப் பத்துச் சாமமரைத்து வில்லை செய்து உலர்த்தி அதன்மீது ஏழு சுண்ணும்புச்சீலை செய்து உலர்த்திக் கெசபுடம் போடவேண்டும். புடம் ஆறினபின் எடுத்து இருந்த மருந்திற்குக் காலெடை காரங்கூட்டிப் பாகப்படி உருக்கி எடுக்க சிறப்புள்ள செம்பாகும்.

நொறுக்கு வெள்ளி 4 பங்கு, மேற்படி செம்பு ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஓட்டில் வைத்து ஊதியெடுக்கப் பசுமையாயிருக்கும்.

இந்த மட்டம் இரண்டு பங்கு, தங்கம் ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி இரண்டோடு ஊதியெடுக்க எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

இதனை, உப்புக்காவியில் வைத்துப் புடம்போட, அருகுகட்டித் தங்கமிறங்கும்.

## 18. உலோகச் செந்தூரம்

(பா-எண்-92, பக்கம் 97 இல் பார்க்கவும்)

(அ) அயம் 4 பலம் (140 கிராம்), தாமிரம் 4 பலம் இவ்விரண்டையும் சேர்த்துக் குகையிலிட்டுக் குகையமுக ஊதி எடுத்து ஆறினபின் கல்வத்திலிட்டுப் பொடிக்க நொறுங்கித் தூளாகும். இதனைச் செம்மையாகப் பொடித்து அரைத்துத் தூள் செய்து அதனுடன் ஒரு பலம் சாதிலிங்கத்தையும் ஒரு பலம் வெண்காரத்தையும் சேர்த்தரைத்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து வில்லை செய்து வெய்யிலில் வைத்துலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடு மூடி ஐந்து சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டாறின பின்னெடுக்கக் கருநிறமுள்ள தூளாகியிருக்கும்.

இந்தத் தூளிற்குக் காற்பங்கெடை வெண்காரத்தைச் சேர்த்துக் குகையமுக நன்ருக உருக்கியெடுக்க வேண்டும். ஒரே தடவையில் செம்பாகிவிடாதாகையால் ஐந்து அல்லது, ஆறு தடவைகள் மடக்கி மடக்கி உருக்கியெடுக்க நேரிடும். தைரியத்தை விடாமல் மடக்கி மடக்கி ஊதியெடுக்கச் செம்பாகும். இந்தச் செம்பானது மணிமணியாயிருக்கு மாகையால், அதனை ஓட்டில் வைத்துச் சர

உலையால் நன்றாக ஊதியெடுக்கச் சூரியப் பிரகாசமுள்ள செம் பாகும்.

இந்தச் செம்பு ஒரு பங்கு, நல்ல வெள்ளி பத்து பங்கு, இவ் விரண்டையும் சேர்த்துருக்கி இதற்குச் சமனெடை தங்கம் சேர்த் துருக்க, எட்டு மாற்றுள்ள, இரசவாதப் பொன்னாகும்.

(ஆ) மேற்படி செம்பு 4 பங்கு, தங்கம் 1 பங்கு இவ்விரண்டை யும் சேர்த்துருக்கித் தகடாகச் செய்து கொள்ளவேண்டும்.

மனோசிலை, நெல்லிக்காய்க் கெந்தகம், இரசம், வீரம் இந் நான்கும் வகைக்கு மேற்படி செம்பிற்கு அரைப்பங்கு.

முன்னர், இரசத்தையும் கெந்தகத்தையும் தொந்தித்துக் கறுப் பாகிறவரையில் அரைத்து மற்றச் சரக்குகளையும் சேர்த்து எருக் கம்பாலைச் சிறுகச்சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து மேற்படி தகட்டிற்குப் பூசி ஓட்டில் வைத்து மேலோடு மூடி மூன்று சீலைமண் செய்து உலரவைத்துக் கவசத்தின் ஆறு பங்கெடை வறட்டியிற் புடமிட்டெடுக்கத் தகடானது நொறுங்கிக் கறுப்பாயிருக்கும்.

இதனைத் தூள்செய்து இதற்குக் காற்பங்கெடை வெண்காரம் (இதனைப் பொரித்துக் கொள்ளவும்.) காற்பங்கெடை மனோசிலை, காற்பங்கெடை இரசம், இவை எல்லாவற்றையும் கல்வத்தி லிட்டு, செங்கீரைச் சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து நான்கு சாமம் அரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டாறின பின்னெடுக்க, சிவந்த செந்தூரமாகி இருக்கும்.

செம்பையுருக்கி உருக்குமுகத்தில் தகுந்த அளவு கொடுக்கச் செம்பானது கட்டிப்போகும். இந்தச் செம்பு மூன்று பங்கு. நல்ல வெள்ளி ஏழு பங்கு. இவ்விரண்டையும் சேர்த்துருக்க, நல்ல இரசவாதப் பொன்னாகும்.

இந்தச் செந்தூரத்தில் இரண்டு குன்றிமணி யெடையைத் தேன், நெய் முதலிய துணைமருந்துகளில் கலந்துண்ண, எண்பது வாதம், பதினெட்டுச் சூலைகள், மகோதரங்கள், இடப்பாட்டீரல் நோய் (பிலீகை) முதலியவைகள் தீரும். நரை திரைமாறி இளமை யுண்டாகும்.

### 19. சத்துவங்கச் செந்தூரம்

(பா-எண்-94, பக்கம் 100இல் பார்க்கவும்)

கருவங்கம் 4 பலம் (140 கிராம்), இதனை மெல்லிய தகடாக அடித்துக் கத்தரித்துக் கல்வத்திலிட்டுச் சோற்றுக்கற்றாழைப்

பாலைச் சிறுகச்சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் 10 பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுக்கவும்.

இதனைக் கல்வத்திலிட்டு முன் போலவே முன் பாலை விட்டு அரைத்து முன்போற் புடம்போடவும். இவ்விதம், மடக்கி மடக்கி ஐந்து புடமிட்டால், சத்தில்லாத செந்தூரமாகும்.

குறிப்பு:—வங்கத்தைத் தனியே அரைத்துப்போட்டால் செந்தூரமாகாமல் உருகிப்போகும். ஆனால், வங்கத்தை உருக்கி அதற்குச் சமனெடை தாளகத்தைப் பொடித்துச் சுருக்குக் கொடுத்து வெட்டையாக்கிப் பிறகு மேற்கண்ட முறைப்படிச் செய்யச் செந்தூரமாகிறது. இப்படிச் செய்வதுதான் நமது அனுபவம்.

நாலாங்காய்ச்சல் வெடியுப்பு, சீனக்காரம், கல்லுப்பு இவை மூன்றும் சமனெடை. இம்மூன்றையும் இரும்புச் சட்டியிலிட்டு அடுப்பில் வைத்தெரிக்க உருகிக் கெட்டியாகிவிடும். இதனைத் தூள் செய்து மேற்படி வங்கச் செந்தூரத்திற்குச் சம பாகமாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டி லிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்துலர்த்தி கெசபுடமிடவும். குளிர ஆறின பின்னெடுக்க, முருக்கம் பூப்போன்ற செந்தூரமாகியிருக்கும்.

நூறு பங்கு செம்பையுருக்கி ஒரு பங்கு மேற்படி செந்தூரத்தைக் கொடுக்கச் செம்பு கட்டிப்போகும்.

வெள்ளி ஏழு பங்கு, கட்டின செம்பு மூன்று பங்கு, தங்கம் ஒரு பங்கு இம்மூன்றையும் சேர்த்துருக்க உள்ளது போலாகும்.

இந்தச் செந்தூரத்தில் 2 குன்றிமணி யெடையைத் தேனில் அனுபானித்துண்ண, எண்பது வாதங்கள், இருபத்தொரு மேகங்கள் முதலிய உடலிலுள்ள நோய்களெல்லாம் தீர்ந்து, நரைதிரை மாறிக் காயசித்தியுண்டாகும்.

## 20. வங்கச் சுண்ணம்

(பா-எண்-79, பக்கம் 77 இல் பார்க்கவும்)

வங்கம் 1 பங்கு, தாளகம் 1 பங்கு, வங்கத்தையுருக்கி உருக்கு முகத்தில் தாளகத்தைப் பொடித்துச் சிறுகச் சிறுகச் சுருக்குக்

கொடுக்க வங்கமெல்லாம் நொறுங்கித் தூளாகிவிடும். அதனை யெடுத்துக் கல்வத்திலிட்டரைக்க, மெழுகைப்போல நைப்புள்ள தாகியிருக்கும். இதற்கு **வங்க மெழுகு** எனப் பெயர்.

**கோழிமுட்டையோடு** 1 பங்கு, கற்சுண்ணம் பத்துப் பங்கு, கற்சுண்ணத்தைத் தண்ணீரிற் கரைத்து அண்டவோட்டை அதிற் போட்டு நன்றாகக் கொதிக்க வைத்துக் கீழிறக்கி அண்டவோட்டி லுள்ள உட்சவ்வு முதலானவைகளைத் தூய்மை செய்து வெய்யிலில் உலர்த்திக்கொள்ள எண்ணெய் முதலியவை நீங்கித் தூய்மையாகி விடும்.

பிறகு, மேற்படி வங்க மெழுகு ஒரு பங்கு, மேற் சொன்னபடி தூய்மை செய்த அண்டவோடு 1 பங்கு, இவ்விரண்டையும் கல் வத்திலிட்டுப் பொடித்து முட்டை வெள்ளையம்பிலியைச் சிறுகச் சிறுக விட்டு 2 சாமநேரம் அரைத்துக் குகையிலிட்டுக் குகை வாய்க்குச் சீலைமண் செய்துலர்த்தி உலையில் வைத்து மூசை நன் றாகச் சிவக்கும்படியாக ஊதி எடுத்து ஆறவிட்டு மருந்தையெடுத் துக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போல் முட்டை வெள்ளையம் பிலியைச் சிறுகச் சிறுக வார்த்து முன்போலரைத்து முன்போல் புடமிடவும். இவ்விதம், மடக்கி மடக்கி ஐந்தாறு புடம்போட்டால் கடுங்காரச் சுண்ணமாகிவிடும்.

இந்தச் சுண்ணத்தை வெண்கருவை விட்டுக் குழைத்து தாமி ரத்துட்டின்மீது பூசிப் புடமிட வேண்டும். இவ்விதம், மடக்கி மடக்கி மூன்று தடவை புடமிட்டால் செம்பு கட்டுப்பட்டுப்போகும்

இந்தச் செம்பு 1 பங்கு, வெள்ளி 8 பங்கு, தங்கம் 1 பங்கு, இம்மூன்றையும் சேர்த்துருக்க, ஆறு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

இந்தச் சுண்ணத்தில் ஒரு குன்றிமணி எடையைத் **தேனில்** குழைத்துண்ணக் காசநோய் முதலிய நோய்கள் தீரும்.

## 21. சாரக்கட்டு

கிளிஞ்சில் சுண்ணும்பு 5 பலம் (175 கிராம்), இதை ஒரு சட்டி யில் பரப்பி அதன்மேல் நாலுபலம் கறியுப்பைப் பொடித்துப் பரப்பி, அதன்மேல் மூன்றுபலம் வெடியுப்பைப் பொடித்துப் பரப்பி, அதன்மேல் இரண்டு பலம் சீனக்காரத்தைப் பொடித்துப் பரப்பி, அதன்மேல் இரண்டுபலம் நவச்சாரக் கட்டியை வைத்து, அதன்மேல் இரண்டுபலம் சீனக்காரத்தைப் பொடித்துப்போட்டு அதன்மேல் மூன்றுபலம் வெடியுப்பைப் பொடித்துப் பரப்பி,

அதன்மேல் நாலுபலம் கறியுப்பைப் பொடித்துப் பரப்பி, அதன் மேல் ஐந்துபலம் கிளிஞ்சில் சுண்ணம்பைப்போட்டுப் பானைவாயை மண்தாலத்தால் மூடி, ஏழு சீலைமண் செய்து உலர்த்தி, அடுப்பின் மீது ஏற்றிக் கயலாக்கினியாக இரண்டு சாமம் எரித்து ஆறவிட்டு எடுக்க, சாரமானது கட்டுப்பட்டுப் போகும்.

இதில் கொஞ்சம் நெருப்பின்மீது போட்டால் புகையாமலிருந் தால் பதம். புகைந்தால் முன்போல் மற்றொரு தடவையும் எரித்து எடுத்துக்கொள்ளவும். அப்போது சோதித்துச் சோதனைக்கு ஒத் திருந்தால் உத்தமம். அப்படியில்லாவிட்டால் மூன்றாந் தடவையும் எரித்தெடுக்க, நெருப்பிற்குப் புகையாமல் கட்டுப்பட்டுப்போகும்.

நாகம் 5 வராகனெடை ($17\frac{1}{2}$ கிராம்), மேற்படி கட்டினசாரம் 1 வராகனெடை, நாகத்தையுருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி சாரத்தைக் கொடுக்க நாகமானது புகையடங்கிக் கட்டிப்போகும்.

தாமிரம் 1 பலம் (35 கிராம்), சீனைக்காரம் 1 பலம், வெடி யுப்பு 1 பலம், கழுதைலத்திச்சாறு செல்லத்தக்க அளவு.

தாமிரத்தைத் தகடாக அடித்துச் சர உலையில் வைத்து ஊதிப் பழுக்கச் சிவந்தபின்பு, மேற்படி சீனைக்காரத்தையும், வெடி யுப்பையும் பொடித்து, கழுதை லத்திச்சாற்றில் குழைத்து அதில் முன் பழுக்கக் காய்ந்திருக்கிற தகட்டைத் தோய்க்கவேண்டும். பிறகு, ஆறினபின்பு எடுத்து முன்போல் தோய்க்கவேண்டும். இவ் விதம் மடக்கி மடக்கி இருபது தடவை ஊதியூதித் தோய்த்துத் தோய்த்து எடுக்க, செம்பானது ஊரலற்று கட்டாகிவிடும்.

இந்தக் கட்டு 10 பங்கு, கட்டின நாகம் 1 பங்கு, தாமிரத்தை உருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி நாகத்தைக் கொடுத்து எடுத்து ஆறினபின்பு அதற்குச் சமனெடை வெள்ளியையும், இரண்டு பங்கெடை தங்கத்தையும் சேர்த்துருக்கி எடுக்க, பத்து மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

மேற்படி கட்டின நவச்சாரத்தை செயநீராகச் செய்தும் வேறு விதமாகப் பிரயோகித்தும், வெள்ளைப் பாடாணம், கௌரிப் பாடா ணம், வீரம் முதலியவைகளையும் கட்டிக் கொள்ளலாம். இதன் முறை முதலியவைகள் நமது **சுகாதார போதினி** பத்திரிகையில் வகை விவரமாக எழுதியிருக்கிறோம்.

## 22. சாரச் சுண்ணம்

பச்சை நவச்சாரம் 10 பலம் (350 கிராம்), சுண்ணம்பு பத்துப் பலம் இவ்விரண்டையும் சேர்த்துப் பொடித்து ஒரு பானையில்

போட்டு பானைவாய் பொருந்தும்படியாக ஒரு சட்டியைக் கவிழ்த்து ஏழு சீலைமண் செய்து உலர்த்தி அடுப்பேற்றிக் கமலாக்கினியாக மூன்று சாமம் எரித்து ஆறவிட்டு எடுக்க, சாரமானது மேலே பதங்கித்திருக்கும், பதங்கத்தை எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

சீனக்காரத்தை நமது இரசவாத சிந்தாமணி முதற் பாகத்தில் சொல்லியிருக்கிறபடி கரியில் வைத்து ஊதி சுண்ணமாக்கிக் கொள்ளவேண்டும்.

மேற்படி நவச்சாரப் பதங்கம் ஒரு பங்கு, சீனச் சுண்ணம் அரைப்பங்கு இரண்டையும் சேர்த்துத் தனியே அரைத்துக் கொள்ளவும்.

முட்டை வெள்ளையம்பிலி, எருக்கம்பால் இவ்விரண்டையும் சமமாகச் சேர்த்து மூன்றுநாள் வைக்கப் பாலானது முறிந்து தெளிந்துப்போகும். இந்தத் தெளிவை செல்லத்தக்க அளவு எடுத்துக் கொள்ளவும்.

முன் சேர்த்து வைத்திருக்கிற இரண்டு சரக்குகளையும் கல் வத்திலிட்டு மேற்படி தெளிவைச் சிறுகச்சிறுக வார்த்து ஒருசாமம் அரைத்து ஒரு பங்கு தாளகக்கட்டிக்கு கவசஞ் செய்துலர்த்திப் பத்துப்பலம் கிளிஞ்சில் நீரை ஒரு பானையில் போட்டு, அதன் மேல் முன் தாளகக் கவசத்தை வைத்து, அதன்மேல் பத்துப்பலம் கிளிஞ்சில்நீரைப் போட்டுப் பானைவாய்க்கு மண் தாலமிட்டு ஏழு சீலைமண் செய்துலர்த்தி அடுப்பேற்றி இரண்டு சாமம் எரித்து எடுக்க தாளகமானது நீறி (பற்பமாகி) இருக்கும்.

இந்தத் தாளக நீற்றை செம்பையுருக்கி உருக்குமுகத்தில் கொடுக்கச் செம்பானது கட்டித் தூய்மையாகிவிடும்.

அயச் செம்பு 4 பங்கு, மேற்படி செம்பு 1 பங்கு இவ்விரண்டை-யும் சேர்த்துருக்கித் தகடடித்துக் கொள்ளவேண்டும்.

மேற்படி தகட்டெடை நெல்லிக்காய்க்கெந்தகம், வீரம் ¼ எடை இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு உமிழ்நீரை விட்டு ஒரு சாமமரைத்து ஐந்து பங்காக்கி, ஒரு பங்கை மேற்படி தகட்டில் பூசியுலர்த்திப் புடமிடவேண்டும். ஆறின பின்னெடுத்து முன் மருந்தைப் பூசி முன்போல் புடமிடவேண்டும். இவ்விதம் ஐந்து புடமிட்டெடுத்துக் கொள்க.

இந்தச் செம்பு 8 பங்கு, தங்கம் 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்க, எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

## 23. இரசக் கட்டு

(அ) வங்கச் சுண்ணம் 1 பங்கு, (97-ம் எண்ணில் பார்க்கவும்) கட்டின வீரம் 1 பங்கு, (98-ம் எண்ணில் சொல்லியிருக்கிற சாரக் கட்டினுல், வீரத்தைக் கட்டிக்கொள்ளவும்). இவ்விரண்டையும் சேர்த்துப் பொடித்து உமிழ்நீரை விட்டு 1 சாமமரைத்து, ஒரு பங்கு துருசுக் கட்டியின்மீது கவசித்து வெய்யிலிலுலர்த்தி அகலில் வைத்து மேலகல்மூடி 5 சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் மூன்று பங்கெடை வறட்டியிற் புடமிட்டாறினபின் எடுக்கத் துருசுச் சுண்ணமாகியிருக்கும்.

இந்தத் துருசுச் சுண்ணத்தால் இரசங் கட்டுப்படும். இது பலவகைப்படுமாகையால், சாவகாசங் கிடைக்கும்போது நமது **சுகாதார போதினியில்** எழுதி வருவோம்.

(ஆ) சீனச் சுண்ணம் 2 பங்கு (இதன் முறை நமது **இரசவாத சிந்தாமணி** முதற்பாகத்தில் வகை விபரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.) இதனை உமிழ்நீரால் குழைத்துச் சாரத்திற்குக் கவசித்துலர்த்தி சுண்ணும்பிற்குள் வைத்தெரிக்க, சாரங் கட்டுப்படும். இதனை நாகத்திற் கொடுக்க, நாகங் கட்டுப்படும். இந்த நாகத்திற்குச் சமன் தங்கஞ்சேர்த்து செந்தூரஞ் செய்ய, எல்லா நோய்களுக்குமாகும்; இரசவாதத்திற்குமாகும்.

(இ) அவயம் வைத்த கோழிமுட்டைத் தோல் 4 பலம் (140 கிராம்), உவர்மண் 4 பலம், கிளிஞ்சில் சுண்ணும்பு 4 பலம் இவ்விரண்டையும் ½ படி தண்ணீரில் கரைத்து, அதில் முட்டைத் தோலைப் போட்டுக் காய்ச்சிக் கழுவியெடுக்க, எண்ணை நீங்கித் தூய்மையாகும்.

இந்த அண்ட ஓடு 1 பங்கு, வங்கத்தூள் 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்தரைத்துமூசையிலிட்டுச் சில்லிட்டுச் சீலைமண்செய்து உலையில் வைத்தூதி, மூசையுருகின பின்னெடுத்து ஆறவிட்டெடுக்கச் சுண்ணமாகியிருக்கும்.

இந்தச் சுண்ணத்தை உமிழ்நீரால் குழைத்து செம்புத் தகட்டில் கவசஞ் செய்து ஓட்டிவிட்டு மேலோடு மூடி கவசஞ்செய்து புடம்போடவும். ஆறின பின்னெடுத்து முன்போல் வங்கச் சுண்ணத்தைப் பூசி முன்போல் புடம்போடவும். இவ்விதம், மடக்கி மடக்கி மூன்று புடமிட்டெடுக்க, களிம்பற்றுத் தூய்மையாகும்.

வெள்ளி 8, மேற்படி செம்பு 2, தங்கம் 1, இம்மூன்றையும் சேர்த்துருக்க, ஏழு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

## 24. வங்க அயச் செம்பு

தூய்மை செய்த அயப்பொடி, செம்பு, காரீயம் இம்மூன்றும் வகைக்கு 1 பலம் (35 கிராம்).

இம் மூன்றையும் குகையிலிட்டுருக்கி நன்ருயுருகின பின் எடுத்து ஆறவிட்டெடுத்து சர உலையில் வைத்து வெண்காரங் கொடுத்தூதி, வங்கத்தைப்போக்கி எடுத்துக்கொள்க. செம்பு சுத்தியாகியிருக்கும்.

இந்தச் செம்பிற்குச் சமனெடை தங்கத்தைச் சேர்த்துருக்கித் தகடடித்துக் கொள்க.

வாலைரசம் 1 பலம், கெந்தகம் 2 பலம் இவ்விரண்டையும் தொந்தித்தரைத்து நன்ருகக் கறுத்த பின்பு, உமிழ்நீரைவிட்டு ஒரு சாமநேரம் அரைத்து மூன்று பங்காகச் செய்து, ஒரு பங்கைத் தகட்டின்மீது பூசியுலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடு மூடி ஐந்து சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தினெடைக்குப் பத்துப் பங்கு வறட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுத்து முன் மருந்தில் மற்ருெரு பாகத்தைப் பூசி முன்போல் புடமிடவும். இவ்விதமே மூன்ரும் பங்கையும் புடமிட்டெடுத்தால் மருந்து கறுத்த வண்ணமுள்ளதாக இருக்கும்.

இவ்விதம், புடம் போட்டெடுத்த மருந்தினெடைக்குக் காற்பங்கெடை மிருதார்சிங்கியைச் சேர்த்து உமிழ்நீரைவிட்டு 2 சாமநேரம் அரைத்து வில்லை செய்துலர்த்திக் கவசத்தின் அரைப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டெடுத்த, காற்பங்கெடை வெண்காரங்கூட்டி உருக்கி எடுத்து இரண்டோடு ஊதியெடுக்கத் தங்கச் செம்பாகும்.

வெள்ளி 1 பங்கு, மேற்படி தங்கச் செம்பு 4 பங்கு இவ்விரண்டையும் பாகப்படி சேர்த்துருக்க, இரசவாதப் பொன்னுகும்.

## 25. (அ) இலிங்க அயச் செம்பு

கருவங்கம், அய அரப்பொடி, செம்பு அரப்பொடி இம்மூன்றும் வகைக்கு 1 பலம், இம்மூன்றையும குகையிலிட்டு நன்ருயூதி உருக்கி எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து, அதனுடன் ஒரு பலம் இலிங்கத்தைச் சேர்த்துப் பொடித்து, எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடு மூடி மூன்று சீலைமண் செய்துலர்த்தி கவசத்தின் நாலு பங்கெடை வறட்டியில் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் காற்பங்கெடை வெண்காரத்தைச் சேர்த்

நுருக்கி எடுத்து சர உலேயில் வைத்து ஊதியெடுக்க களங்கமற்ற செம்பாகும்.

இந்தச் செம்பு நான்கு பங்கு, தங்கம் ஒரு பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கித் தகடடித்து வைத்துக் கொள்க.

அரிதாரம், கெந்தகம், வீரம், இரசம் இந்த நான்கும் வகைக்கு மேற்படி செம்பினெடைக்குக் காற்பங்கு, முதலில் கெந்தகத்தையும், இரசத்தையும் தொந்தித்தரைத்துப் பிறகு மற்றிரண்டு சரக்குகளேயும் சேர்த்துப் பொடித்து எருக்கம்பாலேச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து மேற்படி தகட்டில் பூசியுலர்த்தி, ஓட்டில் வைத்து மேலோடு மூடி மூன்று சீலேமண் செய்துலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறின பின்னெடுக்க நொறுங்கி கரியைப் போலிருக்கும்.

வெள்ளி 1 பலம், மேற்படி பொடி 2 பலம் இவ்விரண்டையும் சேர்த்துருககி ஓட்டில் வைத்து ஊதித் தூய்மைப்படுத்தி, எடைக்கெடை தங்கம் சேர்க்க, நல்ல இரசவாதப் பொன்னுகும்.

### 26. கெந்திதாரச் செந்தூரம்

நெல்லிக்காய்க் கெந்தகம் 1 பலம், வீரம் $\frac{1}{4}$ பலம் இவ்விரண்டையும் கலுவத்தில் பொடித்து, வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லே செய்துலர்த்தி ஓட்டிலிட்டு, மேலோடு மூடி ஏழு சீலேமண் செய்துலர்த்தி ஒரு குழியில் நாலங்குல மணலேப் பரப்பி, அதன்மேல் கவசத்தை வைத்து, அதன்மேல் நாலங்குலம் மணலேக் கொட்டிப் பரப்பிக் கவசத்தின் சம பங்கெடை வறட்டியில் புடமிட்டாறினபின் எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போல் வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச் சிறுக விட்டு முன்போலரைத்து, முன்போல் புடமிட்டு ஆறின பின்னெடுக்கக் கெந்தியானது வெளுத்துப் போயிருக்கும்.

இதனைக் கல்வத்திலிட்டு இதனுடன் ஒரு பலம் கெந்தகத்தையும் தூய்மைசெய்த நாலுபலம் அரிதாரத்தையும் பொடித்து சேர்த்து, எருக்கம்பாலேச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமம் அரைத்து வில்லே செய்து வெய்யிலிலுலர்த்தி வைத்துக்கொள்க.

கிளிஞ்சில் சுண்ணும்பு 1 படி, வெண்காரம் 4 பலம், நவச்சாரம் 4 பலம் இவ்விரண்டையும் பொடித்து வைத்துக்கொள்க. அரைப்படிச் சுண்ணும்பை ஒரு பானையில் பரப்பி, அதன்மேல் இரண்டு பலம் வெண்காரப் பொடியைப் பரப்பி, அதன்மேல்

இரண்டு பலம் நவச்சாரப் பொடியைப் பரப்பி, அதன்மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற வில்லையை வைத்து, அதன்மேல் இரண்டு பலம் நவச்சாரப் பொடியைப் பாப்பி, அதன்மேல் இரண்டு பலம் வெண்காரப் பொடியைப் பரப்பி, அதன்மேல் அரைப்படி சுண்ணும்பு நீற்றைக் கொட்டி அழுத்திவிட்டு, பானை வாயை மண் தாலத்தால் மூடி மூன்று சீலைமண் செய்து, அடுப் பேற்றிக் கமலாக்கினியாக 2 சாமம் (6 மணி) எரித்து ஆறவிட் டெடுக்க, செந்தூரமாகி இருக்கும்.

செம்பு 2 பங்கு, மேற்படி செந்தூரம் 1 பங்கு, செம்பையுருக்கி, உருக்குமுகத்தில் கொடுத்து ஆறினபின் எடுத்துச் சர உலையில் வைத்தூதி எடுக்க, செம்பு தூய்மையாகிவிடும்.

வெள்ளி 8, மேற்படி செம்பு 2, இரண்டையும் சேர்த்துருக்கி ஊதித் தூய்மை செய்து, சமனெடை தங்கத்தைச் சேர்த்துருக்க இரசவாதப் பொன்னுகும்.

மேற்படி செந்தூரத்தில் ஒரு குன்றிமணி யெடையைத்தேனில் அல்லது, நெய்யில் கலந்து உட்கொண்டுவர சயம், காசம், எலிக் கடி ஈளை, மேக வகைகள், குன்ம வகைகள் (வயிற்றுப்புண்), வாத நோய்கள், சூலை நோய்கள், கிராணி வகைகள் (கழிச்சல்), கன்னப் புற்று, பிடிப்பு நோய் ஆகியவைகள் தீரும்.

## 27. அயச்செம்பு

தூய்மை செய்த அய அரப்பொடி, தாமிர அரப்பொடி, நெல்லிக்காய்க்கெந்தகம், வீரம், வெண்காரம், இவை வகைக்கு 1 பலம் இவைகளைக் கல்வத்திலிட்டுப் பொடித்து எலுமிச்சம் பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து 2 சாமமரைத்து வில்லை செய் துலர்த்திக் கெசபுடமிட்டாறின பின்னெடுத்து ஒருபலம் கருவங்கப் பொடியைச் சேர்த்துப் பழச்சாற்றைவிட்டு 2 சாம நேரமரைத்து வில்லை செய்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடு மூடி, 5 சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் 20 பங்கெடை வறட்டியில் புடமிட் டாறின பின்னெடுத்து, காற் பங்கெடை வெண்காரத்தைப் பொரித்துச் சேர்த்து உருக்கியெடுக்க, மணிமணியாக இறங்கும். இவைகளை எடுத்து சர உலையில் வைத்து ஊதி தூய்மைப்படுத்த களங்கமற்ற செம்பாகும்.

வெள்ளி 8, மேற்படி செம்பு 2, இவ்விரண்டையும் சேர்த் துருக்கி, ஊதியெடுத்து, எடைக்கெடை தங்கத்தைச் சேர்க்க, உள்ளதுபோல் இரசவாதப் பொன்னுகும்.

## 28. நொறுக்கு வெள்ளி

நல்ல வெள்ளி 1 பங்கு கீழ்க்கண்டபடி தூய்மை செய்த செம்பு 1 பங்கு, நெல்லிக்காய்க்கெந்தகம் 2 பங்கு நெல்லிக்காய்க்கெந்தகத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து வைத்துக் கொள்ளவும்.

வெள்ளியையும் செம்பையும் சேர்த்துருக்கி, உருக்குமுகத்தில் கெந்தகத்தைச் சிறுகச் சிறுகச் சுருக்குக் கொடுத்துக் கெந்தகமெல்லாம் சென்றபின்பு எடுக்க வெள்ளியானது கருப்பு நிறமுள்ள தாய் வெட்டையாகியிருக்கும். இதனை ஓட்டில் வைத்து நன்ருய் ஊதியெடுத்து இதற்குச் சமனெடை கருவங்கத்தைச் சேர்த்துருக்கி ஓட்டில் வைத்து வங்கம்போக ஊதியெடுத்துக் கொள்வதே நொறுக்கு வெள்ளியாம். இவ்விதம், செய்யப்பட்ட வெள்ளியைத்தான் முன் சொல்லியிருக்கிற பாகங்களில் நொறுக்கு வெள்ளி என்னுமிடத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

(அ) செம்புத் தகடு 5 வராகனெடை, நெல்லிக்காய்க்கெந்தகம் 5 வராகனெடை, கெந்தகத்தைப் பொடித்துச் செம்புத் தகட்டுக்குக் கீழ்மேலிட்டு ஓட்டில் வைத்துச் சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் எட்டுப் பங்கெடை வறட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுத்து மூசையிலிட்டுருக்கச் செம்பாகும். பிறகு. தகடடித்து முன் போல் கெந்தகத்தைக் கீழ்மேலிட்டுப் புடத்தைப் போட்டுருக்கி எடுக்கவும். இவ்விதம், மடக்கி மடக்கி 35 தடவைகள் செய்து உருக்கியெடுத்து முடிவாக ஓட்டில் வைத்துச் செம்மையாக ஊதி எடுக்க, களிம்பற்றுத் தூய்மையான செம்பாகும்.

மேற்படி நொறுக்கு வெள்ளி 1 பங்கு, மேற்படி கெந்திச் செம்பு 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஊதியெடுத்துப் பிறகு ஓமத்தில் வைத்து ஊதி எடுத்து, எடைக்கெடை தங்கம் சேர்க்க, இரசவாதப் பொன்னகும். புடமிட்டால் தங்கமிறங்கும்.

(ஆ) மேற்படி நொறுக்கு வெள்ளி 1 பங்கு, மேற்படி செம்பு 1 பங்கு இவ்விரண்டையும் சேர்த்து ஊதி இரண்டிற்கொன்று தங்கம் சேர்த்து உருக்கி இரண்டோடு ஊதியெடுக்க இரசவாதப் பொன்னகும்.

வெள்ளி 8, மேற்படி செம்பு 4, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஊதியெடுத்து 4 பங்கு தங்கத்தைச் சேர்த்து இரண்டோடு ஊதியெடுக்க, ஏழு மாற்றுள்ள இரசவாதப் பொன்னகும்.

குறிப்பு:—இந்நூலில் அனேக பாகங்களுடன் நொறுக்கு வெள்ளியைச் சேர்க்கும்படியாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகை

யால், நமக்கு அனுபவச்சித்தமான ஒரு முறையை நமது ஆதர வாளர்கள் உபயோகத்திற்காக இங்கெழுதுவாம். அம்முறை பின் வருகிற விதமாம்.

### நொறுக்கு வெள்ளி (வேறு)

நெல்லிக்காய்க்கெந்தகம் 4 பலம் (140 கிராம்), வெடியுப்பு 8 பலம் இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்து, ஐவிரலி அல்லது பாம்புக்கோவையென்னும் இலேயின் சாற்றைவிட்டு 4 சாமமரைத்துஉலர்த்திப் பொடித்துப் பீங்கான் குப்பியில் எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். பின்பு, நல்லவெள்ளி 1 பங்கு, தூய் மையான தாமிரம் 1 பங்கு, மேற்படி பொடி பங்கு 2, முன்னிரண்டு உலோகங்களேயும் சேர்த்துருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி பொடியைச் சிறுகச் சிறுகச் சுருக்கிட்டு, பொடியெல்லாம் சென்ற பின்பு நன்ருயுருக்கிக் கோலாடியெடுத்து, ஆறவைக்கவும். குளிர ஆறினபின்பு எடுத்தால் கருமையான கட்டியாயிருக்கும். அதனே உரைத்தால் வெள்ளியானது வண்ணமேறித் தனியாயிருக்கும்.

இம்முறைப்படியும் செய்து முன் பாகங்களிற் சொல்லியிருக் கிறபடி சேர்த்துக் கொள்ளலாம்.

விண்ணப்பம்:—சகோதரர்களே! இந்நூலில் சொல்லப்பட் டிருக்கும் வைத்திய முறைகள் உயர்ந்த குணமுள்ளவைகளெனி னும் இதில் சொல்லப்பட்டிருக்கும் இரசவாத முறைகள் மிகச் சிறந்தவைகள் என்பது இத்தொழிலில் அனுபவசாலிகளானவர் களுக்குத் தெரிந்த விஷயம். இம்முறைகளெல்லாம் இலகுவாய்க் கிடைக்கக்கூடிய கடைச் சரக்குகளின் சம்பந்தமாயுள்ளவைகளான படியாலும், இவை புத்தி, உத்தி அநுபவம் முதலியவைகளுக்கு ஒத்தவைகளானபடியாலும், இலகுவாகச் செய்யக்கூடியவை களானபடியாலும், இரசவாதத் தொழிலிற்கு இதுவே முதல் நூலென்று சொல்லத் தடையுமுண்டோ. இத்தொழிலில் சிறிது அனுபவமுள்ளவர்கள் ஒருவர் உதவியின்றித் தாம்தாமே செய்துக் கொள்ளக்கூடும். இதிலுள்ள முறைகளுள் பல அனுபவத்திற் சித்தியடையப் பெற்றவைகள். ஆனல், ஒருவர்க்கனுபவமானது மற்றவர்களுக்கவ்வளவு இலகுவாக அனுபவத்தில் வந்துவிடு மெனச் சொல்ல ஏதுவில்லே. ஆகையால், இவை சம்பந்தமான எல்லா விவரங்களேயும் வகை விவரமாக நமது ஆதரவாளர்களுக் கும் மற்றவர்களுக்கும் உபயோகமாகும்படி நமது சுகாதார போதினி யில் எழுதி வருவோம். மேலும், நமது நண்பர்களுள் சிலர் இதி லுள்ள பாகங்களுள் ஒவ்வொன்றையும் ஒன்றன் பின்ஞென்ருகச் செய்து அதன் மர்மங்களேயெல்லாம் மேற்படி பத்திரிகை மூலமாக

வெளியிட உத்தேசித்திருக்கின்றனர். இதனால், இரசவாதம் மெய் அல்லது, பொய் என்னும் சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள ஏதுவாவதுடன், வழிதுறையின்றி வீணாகத் தம்மாயுளையும், சம்பாதித்தப் பொருளையும் அவமே செலவுசெய்து ஏமாந்து போகாமல் தப்பித்துக் கொள்ளவும், வேடதாரிகளான பொய் வாதிகளினின்று தப்பித்துக்கொள்ளவும் பெருத்த ஏதுவாகும். ஆகையால், இத்தொழிலில் பிரியமுள்ளவர்கள் இந்நூலை வாங்குவதுடன் மேற்கண்ட சுகாதார போதினியையும் வாங்கிவருவதால் எல்லாவித நன்மைகளுமுண்டாமென்பதே நமது கோரிக்கையும் முழு நம்பிக்கையுமாம்.

## வாழ்த்து

ஆனைமுகனும் வாழிகாணிளை
யோன்முருகனும் வாழிகாண்
அடுத்துமுருகன் வாழிகாணிவை
யெடுத்தபண்டிதர் வாழிகாண்
கோனுஞ்சிவனும் வாழிகாண்பரா
ஞானநீதி வாழிகாண்
குணமதாய்ச்சூதம் வாழிகாணிதை
யுணர்வாயுண்டவர் வாழிகாண்
ஞானமும்நீதி வாழிகாண்வாத
மானதங்கமும் வாழிகாண்
நலமதான கெந்திவாழி
பெலமாம்வாதி வாழிகாண்
வானப்பொதிகை தனிலுகந்தவர்
ஞானமான வகத்தியர்
வடிவதாக வாழிகாண் பள்ளுத்
திடமாய்ப் படிப்போர் வாழியே.

அகத்தியர் பள்ளு இருநூறு முற்றிற்று.

LC
N75



